# Doota Ghatotkacham

## A Play of Bhasa



TRANSLATED

BY

G. SESHADRI IYER,

*(Tamil Pandit, Government Oriental Manuscripts Library, Madras)*



PUBLISHED BY

Pandit A. GOPALA IYER,

*(Tamil Pandit, National High School, Adyar)*

 1922. [*Price As. 5.*

THE "SWADESAMITRAN" BRANCH PRESS, MADRAS.

உ

கணபதி துணை.

# தூதகடோற்கசம்.

(ஒரு நாடகம்)

இது

சென்னை இராஜாங்கக் கைபெழுத்துப் புத்தகசாலைத்

தமிழ்ப்பண்டிதர்

## கோ. சேஷாத்திரி ஐயர்

மொழிபெயர்த்தது.



பதிப்பாசிரியர்:

பண்டித அ. கோபாலையர்,

*TAMIL PANDIT, NATIONAL HIGH SCHOOL, ADYAR.*

1922.

# PREFACE.

The problem of instruction in schools, with the mother-tongue of the pupil as the medium, is a pressing one; and the complaint that there is a paucity of suitable books for use is chronic. The production of any book written in an easy, flowing and idiomatic style must therefore be hailed with eagerness by the teaching world. And "Doota-Ghatotkacham," a Sanskrit Drama, translated into Tamil, is one such very useful book. This is only the first of a series of dramas to be translated into Tamil That the series, when completed, will meet a badly felt need, goes without saying.

It is widely recognised that the Drama has a great educative value for the young, and that the acting of a play by the children themselves is conducive to a development of their emotions, while at the same time, it offers scope to develop the power of organisation in them Plays which are not over-long and which will not tire the children are sorely needed. The Plays of Bhasa, like "Doota Ghatotkacham" for example, are eminently fitted for our educational purposes. They are simple, they are

within the scope of understanding and expression of young pupils; they do not take more than an hour, or an hour and a half at the utmost to act. Above all, they contain nothing that is vulgar, and are Indian in spirit and environment.

This small book, therefore, will serve a very useful purpose.

NATIONAL HIGH SCHOOL,
ADYAR,
*25th February 1922.*

G. V. SUBBA RAO, M. A.,
*Head Master.*



# முகவுரை.

தூதகடோற்கசம் (அல்லது கடோற்கசன் தூது) என்னும் இவ்வுருவகம் நாடகவகை பத்தினுள் 'அங்கம்' என்பதன்பாற்படும். இதனை வடமொழியில் இயற்றியவர் மிக்க புலமை வாய்ந்தவரும், காளிதாஸ மகாகவிக்கு முற்பட்டவரும், அவரால் பாராட்டப்பெற்றவருமான 'பாஸன்' என்னும் மகா கவி. இவர் சரித்திரத்தைப் பற்றி யாதொன்றும் தெளிவாகப் புலப்படவில்லை. ஆயினும் காளிதாஸனுக்கு முற்பட்டவரென்பதும், நாடகம் இயற்ற வழிகாட்டியா யிருந்தவரென்பதும், மிகப்பிரசித்த ரென்பதும், பலர்க்கும் ஒப்ப முடிந்த விஷயம். இவரியற்றியன பெரும்பாலும் நாடகங்களே. அவைகள் யாவும் தெள்ளிய இனிய நடையில் அமைந்திருக்கின்றன. அவற்றுளெல்லாம் விஷயங்களை நன்கு தெளிவுறுத்தற்கின்றியமையாதன வன்றி அனுவசியமான வாக்கியங்களைக் காணமுடியாது. இவை இவர் புலமையை நன்கு விளக்கும்.

இவரியற்றியனவாகப் * பதின்மூன்று நாடகங்கள் இப்பொழுது திருவனந்தபுரம் ஸமஸ்தானத்தில் அச்சிடப்பட்

---

* (1) ஸ்வப்ன வாஸவதத்தம்
(2) ப்ரதிக்ஞாயௌகந்தராயணம்
(3) பஞ்சராத்ரம்
(4) அவிமாரகம்
(5) பாலசரிதம்
(6) தூதவாக்கியம்
(7) மத்யமவ்யாயோகம்
(8) தூத கடோற்கசம்
(9) கர்ணபாரம்
(10) ஊருபங்கம்
(11) அபிஷேக நாடகம்
(12) சாருதத்தம்
(13) ப்ரதிமா நாடகம்.

டிருக்கின்றன. அவற்றுள் (1) மத்திமவியாயோகம், (2) கர்ணபாரம், (3) தூதவாக்கியம், (4) தூதகடோற்கசம், (5) ஊருபங்கம் என்னும் இவ்வைந்தும் ஸ்ரீமகாபாரத கதையோடு தொடர்புடையன. இவற்றுள் இத்தூதகடோற்கசமென்பது ஸ்ரீமகாபாரத யுத்தத்தில் பதின்மூன்று நாட்போரில் அபிமன்யு வதத்தின் பின், கடோற்கசன் தூது வரையுள்ள கதைப் பகுதியைத் தன்னுட்கொண்டு விளங்குவது. அப்பகுதியின் சுருக்கம்:—

பதின்மூன்றுநாட் போரில் துரியோதனுதியரும் கர்ணனும் துரோணனும் மற்றும் பல அரசரும் சேர்ந்து சக்கரவியூகம் வகுத்து அதனுள் அபிமன்யுவைத் தனியே யிழுத்து வஞ்சக யுத்தஞ் செய்து அவனைக் கொன்றுவிட, அச்சமயம் வேறொரு பக்கத்தில் 'ஸம்சப்தகர்' என்னும் அரசரோடு போர்செய்யச் சென்றிருந்த அருச்சுனன் அவர்களை வென்று திரும்பிவந்து தன் மகன் இறந்த செய்தி கேட்டுத் திடுக்கிட்டுக் கோபங் கொண்டு "நாளை அஸ்தமனத்திற்குள்ளே பழிக்குப் பழி வாங்குவேன்" என்று சபதம் பண்ண, அதனைக் கௌரவருக்கு அறிவித்து வரும்படி அன்றிரவே கண்ணன் கடோற்கசனை அனுப்ப, அவன் அவ்வாறே கௌரவருடைய பாசறைக்குச் சென்று அறிவித்து வந்தான் என்பதாம். இதனாலேயே இவ்வுருவகம் இப்பெயர் பெற்றது.

இக்கதை ஸ்ரீவியாஸபாரதத்தில் காணப்படவில்லை. தமிழ் வில்லிபுத்தூரார் பாரதத்திற் சிறிது மாறுபாட்டுடன் காணப்படுகின்றது. அம்மாறுபாடு யாதெனில்:—அபிமன்யு வதத்தின் பின் ஸ்ரீகண்ணபிரான், இரண்டாமுறை பாசுபதாஸ்திரம் பெறும் பொருட்டு அருச்சுனனை அழைத்துக் கொண்டு கயிலைக்கேக, அச்சமயம் யுதிஷ்டிரன் கடோற்கசனை,

தூதனுப்பினான் என்பதே. இவற்றிற்கு ஆதாரமான முதனூல் யாதோ தெரியவில்லை. எவ்வாறாயினும் இத்தகைய வரலாறொன்று வழங்கிவந்ததென்பது இவற்றால் புலனாகின்றது.

வடமொழியில் சுலோக ரூபமாயிருந்த இந்நாடகத்தைப் பலர்க்கும் பயன்படுமாறு கருதி, சென்னை இராஜாங்கக் கையெழுத்துப் புத்தகசாலை அஸிஸ்டெண்டு லைப்ரேரியனும், (கன்னடம், ஸம்ஸ்கிருதம் என்னும்) உபயபாஷா பண்டிதரும், என் நண்பருமாகிய பிரம்மஸ்ரீ P. சுந்தர சாஸ்திரிகள், தாம் முதலில் கன்னடபாஷையில் மொழிபெயர்த்து வசனரூபமாக இயற்றி, பின்பு தமிழிலும் அவ்வாறே செய்யும்படி அப்புத்தகசாலைத் தமிழ்ப்பண்டிதனும் என் ஜ்யேஷ்ட குமாரனுமாகிய சி. சேஷாத்திரியைத் தூண்ட, அவனும் அதற்கிணங்கி, அப்பெரியார் துணையைக் கொண்டே இதனை யியற்றினான். அதன்பின்னர் நான், இத்தகைய நூல் பலவும் தமிழில் வெளிவரவேண்டுமென்னும் அவாக்கொண்டிருக்கும் எங்கள் கலாசாலைத் தலைமையுபாத்தியாயர் ஸ்ரீமான் G. V. சுப்பராவ் M. A. அவர்களிடம் தெரிவிக்க அப்பெருந்தகையாளரும் மகிழ்ந்து இதனை உடனே அச்சிடவேண்டும் என்று கூறி என்னைத் தூண்டினர். அதனால் இது விரைவில் அச்சிடலாயிற்று. ஆகவே, அவ்விருவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

சிறுவன் இயற்றிய இம் மொழிபெயர்ப்பைப் பெரியார் அனைவரும் தத்தம் சிறார்வாய்ச்சொல் எனக்கொண்டு மகிழ்வார்களாக. இத்தகைய நூல்கள் மேலுமேலும் வெளிவரும்படி ஈசன் அருள்புரிக.

இங்ஙனம்,

நாஷனல் ஹைஸ்கூல்,
அடையாறு.
19—2—1922

அ. கோபாலையன்,
தமிழ்ப்பண்டிதன்.

# நாடக பாத்திரங்கள்.



1. சூத்திரதாரன்
2. தூதன்
3. சயத்திராதன் (சேவகன்)
4. திருதராஷ்டிரன்
5. காந்தாரி (திருதராஷ்டிரன் மனைவி)
6. துச்சளை (திருதராஷ்டிரன் மகள்)
7. துரியோதனன்
8 துச்சாஸனன்
9 சகுனி
10 கடோற்கசன்

உ

கணபதி துணை.

# தூத கடோற்கசம்.

## பிரஸ்தாவனை

கடவுள் வணக்கம் (திரைக்குள்)

பண் - வியாழக் குறிஞ்சி ; நாட்டை ராகம் ; ஆதி தாளம்.

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.—சம்பந்தர்.

(சூத்திரதாரன் பிரவேசம்)

சூத்திர:—(கைகூப்பி வணக்கத்துடன்)

(பண் : இராகம் நவரோஜ், தாளம்-ரூபகம்.)

மூன்று மோர் முறைமெய் மாயையின் மூடி யோடெழு நாடகந்
தோன்றவே நடிக்கின்ற சூத்திர தார னாகத்தொடர் தூயவர்
ஆன்ற யோகியர் தேவ ரெனுமிவர்க் கருணன்மைக ணாடியே
ஏன்று தானம் புரிவோனு மாகிய ஈசனின் றிறமை யாள்வனே.

சபையிலுள்ளார்க்கு ஒரு விக்ஞாபகம்..................
அடா! நான் சபையோர்க்கு விக்ஞாபகஞ் செய்ய வெண்ணி
உவகையோ டிருக்கும் பொழுது அங்கே யாரோ வரோ

சந்தடிசெய்வதாகத் தோற்றுகிறதே! அஃதென்ன வென்று கவனிப்போம்.

(திரைக்குள்) ஐய! ஐய! விக்ஞாபனஞ் செய்யும், விக்ஞாபனஞ் செய்யும்.

சூத்திர:—ஆஹா! அறிந்தேனறிந்தேன். ஸம்சப்தகர் என்னும் அரக்கரை வதைசெய்வதற்காக அருச்சுனன் கண்ணனொருவனையே துணைக்கொண்டு சென்ற சமயத்தில், பீஷ்ம வதத்தினால் சினமிகுந்த † தார்த்தராஷ்டிரர், கர்ணன், சகுனி, சல்லியன், கிருபன், துரோணன், அசுவத்தாமன், பிருகத்திரதன் முதலியவர்களையும் மற்றும் பல அரசரையும் துணைக் கொண்டு ‡ தொம்பியுத்தஞ் செய்து வீரகினால் அபிமன்யுவைக் கொன்றாரல்லவா! ஆஹா! இந்தப் பக்கம் சுபத்திரை புதல்வனான அபிமன்யுவின் அம்புகள் தாக்குதலால் மூர்ச்சையடைந்து பின் உணர்வு பெற்ற அரசர் பலர், தாம் செய்த தீச்செயலை அருச்சுனனறிந்து தம்மோடு போர் செய்தற்கு வரக்கூடுமென்ற பயத்தினால், அவன் சென்ற திக்கைத் திரும்பித் திரும்பிப் பார்த்தவர்களாய் வெருண்டு தத்தம் இருப்பிடஞ் சேர ஓடிக்கொண்டிருக்கிறார்கள்'' (மறைகிறான்.)

(இது பிரஸ்தாவனை.)

† தார்த்தராஷ்டிரர்—திருதராஷ்டிரன் குமாரர்களாகிய துரியோதனன் முதலியோர்.

‡ தொம்பியுத்தம்—ஒருவனுடன் பலர் கைகலந்து செய்யும் அநியாயப் போர்; (இது கன்னடச் சொல்)

# நூல்.

(தூதன் பிரவேசிக்கிறன்.)

தூதன்:—(*அவசரமாகச் சேவகனைப் பார்த்து*) "*காலாள் தேர் குதிரை யானை யென்னும் சதுரங்க சைனியத்தையும் அழித்து, அரசர் கூட்டத்தையும் சிதறச் செய்து, வயதில் இளையவனுயினும் அருச்சுனனைப் போலவே பயங்கரமான சாதனைகளைக் காட்டி விளையாட்டாகக் கௌரவ சைனியத்தை அடக்கி, எங்குந் தானுகி நிறைந்து மதர்த்திருக்கிற சுபத்திரை புதல்வனுன அபிமன்யுவை அரசர் பலர் சேர்ந்து அவன் பிதாமகனுடைய தலையின்மீது ஏற்றினர்" என்று நூறு புதல்வரைப் பெற்று மேலான சம்பந்தங்களை வளர்த்து, ஞான மேம்பாட்டினுல் விநயத்தை யடைந்து, சதாசாரமென்னும் பெரிய கண்ணுடனே ஒளிர்கின்ற திருதராஷ்டிர மகா ராஜனுக்கு விக்ஞாபநஞ் செய்யும், விக்ஞாபநஞ்செய்யும்.* (*மறைகிறன்*).

(திருதராஷ்டிரன், காந்தாரி, துச்சலை, சேவகன் ஆகிய இவர்கள் பிரவேசம்.)

திருத:—*ஆ! இஃதென்ன கேடுகாலம்! நாராசம் போன்ற இச் செய்தியை என் செவியி லேற்றினவன் யார்? எனக்குப் பிரியமென்று நினைத்து இத்தகைய கொடுஞ் சொல்லை யிசைத்தவன் யார்? என் பசுங்குழவியைக் கொன்ற அந்தப் பாவிகளுடைய வமிசம் நிர்*

மூலமாகப் போமென்ற பயமற்று இவ்வார்த்தைகளைச் சொன்னவன் யார்?

காந்தாரி:—மகா ராஜனே! இவ்வண்ணம் புத்திர நாசத்துக்குக் காரணமாகவுள்ள தாயத்தார் போரில், இத்தகைய செயல்களன்றிப் பின்னை யாது நடக்கும்! இத்தகாத செய்கை செய்தவன் யாரென்று தெரியுமோ?

திருத்:—தெரியக்கூடும் அதுவும்.

காந்தாரி:—மகா ராஜனே! எப்பொழுது?

திருத:—காந்தாரி! கேள்:—

(அகவல்)

உயிரெனச் சிறந்தவச் செப்பறு புதல்வனை
யிழந்த துணைவி புழுங்கு மனத்தனும்
அருச்சுனன் நாளைச் செருச்செய வெண்ணி
முருக னனைத்து மருகனைப் பிரிவால்
புண்ணுறு மனத்தனுங் கண்ணினைத் துணைக்கொடு
காண்டீ வக்கையிற் கொண்டன னாகி
உருத்திரன் என்ன வுருத்திவ்
வான்பழிக்குப் பழி வாங்குங் காலை.

காந்தாரி:—ஆ அபிமன்னு! ஆ பௌத்திரா! நீ இத்தகைய அசகாய சூரனும் மகா வீரனு மாயினும், எம்மிடம் சிறு பிள்ளையைப் போல விளையாடிக்கொண்டிருந்தாய். இப்பொழுது எங்கள் துரதிருஷ்டத்தால் இவ்வண்ணம் இடுகாட்டிற்கு வந்தனையோ! ஆ குழந்தாய்! எங்கே சென்றாய்?

துச்சளை:—என் பிறந்த வீட்டிற்கு வதுவான உத்தரைக்குக் கைம்மை யுதவியவன், தன் தேவியர்க்குங் கைம்மையைத் தானே தேடிக்கொண்டவனன்றோ ?

திருத:—அஃதிருக்கட்டும்; அடா! இக் கொடிய வார்த்தையை எனக்குக் கூறியவன் யாரடா?

சேவகன்:—மகா ராஜனே! நான்தான்.

திருத:—நான் என்றால்—யார் ?

சேவ:—மகா ராஜனே! நான சயத்திராதனல்லவா ?

திருத:—சயத்திராத ! அபிமன்யுவைக் கொன்றவன் யார் ? எவனுக்குத் தான் பிழைத்திருப்பதில் நோக்கமில்லை? பாண்டவரெனப்படும் ஐந்து தீக்களுக்கு இரையாகத் தோன்றினவன் எவன்?

சேவ:—மகா ராஜனே! அரசர் பலர் கூடித் தொம்பியுத்தத்தால் அபிமன்யுவை மோசஞ்செய்து கொன்றனர். ஆனால் அவர்களுக்குள் முன்னின்றவன் செயத்திரதனேயாகவேண்டும்.

திருத:—என்ன—எப்படி, செயத்திரதனா ?

சேவ:—அரசர்க்கரசே! வேறென்ன நினைத்தீர்கள் ?

திருத:—ஐயோ ! செயத்திரதன் மாண்டான் !

(துச்சளை அழ ஆரம்பிக்கிறாள்)

திருத:—இங்கே அழுவது யார்?

சேவ:—அரசே! ராஜ குமாரியான துச்சளையல்லவா ?

திருத:—குழந்தாய், துச்சளை! போதும் போதும்; அழ வேண்டாம்: பார்த்தாயா—உன் கணவன் அருச்சுனனுடைய காண்டீவத்தினின்று புறப்படும் பாணங்களுக் கிலக்காகத் தன்னைத்தானே செய்துகொண்டானாத லின், அவனுக்கு நீ சுமங்கிலியாக விருத்தல் உடன் பாடில்லைப் போலும்

துச்சளை:—தந்தையே! ஆனால் எனக்கு உத்தரவு தந்தருள வேண்டும்; விதவையான உத்தரையுடன் நானும் சேரப் போகிறேன்.

திருத:—மகளே! என்ன சொன்னாய் ?

துச்சளை:—தந்தையே! நான் விண்ணப்பஞ் செய்வது, "அம் மா உத்தரை, இத்தருணம் உனக்குக் கிடைத்துள்ள வேடத்தை நானும் அடைகிறேன" என்பதே.

காந்தாரி:—பெண்ணே! வேண்டாம்—அமங்கலச் சொற் கூற வேண்டாம். உன் கணவன் பிழைத்திருக்கின்றானல்லவா?

துச்சளை:—தாயே! அப்படிப்பட்ட அதிருஷ்டம் இனியே தெனக்கு? கண்ணனைத் துணைக்கொண்டுள்ள தனஞ் சயனுக்கு அபகாரஞ்செய்து எவரேனும் பிழைப்ப துண்டா?

திருத:—உண்மையே: பாக்கியமற்ற இந்தத் துச்சளை கூறிய தொன்றும் பொய்யில்லை. ஏனெனில்:—அபிமன்யு யாரென நினைத்தாய்? பைத்தியக்காரி கேள். கண்ணனுடைய நான்கு புயங்களாகிய தலையணைகளோடு கூடிய துடையாகிய படுக்கையிலே நெடுநாள் வளர்ந்து பெருகியவனல்லவா? மதோன்மத்தனை பலராமனுக்கோ வெனில் அவனைக்கண்ட மாத்திரத்திலேயே அன்பினால் மதம் மும்மடங்காகும். இன்னும், தேவர்களையொத்த வலிபொருந்திய பாண்டவர் ஐவருடைய அன்புக்கும் பாத்திரனாக விருந்தவன். இத்தகையனைக் கொன்றவன், தன்னுடைய தீச்செயலால் தன்னுயிர்க்குத் தானே தீங்கிழைத்தவனன்றோ? இவ்வுலகில் அவன் பிழைப்பதெங்ஙனம்! அவனைப் பின்னிறுத்தி முன்னின்று ஆதரிப்பாரார்?

(சேவகனைநோக்கி) சயத்திரத! பின்பு அங்கிலையிலிருந்த குமாரனை அபிமன்யுவைப் பார்த்துக் காண்டீவன் யாது கூறினன்?

சேவ:—அரசே! இஃதென்னை? அருச்சுனனுக்கெதிரில் நடந்ததை யிவையென்று கருதினீர்களோ?

திருத:—என்னை! அருச்சுனனும் அச்சமயம் அங்கில்லையோ?

சேவ:—இல்லை.

திருத:—ஆயின் இது நடந்தவித மென்னை?

சேவ:—அரசே! கேட்டருளவேண்டும்: கண்ணனுதவிபெற்ற அருச்சுனன் சென்று ஸம்சப்தகருடைய சைனியத்

னுடன் போராடிக்கொண்டிருக்கையில், சிறு பிள்ளைத் தனத்தால் யுத்தத்திலுள்ள குற்றங்களையே அறியாத அபிமன்யு சமரபூமியையடைய, இவரனைவருஞ் சேர்ந்து அவனைக் கொன்றுவிட்டனர்.

திருத:—ஆ! இப்பொழுதே உன்னுரையை நம்பக்கூடும். புலி சமீபத்திலிருக்கும்பொழுது அதன் குட்டியைக் கவர்வதெங்ஙனம்? எவனுக்குத்தான் தைரியம் வரும்? அவனருகிலில்லாமையினாலேயே அவ்வரசர் பலருங் கூடி அவர்களுடைய துரதிருஷ்டானுஸாரமாகிய இக் காரியத்தை முடித்தார்கள். அஃதிருக்கட்டும், பாண்டவர் மற்ற நால்வரும் என் செய்கின்றனர்?

சேவ:—மகாராசனே கேட்டருள்க! அருச்சுனனுக்குக் காட்டும் பொருட்டு, அவர்கள் இன்னும் அச்சரீரத்தை யிமமேற்றாது வைத்திருக்கின்றனர். அன்றியும் அவனுடம்பில் யார் யார் வலிதாகத் தாக்கினர்களோ அவரவர் பெயரைத் தனித்தனி சொல்லி அழுதுகொண்டுமிருக்கின்றனர்.

திருத:—காந்தாரி! வா. நாமும் கங்கைக் கரையை யடையலாம்.

காந்தாரி:—ஆயின் அங்கேயே நீருமாடலாம்; போவோம்.

திருத:—காந்தாரி! கேட்பாயாக: என்னுடைய குற்றத்தாலல்லவா இத்துணைக் கேடு நேர்ந்தது. எனது குற்றத்தாலிறந்த நின் புதல்வர்க்கெல்லாம் இப்பொழுதிங்கேயே

நான் தர்ப்பணம் செய்துவிடுகிறேன். அதனிமித்தம் அரசருடைய பாடிவீட்டிற்குத் தொந்தரவு கொடுக்க எனக்கு விருப்பமில்லை.

(துரியோதனன், துச்சாதனன், சகுனி ஆகிய மூவரும் பிரவேசிக்கிறார்கள்)

துரியோ:—அடா வத்ஸா! துச்சாஸனா! இப்பொழுது அபிமன்யுவின் வதையினால் நமக்கும் பாண்டவருக்கும் விரோதம் முன்னினுமதிகமாய் நிலைபெற்றுளது. ஜயலக்ஷ்மி நம்மை வரித்தாள். பகைவர் இனித் தலையெடுத்த லெங்ஙனம்? அந்த மதுசூதனனுடைய கொழுப்பு நாசமாயிற்று. அதே சமயத்தில் நமக்கும் எல்லாங் கைகூடின. இனி நமக்கே எப்பொழுதும் வெற்றியுண்டாகும்.

துச்சா:—ஆஹா! அண்ணா, அதற்கென்ன தடை. ஜயத்திரதனுடைய சேனை சத்துருக்களின் படையைத் தடுத்துப் பாண்டவரைப் பின்னிடச் செய்தது. வாளி மழை பொழிதலில் இரண்டா மருச்சுனனான அபிமன்யு யுத்தகளத்தில் விழுந்திறந்தான்; அந்தப் பாண்டவர் வீடுமனை வஞ்சனையால் விழச்செய்து நமக்குண்டாக்கிய சோகம், அவருடைய ஜீவரத்தினமா யிருந்த அச்சுபத்திரை புதல்வனை யிழந்த காரணத்தால் இப்பொழுது அவர் மனத்திற் கூரம்புகள் போல வலியுறப் பாய்ந்து, அவரைப் பன்மடங்கு வருத்தும்.

சகுனி:—இன்று ஜயத்திரதன் செய்த போர் மிகவும் வியக்கத் தக்கது. அவன் இத்துணை வலி காட்டுவனென்று

நமது பக்கத்தார் எவருங் கனவிலுங் கருதவில்லை இன்று அவன் செய்த போரில் அபிமன்யுவின் உயிரோடு பாண்டவருடைய புகழையுங் கொள்ளை கொண்டானன்றோ? இவ்வாறிருக்க, அப்பாண்டவர் இன்று திரும்பத் தலையெடுத்து வீரரைப்போலே வியவகரித்தலும் நிஜமோ.

துரியோ:—மாமா!

சகுனி:—நீடுவாழ்வோய்! என்னை?

துரியோ:—மாமா! இப்படிக் கொஞ்சம்—

அடா துச்சாஸனா! இதோபார் இங்கே; பெரியவராகிய தந்தையன்றோ. வணங்கி இச்சந்தோஷச் செய்தியைத் தெரிவித்துக்கொள்வோம் வா.

சகுனி:—ஆயுஷ்மந்தனான துரியோதனா! வேண்டாம் வேண்டாம். இது காலமன்று: ஒரு குடியிற் பிறந்த நீவிர், இவ்வாறு பகைகொள்ளுதல் அவனுக்குச் சிறிதும் உடன்பாடன்று; எப்போதும் பாண்டவர் பக்கமே பற்றுடைமையின், இச்சமயம் நாம் தலைகாட்டினால், நம்மையே பலவாறிகழ்வது மன்றி இனி நாம் செய்வனவற்றிற்குத் தடையுஞ் செய்வான். ஆகையால், இன்னும் போர்செய்து முழு வெற்றியு மடைந்து முகமலர்ச்சியோடு நம்மைக் காட்டிக்கொள்ளால் பொருத்தமுடைத்தாமன்றி, இப்போதே போய்க் காண்பது பொருத்தமுடைத்தாகாது.

துரியோ:—மாதுல! அவ்வாறு கூறவேண்டாம். இதனால் என்னவாயினு மாகட்டும். பெரியவரான என் தந்

தையைக் கண்டு, வணங்காமலிருக்க நான் சிறிதும் சம்மதியேன்.

(என்றிவ்வாறு சம்பாஷித்துக் கொண்டு அருகில் வந்து)

தந்தாய், நான் துரியோதனன்; வணங்குகிறேன்.

துச்சா:—பிதாவே! துச்சாஸனனாகிய நான் வணங்குகிறேன்.

சகுனி:—நான்தான் — சகுனி, நமஸ்கரிக்கிறேன்.

மூவரும்:—இதென்ன! ஆசீர்வாதமொன்றுங் காணவில்லை!

திருத:—புத்ர, துரியோதனா! என்ன சொன்னாய்? ஆசீர்வாதமா?
பாலனான சுபத்திரைபுதல்வனைக் கொன்றதனால் நீவிரெல்லீரும் உயிர் வாழ்தல் கூடாதென்ற கொள்கை கிருஷ்ணார்ச்சுனருடைய மனத்தில் வலிபெற்றிருக்கும் பொழுது, அதனை யறிந்துள்ள நான் உங்களை ஆசீர்வதிப்பதெவ்வாறு?

துரியோ:—ஜனக! இதென்ன மருட்சி? இவ்வளவு பயங் கொள்ளக் காரணமென்ன?

திருத:—என்ன — என்ன சொன்னாய்? சீ போ. இவ்வளவு பயங்கொள்ளக் காரணமா? — அது "நூறு பேர் ஆண்குழந்தைகளிருப்பினும் பெண்ணொன்றில்லையே யென்று கவலையுற்றிருந்த சமயத்தில் நம குலத்திற்கு ஓர் அருமைப் பெண் பிறந்தாள். அதற்

கேற்ப நாமும் அவளை நூறு பிள்ளைகளினும் மேலாக எவ்வளவோ அன்போடு வளர்த்து வந்தோம். இப்பொழுது அவள், தன்னுடைய தமயன்மார், சுற்றத்தார் முதலியவர்களின் அனுக்கிரகத்தால் அமங்கலமான கைம்மையைப் பெறப்போகின்றனளே! ஐயோ! இந்தத் துக்கத்தையும் இவ்விருத்தாப்பியதசையிலுள்ள நாம் அனுபவிக்க நேர்ந்ததே" என்பது தான்.

துரியோ:—நல்லது—இருக்கட்டும். இவ்விஷயத்தில் ஜயத்திரதனுக்கென்ன?

திருத:—அவனேயன்றோ—அந்தப்புத்திமானான மருமகனேயன்றோ—அதிமேதாவியான அந்த மாப்பிள்ளையேயன்றோ இவ்வண்ணம் பாண்டவரை வலிகுறைத்திருத்தினவன்?

துரியோ:—ஆஹா! அவனேயிந்தக்காரியஞ் செய்தவனோ? அவனொருவனேயோ? எத்துணையோ அரசர் கூடியிருந்தனர்; அவருள் இவனை கொன்றவனென்று கூறுவதெங்ஙனம்?

திருத:—சிவசிவ—ஐயோ! கஷ்டம்.

(விருத்தம்)

மன்னுகுல விளக்கையம ரறியாத சிறுவனை நம்
மாண்பார் மைந்தன்
என்னுமுறை யுடையானை யமர்க்களத்தே பிறருதவி
யென்றும் வேண்டாக்

கொன்னுதிகொள் வேல்வேந்தர் பலர்சூழ்ந்து வஞ்சனையாற்
கொன்றீரந்தோ
உன்னிலிது முறைபாமோ வுங்கள்புய முறியாவோ
வுரைத்திடாயே.

துரியோ:—தந்தையே! அபிமன்யு ஒரு சிறுவனா! அம்மா! அவனெத்தகைய சிறுவனப்பா! அவன் வயதென்ன—அவன் வலி யெத்துணையது—அவனோசிறுவன்? அன்றியும், முதியவனான நம் வீடுமனை வீழ்த்திய பொழுது பாண்டவருடைய புயங்கள் முறிந்து விழவில்லை; அவ்வாறிருக்க, பேருக்கு மாத்திரம் சிறுவனென்று சொல்லப்படும் மகாபலசாலியான அந்த அபிமன்யுவைக் கொன்றவர் புயங்கள் எவ்வாறு முறிந்து விழும்?

திருத—மைந்த துரியோதனா! உன் வார்த்தைகள், † பாலபாஷிதத்தைப்போல உனக்கே பொருத்தமுடையனவாகத் தோன்றுகின்றன; அவை சிறிதும் பிறர் ஒப்பத்தகுவனவல்ல. ஹாஹம்—எத்துணையழகு! உனது புத்தி விசாலத்தை யென்னவென்று சொல்வேன்! வீடுமனை வீழ்த்தியதும் அபிமன்யுவின் வதையும் சமமாமோ? இவை ஒன்றற்கொன்று பிரதியோ?

துரியோ:—மற்றென்னை? அஃதென் சமனாகாது?

திருத:—மிக நன்றாயிருக்கிறது—துரியோதனா! அழகாயிருக்கிறது உன் வார்த்தை; சற்றுச் செவிசாய்த்துக்கேள்:—

† பாலபாஷிதம்—சிறு பிள்ளைகள் பேச்சு.

பீஷ்மன், ஸ்வேச்சாமரணம் பெற்றவன்; மேலும் முதியவன்; மனைவி மக்கள் முதலிய குடும்பக் கூட்டு றவில்லாதவன்; மகாஞானி; ஜிதேந்திரியன். இவையு மன்றி, அவனுடைய தேசத்தாலேயே பாண்டவர் அவ் வாறு செய்து அவனைச் சந்தோஷப்படுத்தினர். இறப் பதில் அவனுக்குக் கவலையுமில்லை. அவனிறந்து படுவ தனால் எவருக்கென்ன கஷ்டம்?

அபிமன்யுவோ வெனின், உலக வியவகாரங்களையே நன்கறியாத பசுங்குழவி; குருகுல விளக்கு; விலை யில்லா மாணிக்கம்; அருச்சுனனென்று சொல்லப் படும் விருட்சத்துக்கு ஓர் அருமுளை. அதனையன்றோ நீ கொய்தது! உனக்கும் அவன் மகனே யல்லவோ? அப்பசுங்குழவியைக் கொன்றபொழுது உன் குடல் எவ்வாறு அதற்குச் சம்மதித்ததோ! ஐயோ! இரக்க மென்பது சிறிதுமில்லையே!

துச்சா:—தந்தையே! வார்த்தைக்கு வார்த்தை சிறுவன் சிறுவனென்று சொல்ல வேண்டாம். சிறுவனு அவன்! அங்ஙனென்றுமில்லை. அந்த அபிமன்யுவோ..........

திருத:—என்ன என்ன! யாரடா அவன்? துச்சாதனன் போலிருக்கிறதே.

துச்சா:—ஆஹா! பின்னையார்? நான்தான்—துச்சாதனன் தான். நாமெல்லாம் எவ்வளவோ சிரமப்பட்டு மிக்க கவனத்தோடு யுத்தஞ் செய்துகொண்டிருந்தபொ ழுது, முதுவேனிற் பருவத்துக் கதிரவன் கிரணங்

கள்போலத் தாங்கவொண்ணுக் கூரம்புகளைத் தன் வில்லில் தொடுத்து விடுத்து, அரச ரோவ்வொருவருக்கும் தன்னினைவு என்றுமிருக்கும்படி அவருடம்பைத் துளைத்தவனன்றோ அந்த அபிமன்யு! அவனுடைய அம்பால் தாக்கப்படாதாரெவர்? நமது சேனையிலுள்ளாரனைவரும் இப்போதும் 'அபிமன்யு' என்னும் பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே கிடுகிடுவென்று நடுங்கித் திகைக்கின்றனரே! இவ்வாறிருக்க, அவன் ஒரு சிறுவனு?

திருத:—ஐயோ! போதும் போதும் — நின் வார்த்தை; என்னுற் கேட்க முடியாது. அடா! சுபத்திரை தநயனை ஒரு சிறுவன்கையிலகப்பட்டு நீவிரனைவரும் இவ்வண்ணந் துன்புற்று அவன் வலியையும் மறத்தையும் பாராட்டிக்கொண்டிருக்கும்போது, அத்தகைய சூரனும், வரம்பைக் கடந்த வலியுடையவனுமான புத்திரனைத் துறந்து அப்பெரிய புத்திரசோகத்தாற் பிடிக்கப்பட்டிருக்கும் அருச்சுனன் உங்களை யென்ன செய்ய வெண்ணுவானென்று சொல்லவும்வேண்டுமா? ஐயோ கஷ்டம்!

துரியோ:—என்ன செய்ய எண்ணுவான்? எண்ணினும் அவனாலென்னவாகும்?

திருத:—என்ன ஆகுமா! ஆவது ஆகும்: ஹூம்— நுந்தலைவிதியுள்ளமட்டுங் கண்ணாரப் பார்த்துக்கொண்டிரும்.

துரியோ:—ஐயனே! இதென்ன; வார்த்தைக்கு வார்த்தை அருச்சுனன் அருச்சுனன் என்று பயமுறுத்துகிறீர்? அவனெவன் அருச்சுனனென்பவன்?

திருத:—ஐயோ!—நன்றாயிற்று. புத்திர! என்ன—அவ னெவனோ?—அருச்சுனனென்பவனோ?—அருச்சுனனை நீ யறிந்திலையன்றோ?

துரியோ:—உம்ஹூம். எனக்குத் தெரியாது.

திருத:—ஆயின், யானுமறிந்திலேன். அவனுடைய பல வீர ஸாகஸங்களை அறிந்தோர் பலருளர்; அவரைக் கேட்டுத் தெளிவாயாக.

துரியோ:—அந்தோ! அருச்சுனனுடைய பலவீரபராக்கிரம ஸாகஸங்களை அறிந்தவருக்குள் யார் யாரை நான் கேட்டுத் தெளிய வேண்டும்?

திருத:—மகனே கேள்: நிவாதகவசருயிரைக் கவர்ந்ததன் நிமித்தம் அருமை பாராட்டிய தேவேந்திரனைக் கேள். விதம்விதமான அஸ்திரப் பிரயோகத்தினால் மகிழ்ந்த, வேடவுருக்கொண்ட பரமேசுவரன் உனக்குச் சரியான உத்தரந்தருவான். காண்டவவனத்தை யெரித்த காலத்தில், அச்சந்தருவனவாகிய பலவகைப் பாம்பு களையும் பிறவற்றையும் அவியுணவாகக் கொண்டு மகிழ்ச்சியெய்தின அக்கினி தேவனைக் கேட்பின் நல்ல மறுமொழி கிடைக்கும். தன் புயவலியால் உன்னை வென்று பிணித்து ஆகாயத்திலே தூக்கிச் சென்ற அவ்விஞ்சையனாகிய சித்திராங்கதனைக் கேட் பினும் உனக்குத் தகுந்த சமாதானங்கிட்டும்.

துரியோ:—ஒருவேளை நும் மொழிப்படி நிச்சயமாய் அருச்சு னன் அத்துணை வலியனாயினும் என்னை? நம் சேனை

யில் அவனுடன் பொரத்தக்கார் யாருமில்லையோ ? போதும் போதும். இனி இச்சொல் வேண்டாம்.

திருத:—மகனே ! எங்கே—எவன்—ஒருவனைக் குறித்துக் கூறு பார்ப்போம்.

துரியோ:—இதென்ன இப்படிச் சொல்லுகிறீர். நம் கர்ணன் ஒருவனே போதாதோ ? அவனென்ன—இலகுவானவனா ?

திருத:—ஐயோ பாவம் ! பேதையான அக்கர்ணன் பரிகசிக்கத் தக்கவனன்றோ ? அவனாவது அருச்சுனனுடன் பொரவாவது ? எவரேனும் கேட்பின் சிரிப்பர்.

துரியோ:— ஏன் அப்படி ?

திருத:—அவனுடைய கவசகுண்டலங்களை இந்திரன் கவர்ந்துகொண்டான். அவன் அர்த்தரதனே யன்றி மகாரதனல்லன். வஞ்சகத்தால் பரசுராமனிடத்தில் ஆயுதப் பயிற்சி செய்தமையின் அது அவனுக்குப் பயன்படாது போயிற்று. இவ்வளவன்றி அவனிடம் மிடுக்கும் அளவுகடந்திருக்கிறது. ஆகவே அவன் அருச்சுனனோடு பொருவதெங்ஙனம்? அவனுக்கு அஸ்திரங்களை யருளினோர், சங்கரன், இந்திரன், அக்கினி முதலிய தேவராயினன்றோ அவ்வுரை பொருந்தும்.

சகுனி:—அருச்சுனனது வலிமையெவ்வாறிருப்பினு மிருக்க; நீ இப்பொழுது எம்மையும் எம்பக்கத்தாரையும் இகழ்வதில் மிக வல்லவனாக விருக்கிறாய்.

திருத:—ஓஹோ— சகுனி பேசுகிறானோ? — ஏ சகுனி! எப்பொழுதும் சூதாடுவதே தொழிலாகவுடைய நீ செய்த காரியம், எமது மரபாகிய வனத்திற்கொரு தீயாகத்தோன்றிச் சிறு குழந்தைகளாகிய சந்தன மரங்களையும் விடாது பற்றுகின்றதே! நின் வஞ்சம் இன்னும் என்னென்ன விளைக்குமோ!

துரியோ:—(பயமடைந்து) ஆ ஆ! இதென்ன! பயங்கரமான தொனியும் பூகம்பமும் உண்டாகின்றனவே! திடீரென்று ஆகாயத்தினின்று நட்சத்திரங்கள் விழுகின்றன, ஆகாயங் குபீரென்று கொளுந்துகிறது; காரணமென்னவோ! அறியேன்.

திருத:—துரியோதனா! தன் பேரனை அபிமன்யு இறந்ததைக் கேட்டுத் துயருற்ற மனத்தனாகிய இந்திரனது கண்ணினின்றும் சிந்தும் நீர்த்துளிகள், இவ்வாறு நட்சத்திர வுருவத்தோடு உதிர்ந்துகொண்டிருக்கின்றனவென்று நான் கருதுகிறேன்; அதற்கென்ன சந்தேகம்!

துரியோ:—சயத்திரத! விரைவிற் செல்; பாண்டவரது சேனையில், சங்கு, படகம், பேரிகை, சிங்கநாதம் ஆகிய இவை கலந்த இப் பயங்கரமான தொனி யெழுவதற்குக் காரணமென்னவென்று அறிந்து வா.

சேவ:—மகாராஜனே உத்தரவு (என்று வெளியே வந்து சிறிது தாழ்த்துத் திரும்ப உள்ளே போய்) ஸம்சப்தகருடைய சேனையை அழித்துமீண்ட

அருச்சுனன், மடிந்த தன் மகனைத் துடையின்மீது கிடத்திக் கண்ணீரால் அவனுடலைக் கழுவி அரற்றிக் கொண்டிருக்கும் பொழுது, கண்ணன் தன்னைத் தேற்றத் தேறி, மானத்தாலே தூண்டப்பட்ட மனத்தனாகி ஒரு வஞ்சினங் கூறினன்,.........

துரியோ:—என்ன, என்ன?

சேவ:—அவ்வஞ்சினத்தைக் கேட்டுப் பெருமகிழ்ச்சியுற்ற உழைச்சனங்களெல்லாரும், ஒரே காலத்தில், 'கௌரவரனைவருந் தோற்றனர்' என உரக்கச் சிங்கநாதஞ் செய்தனர். அப்பொழுதே, மிகப் பெரியவாகிய விந்தம், மந்தரம், மேரு முதலிய மலைகளையுந் தாங்கவல்ல பூதேவியும், அவ்வஞ்சினத்தைக் கேட்ட அச்சத்தால் நடுக்கமுற்றனள்.

திருத:—வஞ்சினத்தைக் கேட்டமாத்திரையே பூமி நடுக்கமுற்ற தென்றால், அவன் வில்லைக் கையிலெடுப்பின் மூவுலகும் நடுங்குமென்பதற்கு ஐயமென்ன?

துரியோ.—அப்படி அவன் செய்த சபதந்தானென்ன?

சேவ:—"என் மகனை எவன் கொன்றனனோ, என் மகன் இறந்த காரணத்தால் எவரெவர் உடல் பூரித்தனரோ அவரனைவரையும் நாளைச் சூரியனத்தமிக்குமுன் என் மகன் சென்ற வழியே செல்லச் செய்வேன்" என்பது.

துரியோ:—சபதத்திற்குப் பங்கம் வந்தால் பிராயச்சித்தமென்ன ?

சேவ:—காண்டீவத்துடன் தீப்புகுவதே. வேறென்ன விருக்கிறது?

துரியோ:—நல்லதிருக்கட்டும்—நான் அவனுடைய சபதத்திற்குப் பங்கம் விளைக்கத்தக்க முயற்சி செய்வேன்.

திருத—மைந்த! நீயென்ன செய்வாய்?

துரியோ:—என்னுடைய சேனையின்பலத்தால் ஜயத்திரதனை மறைத்துவைத்து அவனுயிரை நிலை நிறுத்துவேன். அன்றியும், துரோணாசாரியனுடைய உதவியால் பகைவர் மாறுபடுத்த முடியாதபடி வியூகத்தை அமைப்பேன். அப்பொழுது அவர்கள் சதுரங்க சைனியத்துடன் முன்வந்து வியூகத்தை மாறுபடுத்த வியலாமல் நின்று, தம் சபதத்திற்குப் பங்கம் நேரிட்டதென்று தீயிற் புகுவர்.

திருத:—ஆ! அப்படியா நினைக்கிறாய்? பூமிக்குட் புகுந்திருக்கட்டும், அன்றி ஆகாயத்திற் சென்று மறைந்திருக்கட்டும்—வேறு எங்கே போகட்டும்—எல்லாத் தொழிலிலும், கண்போன்ற கண்ணனை முற்கொண்டே புகும் அருச்சுனனுடைய அம்புகள் ஜயத்திரதனைப்பற்றாமல் விடா.

சேவ:—அம்மம்ம! இதென்ன! எவ்வளவு ஸாகஸம்—எவ்வளவு தைரியம்? *சண்டசாஸனனை எமது மகாராஜ

* சண்டசாஸனன்—எவரும் தடையின்றிச் செல்லும் ஆக்ஞையுடையவன்.

னுக்கெதிரே இத்தகைய சொற்களை வேறெவனே னுங் கூறியிருப்பின் அக்கணமே அவன் சிரம் ஆகா யஞ் சென்றிருக்கும். இதுவரை அவன் பிழைத்தி ருப்பதெங்கே!

(கடோற்கசன் பிரவேசம்)

(ஆகாயத்தில்: தனக்குத்தானே.)

என் தம்பியான சௌபத்திரனை யிழந்து மறுகும் மனத்தினனாகிய நான், மனதார அந்த நீசனை அனுகி நன்மொழி கூற வுடம்படேனாயினும், இப்பொழுது நேமியங்கையனான கண்ணன் ஆணையைச் சிரமேற்கொ ண்டு அங்குசத்தால் அடக்கப்பட்ட மதயானை போல அவ்வாணைக்குட்பட்டு, வஞ்சகனான அப்பகைவனைப் பார்த்து அவன் நிலைமை யறியப் புறப்பட்டிருக்கின் றேன்.

(கீழே பார்த்து)

இதுவேயன்றோ பகைவனிருப்பிடம்—இங்கே இறங்குகிறேன்......(கீழே இறங்கிச் சுற்றிலும் பார் த்து) இங்கே ஒருவரையுங் காணோமே; வாயில் காப்பா ரொருவரும் இல்லையோ—இருக்கட்டும்; நானே என் விஷயத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். (என்று பாசறை வாயிலில் நின்று)

(கலிவெண்பா)

கடோ:—

மண்பா சறையீர் வருநா ளிடிம்பிமகன்
என்பேர் கடோற்கச னென்பரால்—முன்பேயின்
பாலோ டுயிர்குடித்த பாலன் யதுகுலத்து
மேலோனுங் கண்ணன் விடுக்கநும்—பாலோருந்
தூதுவந்தேன் றன்சயமாற் றுன்னலர்போ லெயெமையெப்
போதும் பகைத்துப் புவியாளும்—போதன்
துரிசில்சிற் றப்பன் சுயோதனனை முன்னே
தெரிசிக்க வேண்டுமெ தெரிந்து—

துரியோ:—(உள்ளே யிருந்தபடியே)

வருகவீங்

கிப்பால் வருக விதுவுன் பகைவன்வீ
டப்பா டருக வஃதெண்ணக்கும்—ஒப்பக
குதுகலமாம் வீண்பயங் கொள்ளேலங் கந்த
மதுகு தனன்வழங்கு மாற்றம்—எதுகொலது
சொல்லுகவிங் குள்ளேன துரியோ தனனியானே
சொல்சொல்சொல் நீவிரைந்து சொல்.

கடோ:—(உள்ளே புகுந்து தனக்குள்) ஒஹோ! இங்கேயே போற்றுதற்குரிய நம் பாட்டனார் திருதராஷ்டிர மகா ராஜனும் இருக்கிறார். ஆஹா! இவர் தோற்றம் எவ்வளவு கம்பீரமாக விருக்கிறது! என்ன ஆச்சரியம்! முதியவராயினும் இவருடம்பில் மூப்பைக் காட்டுங் குறியொன்றுங் காணோம். நூறு பிள்ளைகளைப் பெற்றும், சிறிதும் தளர்ச்சியடையாது அந்நூற்றுவரினும் மிக்க தைரியத்துடனும் ஸாகஸத்துடனும் விளங்குகின்றார். கண்மாத்திரமிருப்பின் இவர் உண்

மையில் தமது வலியால் மூவுலகையும் ஆளக்கூடும் என்று கருதிப் பயமுற்றுத் தேவரனைவருங்கூடி நான்முகனை வேண்ட, அவ்வாணீவல்லபன் அவர்கள் வேண்டுகோட்கிணங்கி இவர் கண்களை மறைத்துப் படைத்தனன் போலும் (என்று சொல்லிக்கொண்டு, அண்டையிலணுகி)

மூதாதையே! வணங்குகின்றேன்; கடோத்...(பாதியில் நிறுத்திக்கொண்டு) இல்லை யில்லை—யுதிஷ்டிரன் முதலான என் குரவர் நின்னடித் தாமரைகளிலிறைஞ்சாநின்றனர். பேரனை கடோற்கசனெனப்படும் யானும் நின்பாதங்களில் வணங்குகிறேன். (வணங்குகிறான்)

திருத:—வருதி வருதி! குழந்தாய்—ஹிடிம்பீ புத்திர! வருதி! (என்று அவனை அணைத்துக்கொண்டு) அப்பா! கடோற்கசா! இப்பொழுது நேர்ந்துள்ள துக்ககரமான விஷயம் என் மனத்திற் சற்றும் இயைந்ததன்று. இங்ஙனிவ்வாறாமென்று நான் நினைக்கவேயில்லை. வேறெவரும் நினைத்திருக்கவுமாட்டார். சகோதர நாசத்தால் வருந்தும் உன் மனத்தினும் பன்மடங்கு என்னெஞ்சம் பதைக்கின்றது. அதனை என் நாவாற் கூறுந்தரத்ததன்று. ஹா—ம்—வீணே சொல்லி யென்ன—இவையெல்லாம் நான் இத்தகைய பிள்ளைகளைப் பெற்றதன் பயனன்றோ!

கடோ:—(மெதுவாக) ஆஹா! இவர் எவ்வளவு ஸௌமியர்! இவர் வார்த்தைகள் எவ்வளவு மனோகரமாக விருக்கின்றன! எத்தகைய குணம்!... பெரியோர் எல்லா

நற்குணங்களும் நிறைந்தவர்' என்று பகவானுன சக்கர பாணி அருளிச்செய்ததுண்மையே.

திருத:—(எழுந்து நின்று) என்ன! என்ன!! பகவானுன சக்கரபாணி என்னவென்றருளிச் செய்தார்?

கடோ:—அபசாரம் அபசாரம்: கூடாது—நிற்கக்கூடாது; இருந்த வண்ணமே கண்ணனுடைய தூதின் விஷயங் களைக் கேட்டருளுதல் பொருத்தமானது.

திருத:—ஓ பகவானே! ஜனார்த்தன! இவ்வெல்லாம் உன் மாயையே. உன் கட்டளைப்படி நடக்கின்றேன். (உட் காருகிறுன்)

கடோ:—பிதாமகனே! கேட்டருள்க. கண்ணன் முதலில் "ஹா வத்ஸ, அபிமன்யு! குருகுலவிளக்கே! யதுகுல மணியே! நின் தாயாருடன் பிறந்த ஜனார்த்தனனுன என்னையும் விட்டு இவ்வண்ணம் போயினையே! நீ பிறக் கும்பொழுது உன்னுடைய மூதாதையான பாண்டு மகா ராஜன் உயிரோடின்மையின் அவனைப் பார்க்கக் கருதிய அவாவினுல் எவரிடமுஞ் சொல்லாது சுவர்க்கம் புகுந் தனையோ" என்று பிரலாபித்து, அப்பால் "ஒரு பிள்ளை யின் பிரிவால் அருச்சுனனுக்கு இத்தகைய துன்பங்கள் நேர்ந்திருக்கின்றன; ஒருங்கே நூறு பிள்ளைகளும், ஒரு வனேயான மருமகனும் பிரியப்போவதால் உனக்கு நேரக் கூடியதுன்பங்கள் எத்தகையவோ! அதனுல் உன்னுயிர் புத்திரசோகமாகிய தீக்கிரையாகு முன்,

உனது சேனுபலத்தைப் பெருக்கித் திருத்தி யமைத்துக்கொள்” என்று தெரிவிக்கச் சொன்னான்.

திருத:—இந்த வார்த்தை, மிக்க கோபமுற்றவனுய்க் குரு குல நாசத்திற் பெரு முயற்சி கொண்டுள்ள கண்ணன் வாயினுதித்ததென்றால், காண்டீவி எல்லா அரசவருக்கத்தையும் வேரறச் செய்யும் விரதங் கைக்கொண்டுள்ளனென்று உறுதியாய் நம்பலாம்.

துரியோ:—இஃதென்ன வார்த்தை—நகைக்கிடமானது. போதும் போதும்.

கடோ:—ஈதென்ன இவன் பரிகசிக்கின்றனே!

துரியோ:—ஆஹா—சந்தேகமென்ன? பரிகாசமே. கண்ணனுக் கெங்கள் பேரிற் பொறாமை யிருப்பின் அவனெம்மை யென்னசெய்யக் கூடும்? தேவர்களுடன் சூழ்ச்சி செய்து எம்மாயுளைத் துடைத்துவிடுவனே? அவனொரு பெரிய வாயாடி; புரட்டன். அவன்வார்த்தைக் கென்ன? அதற்கு யார் பயப்படுகிறவர்கள்? நிற்க, பார்த்தனொருவனே அரசர் அனைவரையு மழித்துவிடுவனே? அவனே உலகுக்கொரு வீரனே? ஏனையரெல்லாரும் ஆடவரல்லரோ?

கடோ:—நான் கூறியது என்னுரை யன்று. கண்ணனே நேரிற் சொல்லியனுப்பியதாகும். நான் சொல்ல வேண்டுவதைச் சொல்லி விட்டேன். உனக்கோ என் வார்த்தை நகைதருகின்றது. அருச்சுனனுடைய உறுதியான சபதத்தைத் தெரிந்து கொண்டாயன்றே ? அது

போதும். உன் தன்மை யுனக்கே தரும்; மேலும் நான் இது வரையில் சொல்லியவை உனக்கன்று. உன் தந்தைக்காகும். உனக்கும் வேறே தனியாகக் கண்ணன் கூறி விடுத்துளன். அதனைக் கேட்பாயாக.

துச்சா:—அடா க்ஷத்திரியாவமானியே! வேண்டாம்—அவனுரை யெமக்கேன்? எம்முடைய ஆக்ஞை பூவுலகிலுள்ள அரசர் முடிகளின்மீது அடிவைத்துத் தடையின்றி உலவுகின்றது. இத்தகைய எம் முன்னே அரசனேயல்லாத எவனோவொரிடையன் தூதனுப்புவதாம்; அதனையாம் கேட்க வேண்டுமாம். எவனடா அவன் எமக்குத் தூது விடுக்க?

கடோ:—என்ன? எப்படி? இன்னொரு முறை சொல்? பகவானான அந்தச் சக்கரபாணி அரசனில்லையா? இடையனா?—அடா புலையா! நரபசு!

ஜராசந்தனுடைய தொந்தரவுக்குட்பட்டு அவனாற் சிறை வைக்கப்பட்டு மான மிழந்திருந்த ஆயிரக்கணக்கான அரசரைச் சிறை மீட்டவன் யார்? அவனுனக்கு அரசனாகத்தோற்றவில்லையோ? முன்பு இராசசூயயாக காலத்தில் அரசரனைவருங் கண்ணாரக் காண,உன் பாட்டனான வீடுமன் அவனுக்குத் தன்கையாலே பணிவிடை செய்து அக்கிர தாம்பூலமுங் கொடுத்தானன்றோ! க்ஷத்திரியனேயல்லாத ஒருவனுக்கு அக்கிர தாம்பூலங் கொடுத்த அந்த வீடுமனும் க்ஷத்திரியனல்லனே? அவன் பேரனான நீ யெவ்வாறு க்ஷத்திரியனெனப்படுவாய்? ஸ்ரீவத்ஸமென்னும் மறுவோடு கூடிய அவனு

டைய மார்பில் தங்கியுள்ள ஸம்பதபிமான தேவதை யாகிய லக்ஷ்மி, அவனையடைந்ததனால் தன்னையா யிருக்க, அரசர்க்கரசனான அக்கண்ணன், உனக்கு, அரசகுலத் துதித்தவனே யல்லனாய்விட்டானோ?

துரியோ:—துச்சாஸனா! இந்த விவாதத்தாற் பயனென்ன? அவன் அரசனாக விருக்கட்டும்—இல்லாதிருக்கட்டும்; பலசாலியாகட்டும்—அன்றிப் பலவீனனாகட்டும்; வீணே பேசிப்பயனென்ன ?

(கடோற்கசனைப்பார்த்து) அடா! உங்கள் பிரபு சொன்னதென்ன? அதைச் சொல் கேட்போம்.

கடோ:—ஆஹா! பிரபு வென்பதிற் சந்தேகமென்ன? பூஜ்யனான நாராயணன் மூவுலகுக்குந் தலைவனன்றோ? எமக்குக் குலகுருவும், இஷ்டதெய்வமும், பிரபுவும் அவனே. அவன் சொன்னது:—

"க்ஷத்திரியரனைவர்க்கும் நாசகாலம் சமீபித்திருக்கின்றது. எண்ணிறந்த துஷ்டக்ஷத்திரியரால் நிறைந்துள்ளவிப் பூபாரம் விரைவிற் குறையப்போகிறது. புத்திரசோகத்தால் பயங்கரமான ஆயுதத்தைக் கைக்கொண்ட பற்குனனுக்கெதிரே பொருகளத்தில் எவனும் முன்னின்று பொருது உயிருடன் மீளமுடியாது" என்பதே.

சகுனி:—வாய்ப்பேச்சு மாத்திரையில் வெல்வதென்றால், இப்பூமண்டல முழுதும் பாண்டவர் கைப்பட்டதாகவே கருதலாம். அதே போல, வார்த்தைக்கு வார்த்தை

'ஸகல க்ஷத்திரியவதை' என்றால், அதுவும் நடந்தாற் போலத்தான்.

கடோ:—அடா புலையா! நீயார்? சகுனியோ—கௌரவ குலத்திற்கு வக்கிர சனியோ? வெட்கமில்லாமல் நீயும் ஒரு சூரனைப்போலப் பேசவந்தாயே! இதுவும் சூதாட்டமன்று.

அடா! அந்தக் கவற்றை யெறிந்து விட்டு, பொரு களத்திற்குரிய ஆயுதங்களைக் கைப்பிடிக்கப் பழகு. அப்பொழுதுதான் நீ க்ஷத்திரியனாய்ப் பிறந்ததன் பயனைப் பெற்றவனாவாய். அஃதின்றி வீணே கத்து வதிலென்ன பயன்? யுத்தத்திற் பந்தயம், உடல் சிறிதும் வருந்தாது மோசத்தாற்பெறும் இராச்சிய மன்று; உயிரேயாம். இறந்தோர் பலருடைய மூளையால் நீயாகவே நிருமித்துக்கொண்ட கவற்றாற் காரியமே யில்லை. மார்பைப் பிளந்து நுரையீரலிலுள்ள சூடான உதிரத்தைப் பருகிப் பகையைத்தெறும் பயங்கரமான பாணங்களைக் கைப்பிடி.

துச்சா:—அடா நீசா! ராக்ஷஸாதமா! யாரடா நீ?—இவ் வண்ணந் தாரதம்மியமில்லாமல் என்னென்னவோ பிதற்றிக்கொண்டு வரம்புகடந்து பேசுகின்றாய்? நீண்ட உனது புயங்களை அங்கு மிங்கும் அலைத்தலால் நான் பயப்படுவேனென்று நினைத்தாயோ? ஒரு வேளை நின்தாயினியற்கையைப் பெற்று அரக்கர் தன்மையாற் கொழுத்திருப்பாயாயின், இதோபார்— நான் உனக்குத்தாழ்ந்தவனல்லன். (தோள்களைத்

தட்டிக்கொண்டு) என்னைக் காலருத்திர னென்றறி. அரக்கர் கிடக்க; அவரினுங் கொடியம் யாம். இதனை நன்றாயறிந்து கொண்டு, உடம்பில் நினைவோடு நாக்கை வரம்பில் நிறுத்திப் பேசு.

கடோ:—சிவ சிவ! அரக்கரெங்கே—நீவிரெங்கே!

(விருத்தம்)

"அந்தவுரை மிகமெய்யாம் நுங்கொடுமை
யெவர்க்குண்டவ் வரக்க ரென்றுஞ்
சிந்தனையில் விரகெண்ணார் செருமுகத்தில்
வஞ்சகமுஞ் செய்யா ரையா
வெந்திறல்கூர் துணைவருக்கு விடமருத்தார்
நிரைகசமுவில் வீழச் சொல்லார்
உந்துபுனலினைப்புனையா ரோரூரி
லிருப்பகற்று ருரையுந் தப்பார்."

"செழுந்தழல்வாழ் மனைக்கொளுவார் செய்ந்நன்றி
கொன்றறியார் தீங்கு பூணா
ரழுந்துமனத் தழுக்குறா ரச்சமுமற்
றருளின்றிப் பொய்ச்சூ தாடார்
கொழுந்தியரைத் துகிலுரியார் கொடுங்கான
மடைவித்துக் கொல்ல வெண்ணா
ரெழுந்தமரின் முதுகிடா ரிவையெல்லா
மடிகளுக்கே யேற்ப வாமே."

தூரியோ:—அடா! நீ யென்ன — தூதனாகத்தானே வந்தாய்? போருக்கன்றே? இவையெல்லா முனக்

கேன்? எம் மறுமொழியைப் பெற்றுக் கொண்டு புறப்படு. தூதனுகையால் உன்னைக்கொல்வது தருமமன்று.

சடோ:—என்ன என்ன? கேவலம் தூதனென்று என்னை அலட்சியஞ் செய்கின்றனையா? தூதனா நான்? போதும் போதும். வாய்ச்சொல்லாற் பயனில்லை. நீவிர் அனைவரும் ஒன்றுசேர்ந்து நும் திறமையைக் காட்டும் பார்ப்போம். என்னையும் அபிமன்யுவென்று நினைத்தாயோ? அவனுயிருமென்?—மற்றொரு வில்லைக் கைப்பிடித்து மத்துணைப் பொழுதுகூடக் கொடாதொழிந்தீர்! இது எந்த க்ஷத்திரிய தருமமோ? மேலும் அவனொருவன் — நீவிர் பலர். அதுபோகட்டும் நெடுநாளாக எனக்கொரு குறையுண்டு. அஃதென்னவென்றால், உலக முழுதும் என்னை மிக்க வலியுடையவனென்று கூறுகிறது, அதனைப் பரிசித்துப் பார்க்க வேண்டுமென்பதே. அதற்கேற்ற தருணம் வாய்த்தது. யமலோகத்தைக் காணவேண்டுமென்னும் ஆசையுள்ளவர்கள் என்னெதிரெழுந்து வரலாம். (இதழைக் கடித்துப் புயங்களைத் தட்டிக்கொண்டு யுத்த சன்னத்தனாய் நிற்கிறான்)

திருத:—பிள்ளாய் கடோற்கசா! கோபங்கொள்ளாதே. அவர்கள் வார்த்தை உனக்கேன்? என் சொற்படி நீ தூதனாகவே யிருப்பாயாக. அதனாலொன்றுந் தாழ்வில்லை.

கடோ:—(சிறிது கோபந்தணிந்து) மூதாதையே! என் சினம் அளவுகடந்துளது. ஆயினும், நுஞ்சொல்லை மீறாமல் தூதனாகவே யிருக்கிறேன். இறைவனை கண்ணனிடம் என்னவென்று விஞ்ஞாபனஞ் செய்வது?

துரியோ:—என்ன—விஞ்ஞாபனமா—அவனுக்கா—நான் சொன்னேனென் றிவ்வாறு சொல்: "வீணாக வார்த்தைகளைச் செலவழிக்கவேண்டாம். உன்னுண்மை யெம்மிடம் பலியாது. சொற்களை வளர்ப்பதில் எனக்கு விருப்பமில்லை. வெண்கொற்றக் குடை நிழற்ற அரசருடன் நான் புறப்பட்டுவிட்டேன். நீ அங்கேயே பாண்டவருடனே யிரு. உன் மொழிகளுக்கு நேரான மறுமொழியை யென்னம்புகள் தரப் பெறுவாய்."

கடோ:—மூதாதையே! கட்டளையாயிற் புறப்படுகிறேன்.

திருத:—குழந்தாய்! நல்லது. சுகமே சென்று வா.

கடோ:—(சிறிது தூரம் போய்த் திரும்பி) இதுவே கண்ணனது கடைசி வார்த்தை. நன்றாய்ச் செவிசாய்த்துக் கேள்: "தருமத்தைக் கடைப்பிடி. சுற்றத்தாரிடத் தன்புடையவனா யிரு. மனத்திற் கிசைந்தவற்றை விரைவில் முடித்துக்கொள். நின்பாலுற்ற யமன் அருச்சுனன் வடிவங் கொண்டு நாளைக் கதிரவனுதயத் தோடு தோன்றுவன்."

(எல்லாரும் புறப்படுகிறார்கள்)

தூத கடோற்கசம் முற்றும்.



# அரும்பதவுரை முதலியன.

---

## பக்கம் 1.

"பிடியதன்.........இறையே" தேவாரம், திருவலிவலம்.

மூன்று லோகமும்.........ஆளவனே: இது ஸம்ஸ்கிருத மூல சுலோகத்தின் மொழிபெயர்ப்பு. 'சூத்திரதாரனும், நன்மைகள் நாடி ஒன்று புரிவோனும் ஆகிய ஈசன் எம்மை ஆள்வன்' என முடிக்க. மேவு மாயையின் மூடி — தன்னிடத்துப் பொருந்திய மாயையினாலே மறைத்து. (மாயையினால் மறைத்தல் நாடகத்தில் திரையிடுவதற்கு ஒப்புமை) தொடா தூயவர் — தன்னை உபாசிக்கின்ற பெரியோர். ஆன்ற — கல்வி கேள்விகள் நிரம்பிய. தான என்று—நானே மேற்கொண்டு. புரிதல்—செய்தல்.

உவகை—சந்தோஷம்.

## பக்கம் 2

ஸம் சப்தகர்—நன்றாகச் சபதஞ் செய்பவர் = போர்தொடங்குமுன்னமே பலவகைச் சபதஞ் செய்து, பின் அவ்வாறே நடத்திக் காட்டும் வீரர். இவர் 12, 13-ம் நாட் போர்களில் அருச்சுனனை [illegible] அழை

த்துச்சென்று அவனுடன் பெரும்போர் செய்து மாண்டனர்.

வதம்—கொல்லுதல்.

சினம்—கோபம்.

விரகு—தந்திரம.

தீச்செயல்—கெட்ட காரியம்.

வெருண்டு—பயந்து.

## பக்கம் 3.

சாதனை—எடுத்த காரியத்தை ஊக்கத்துடன் முடித்தல்.

கௌரவர்—குருவமிசத்திற் பிறந்தவர்; துரியோதனாதியர்,

பிதாமகன்—பாட்டன்; இங்கே தேவேந்திரனைக் குறிக்கின்றது; 'பிதாமகனுடைய தலையின்மீது ஏற்றினார்' என்பதற்கு, 'சுவர்க்கத்திற்கு அனுப்பினார்' (கொன்றார்) என்பது கருத்து.

சதாசாரம்—நல்லொழுக்கம்.

இசைத்தவன்—சொன்னவன்.

## பக்கம் 4.

தாயத்தார்—தாயாதிகள்.

(அகவல்)

செயிர் அறு—குற்றமற்ற. புதல்வனை—புத்திரனாகிய அபிமன்யுவை. நனி—மிகவும். செரு—யுத்தம். முருகன்-சுப்பிரமணியக்கடவுள். மருகன்—சகோதரிமகன். காண்டீவம்—அருச்சுனனுடைய வில். உருத்திரன் என்ன—அழித்தற்கடவுளாகிய ருத்திரனைப் போல. உருத்து—கோபித்து. வான்பழி—பெரியபழி.

அசகாயசூரன்—பிறருதவி வேண்டாத சூரன்.
ஏகினை—போனாய்.

## பக்கம் 5.

வது—மணமகள்.
கைம்மையுதவுதல்—அமங்கிலியாகச் செய்தல்.

## பக்கம் 6.

இத்தருணம்—இந்தச் சமயம்.
வேடம்—வேஷம்.
தனஞ்சயன்—அருச்சுனன்.
அபகாரம்—தீமை.

## பக்கம் 7.

மதோன்மத்தன்—மிக்க மதங்கொண்டவன்.
வலி—பலம்.
காண்டீவன்—காண்டீவத்தையுடையவன்; அருச்சுனன்.

## பக்கம் 8.

சமரபூமி—போர்க்களம்.
கவர்தல்—கைக்கொள்ளுதல்.
ஈமமேற்றுதல்—சிதையில்வைத்துத் தகனம்பண்ணுதல்.

## பக்கம் 9.

வத்ஸன்—குழந்தை.
மதுசூதனன்—கிருஷ்ணன்.
வாளி—அம்பு.
வீடுமன்—பீஷ்மன்.
வியத்தல்—ஆச்சரியப்படுதல்.

## பக்கம் 10.

நீடுவாழ்வோன்—சிரஞ்சீவி.

ஆயுஷ்மந்தன்—நீண்ட ஆயுளுடையவன்.

பற்று—அன்பு.

மாதுலன்—மாமன்.

## பக்கம் 12, 13.

(விருத்தம்)

மன்னு—நிலைபெற்ற. அமர்—யுத்தம். மாண்பு ஆர் மைந்தன்—மாட்சிமை பொருந்திய மகன். கொல் நுதி கொள்—பகைவரைக் கொல்லத்தக்க கூர்மைகொண்ட; 'கொன்' எனப் பிரித்து 'அச்சம்' எனப் பொருள்கொள்ளுதலும் ஒன்று. அந்தோ—ஐயோ. உன்னில்—யோசிக்குமிடத்து.

## பக்கம் 14.

ஸ்வேச்சாமரணம்—தான் வேண்டும்போது சாதல்.

ஜிதேந்திரியன்—இந்திரியங்களை வென்றவன்.

முதுவேனிற் பருவம்—ஆனி, ஆடி மாதங்கள்.

கதிரவன்—சூரியன்.

## பக்கம் 15.

தநயன்—புத்திரன்.

மறம்—வீரம்.

## பக்கம் 16.

ஸாகஸம்—நினைத்தவற்றை ஆராயாது தைரியத்துடன் செய்தல்.

அத்தன்—பிதா.

நிவாதகவசர்—பகைவரால் அழிக்கமுடியாத கவசந்தரித்த மூன்றுகோடி அசுரர்.
அவியுணவு—அக்கினியில் ஓமம்பண்ணும் பொருள்.
பிணித்து—கட்டி.
விஞ்சையன்—வித்தியாதரன்.

## பக்கம் 17.

பேதை—அறிவில்லாதவன்.
அர்த்தரதன்—தேர்ச்சண்டையில் முழுத்தேர்ச்சி பெறு தவன்.
மகாரதன்—தேர்ச்சண்டையில் முழுத்தேர்ச்சி பெற்றவன்.

## பக்கம் 18.

மரபு—வமிசம்.
தொனி—சத்தம்.
படகம்—ஒருவகை வாத்தியம்.
தாழ்த்து—தாமதித்து.

## பக்கம் 19.

மடிந்த—இறந்த.
அரற்றுதல்—வாய்விட்டழுதல்.
வஞ்சினம்—சபதம்.
உழைச்சனங்கள்—உடனிருக்கும் ஆட்கள்.
பங்கம்—கேடு.

## பக்கம் 20.

வியூகம்—படைவகுப்பு.
சதுரங்க சைனியம்—தேர், யானை, குதிரை, காலாள் என்னும் நால்வகைப் படை.

## பக்கம் 21.

சிரம்—தலை.
சௌபத்திரன்—சுபத்திரை புதல்வன்; அபிமன்யு.
நேமியங்கையன்—சக்கரத்தைக் கையிலேந்தியவன்.
பாசறை—பாடிவீடு; யுத்தஞ்செய்யும் அரசர் தங்குமிடம்.

## பக்கம் 22.

(கலி வெண்பா)

பேய்—பூதனை. நும்பால் — உம்மிடத்தில். ஓ நும் — அசை. 'நும்பால் தூதுவந்தேன்' என முடிக்க. 'தன்' என்றது, துரியோதனனை. துன்னலர் — பகைவர். போதன் — ஞானமுடையவன்; இங்கே இகழ்ச்சிக் குறிப்பு; ஞானமில்லாதவன் என்பது கருத்து. துரிசு இல் — குற்றமில்லாத; இதுவும் இகழ்ச்சியே. சுயோதனன்—துரியோதனன். வருக வீங்கு — ஈங்கு வருக. குதுகலம் = குதூகலம் — சந்தோஷம். வழங்கு மாற்றம் — சொல்லிய வார்த்தை. எதுகொல்: கொல் — அசைநிலை. இங்குள்ளேன் —இதோ இருக்கிறேன்.
போற்றுதல் — துதித்தல்.

## பக்கம் 23.

நான்முகன்—பிரமன்.
வாணீவல்லபன்—நாமகள் தலைவன்; பிரமன்.
மூதாதை—பாட்டன்.
குரவர்—பெரியோர்.
இறைஞ்சுதல்—வணங்குதல்.

வருதி—வருவாயாக
ஸௌமியர்—சாந்தமுள்ளவர்.
மனோகரம்—மனத்தைக் கவருவது.

## பக்கம் 25.

காண்டீவி—காண்டீவத்தையுடையவன்; அருச்சுனன்.
நகை—சிரிப்பு.
சூழ்ச்சி—ஆலோசனை.
ஆடவர்—ஆண்பிள்ளைகள்.

## பக்கம் 26.

க்ஷத்திரியாவமானி—அரசரை அவமதிப்பவன்.
முடி—கிரீடம்.
நரபசு—மனிதவிலங்கு; மிருகத்தன்மை யுடைய மனிதன்.

## பக்கம் 27.

ஸம்பதபிமானம்—செல்வத்தை விரும்புதல்.
தனயை—பெறுதற்குரிய பேறு பெற்றவள்.
பிரபு—தலைவன்.
எண்ணிறந்த—கணக்கற்ற.
பற்குனன்—அருச்சுனன்.

## பக்கம் 28.

வக்கிரசனி—இராசிதோறும் போய்க்கொண்டிருக்கும் பொழுதே பின்னிராசிக்குத் திரும்பிவந்த சனி; இவன் கேடு செய்வனென்பது சோதிட நூல் மரபு.
கவறு—சூதாடு கருவி.
நிருமித்தல்—உண்டாக்குதல்.
இறந்தவர் மூளையால் கவறு நிருமித்த வரலாறு:—துரியோதனன், சகுனியும் அவன் சகோதரருமாகிய நூற்

றெண்மருடைய பலத்தைக் கண்டு பொறாமை கொண்டவனாய் அவர்களை அழிக்க நினைத்து, வஞ்சனையால் ஓரிடத்தில் விருந்துக்கழைத்து அவ்விடத்திலேயே அவர்களெல்லோரையும் சிறைப்படுத்திச் சிறிது உணவுமாத்திரம் கொடுத்து வந்தான். அதனால் அவர்களெல்லோரும் உணவில்லாமல் வருந்தி, ஒவ்வொருவராக இறக்க நேரிட, அவ் வஞ்சனையை அறிந்து அவர்கள் ஒன்றுகூடி யோசித்து, மிகவும் புத்திசாலியான சகுனிக்குத் தங்கள் உணவுகளையுங் கொடுத்துப் பிழைக்கச்செய்து, கௌரவ குலத்தை அழிப்பதற்கு யுக்தி கூறி வரமுங்கொடுத்து அவனை வைத்துவிட்டு, மற்ற 107 பேரும் பட்டினிகிடந்து மாண்டுபோனார்கள், அவ்வாறு இறந்தவர்களின் மூளை நரம்புகளைக்கொண்டு சகுனி ஒரு சூதாடுகருவி செய்து வைத்துக்கொண்டான்—என்பதாம். (இதற்கு வேறு விருத்தாந்தங் கூறுவாருமுளர்.)

பின்னர், துரியோதனன், இச்சகுனி யொருவனாலே தங்களை ஒன்றுஞ் செய்யமுடியா தென்று எண்ணிச் சிறையினின்றும் இவனை விட்டுவிட, அதன்மேல் இவன் 'பகையாளி குடியை உறவாடிக் கெடு' என்பதைக் கடைப்பிடித்துக் கௌரவர்களுடன் உறவாயிருந்து, அச்சூதாடு கருவியையும் வரத்தையுங் கொண்டு சூதாடி வென்று, தாயாதிப் பகையை மூட்டி வேரோடு அழித்தான்.

உதிரம்—இரத்தம்.

பருகுதல்—குடித்தல்.

தெறுதல்—கொல்லுதல்.
தாரதம்மியம்—ஏற்றத்தாழ்வு.

## பக்கம் 29.

(விருத்தம்.)

[இக்கவியிரண்டும் வில்லிபாரதத்தினின்றும் எடுக்கப்பட்டவை (பதின்மூன்றாம போர். செய். 239, 240.) இவற்றின் முதலிலும் இறுதியிலும் இவ்விடத்திற் கேற்பச் சில மாற்றப்பட்டன.] செருமுனை—போர் செய்யுமிடம். வெம் திறல் கூர் துணைவா—விரும்பத் தக்க பலம் மிகுந்த சகோதரா. அருந்துதல்—உண்பித்தல். நிரைக்கழு—வரிசையாக நாட்டிய கழுமரம். உந்துபுனல்—தள்ளிக்கொண்டு போகும் நீர். அழுக்கு—பொறாமை. அடிகள்—பெரியோர்; ஈண்டு இகழ்ச்சிக் குறிப்பு.

## பக்கம் 30.

இதழ்—உதடு.
யுத்த சன்னத்தம்—போர் தொடங்க நிற்றல்.



## பிழைதிருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2. | 6. | அரக்கரை | அரசரை. |
| 32. | 10. | என்று | ஏன்று. |



சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.

# ஞான சூடாமணி



[illegible]ன் அச்சகம்
[illegible]வேலி சந்திப்பு
1948.

ஆதீன வெளியீடு — 19.

திருக்கயிலாய பரம்பரைத்

திருவாவடுதுறை யாதீனத்து வித்துவான்

**ஸ்ரீ சபாபதி நாவலரவர்கள்**

இயற்றிய

# ஞான சூடாமணி

---

அவ்வாதீனத்து

௨௰-வது மகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ: அம்பு[redacted]ண தேசிக சுவாமிகள்

க[redacted]ப்படி

ஷை ஆதீனத்து வித்துவான்

**வி. சொர்ப்பராமலிங்க பிள்ளை**

பரிசோதித்தது.



கணேசன் அச்சுக்கூடம், திருநெல்வேலி சந்திப்பு

P I. C. No. 50. Copies 500.

1948.

உ

கணபதி துணை.

# முன்னுரை.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெ
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ் குருநமச்சிவாயதேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ.

சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் இறுதித் திருமுறையாகிய பெரிய புராணத்தில் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் புராணத்தில் ௭௰-வது திருவிருத்தமாக வுள்ளது

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞான
முவமையிலாக் கலைஞா[redacted]னர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்த[redacted]ணர்ந்தா ரந்நிலையில்.

என்னுந் திருப்பாட்டாகும். இந்தத் திருப்பாட்டுப் பெரிய நாச்சியார் தோணியப்பர் அருளிச்செய்தபடி திருஞான சம்பந்தப் பெருமானுக்குத் திருமுலைப்பால் கொடுத்தருளிய அனந்தரம் அப்பெருமான் பெற்ற ஞானத்திறம் கூறுகின்றது.

இற்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் சென்னையில் சைவசித்தாந்த சண்டமாருதம் எனப்புகழ் பெற்றிருந்த ஸ்ரீ சோமசுந்தர நாயகர் என்பவர் ஞானபேத விளக்கம் என்ற நூலொன்றியற்றி வெளியிட்டனர். அந்நூலில் குறிக்கப்பட்ட பல விஷயங்களில் இத் திருப்பாட்

டின் பொருளும் ஒன்றாகும். இத்திருப்பாட்டு திருஞானசம்பந்தப்பெருமானார் உமை முலைப்பால் உண்டருளிய அனந்தரம் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை யென்னும் நான்கு வகை ஞானங்களும் பெற்றாரென்பது கூறுவதாக நாயகர் கருதுகின்றார். மற்றொரு சாரார் அபரம் பரம என்னும் இருவகை ஞானங்களையும் திருஞானசம்பந்தப்பெருமானார் பெற்றருளினமை கூறுகின்றது இத்திருப்பாட்டு எனக் கருதினார்கள். இருகட்சியார் கருத்தும் அபரம் பரமென்னும் ஞானமும் உடன்பாடே; கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் ஞானமும் உடன்பாடே. இத்திருப்பாட்டிற் கூறப்பட்டது இரண்டு ஞானமுமுணர்த்துமையா நான்கு ஞானமும் உணர்த்துமையா என்ற அளவில் கருத்து வேறுபாடு இருந்ததாகும். அதனால் வாதப் பிரதிவாதங்கள் பல நடந்தன.

இந்நிலையில் திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்து முனிபுங்[redacted] தமது ஆதீனத்திற்குப் பரமப் பிரமாணநூலாக விளங்[redacted]ம் பெரியபுராணத்திலுள்ளதும் நாடோறும் ஆதீனத்து ஸ்ரீ ஞானமா நடராஜர் பூஜை முடிவில் ஓதப்படுவதுமாகிய அத் திருப்பாட்டின் பொருள் சம்பந்தமாக எழுந்த விவாத விஷயம் தெரிந்து 'அத்திருப்பாட்டின் மெய்ப்பொருள் புலப்பட ஒருநூல் செய்க' என்று அக்காலத்து ஆதீனத்து வித்துவ ஸ்தானத்தை அலங்கரித்திருந்த ஸ்ரீ சபாபதி நாவலரவர்கட்கு ஆணை தந்தருளினார்கள். அவர்கள் ஆணையைக் கடைப்பிடித்து நாவலர்கள் 'ஞான சூடாமணி' என்னும் இந்நூலை இயற்றி அக்காலத்து ஆதீனத்து மகா சந்நிதானமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ மேலகரம் சுப்பிரமணிய

தேசிக சுவாமிகள் முன்னிலையில் அரங்கேற்றி வெளியிட்டார்கள். இவ்வுண்மை இந்நூற்பாயிரத்து வரும்.

நவிலு மிவ்வுரை கொண்டுற நயக்குமாண் கயிலை
யுவமை யில்பரம் பரையினெண் டுறைசைவீற் றிருக்குஞ்
சிவமி குந்தொளிர் சுப்பிர மணியதே சிகனூர்
தவமி லங்குறு சந்நிதி ஞானமா சபையே.

என்னும் செய்யுளால் விளங்கும்.

இந்நூலில் சைவசித்தாந்த நுண்பொருள்கள் பல விளக்கப்பட்டிருக்கின்றன. அக்காரணத்தால் சைவ சித்தாந்த வுணர்ச்சியுடைய பல பெரியோர்கள் இதனை அச்சிட்டு உபகரிக்க வேண்டுமென்று விரும்பினார்கள். அவ்விருப்பத்தை ஏற்றுகொண்டு இப்பொழுது அவ்வாதீனத்தில் உய-வது பகா சந்நிதானமாக எழுந்தருளித் தமிழையும் சைவத்தையும் பேணிவரும் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் அந்நூலை செம்மையான முறையில் பரிசோதித்து அச்சிடுவிக்[redacted]று அடியேனுக்குக் கட்டளையிட்டருளினார்கள் அவ[redacted]து திருவாணையை சிரமேற்கொண்டு என் அறிவுசென்றவளவில் நூலைப்பரிசோதித்து முடித்திருக்கிறேன். குணங் கொண்டு கோதாட்டுதல் அறிஞர் கடன்.

துணங்குஞ் சமய நூற்றலைமை நுவலுந் தகைத்தாய் நந்திமுனி
கணங்கட் களித்த சிவஞான போதக் கதிநூ னெறிகாட்டிப்
பணங்கொள் ளரவர் துறைசையில்வாழ் பஞ்சாக் கரதே சிகன் [மலர்த்தாள்
வணங்க வழுத்த மனத்திருத்த வாய்த்த பிறப்பை வாழ்த்துவாம்.

திருவாவடுதுறை
சர்வசித்து௵
கார்த்திகை௴ 21௳

வி. சிதம்பரராமலிங்க பிள்ளை,
ஆதீன வித்துவான்.

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# ஞானசூடாமணி.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்

தற்சிறப்புப் பாயிரம்.

மோனவான் கயமுக மூர்த்திதாள் போற்றுது
ஞானசூ டாமணி நலம்பெறற் பொருட்டே.

---

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திரு[redacted]தாள் போற்றி.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
ஒல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

நவிலு மியவுரை கொண்டுற நயக்குமாண் கயிலை
உவமை யில்பரம் பரையினெண் டுறைசையிற் றிருக்குஞ்
சிவமி குந்தொளிர் [1]சுப்பிர மணியதே சிகனார்
தவவி ளங்குறு சந்நிதி ஞானமா சபையே.

---

1. பதினெருவது மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ: மேலகரம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்.

[1] இக்காலத்துத் திராவிடர்களிற் சிலர் திருவருட் பெருஞ்செல்வர்களாகிய உண்மை நாயன்மார்கள் அருளிச் செய்த மெய்யருட்டிரு முறைகளாகிய தேவார முதலிய உண்மை நூல்களையும் மெய்கண்ட சித்தாந்த சைவசாத்திரங்களையும் அம்மரபில்வந்த சிவஞானயோகிகள் உண்மை நூலுரைகளையும் நல்லாசிரியர் வழிபட்டுத் தொல்காப்பிய இயல்வரம்பு தெரிந்து நியாயநெறி கடைப்பிடித்து ஆராய்ந்து பொருளுண்மைதேறும் தவமுயற்சி இல்லாமையால், நல்லாசிரியரல்லார் மாட்டு அவைதம்மை ஆராயப் புகுந்து அறிவறியாமை இரண்டும் புலமையெனப் பரிணமிக்கப் பெற்றாராய் அம்மெய்யருட் டிருமுறைகளின் பொருள்களையும் மெய்கண்ட சித்தாந்த சைவசாத்திரங்களின் பொருள்களையும் அம்மரபில்வந்த சிவஞானயோகிகள உண்மை நூலுரைகளின் பொருள்களையும் மனம் போனவாறு வரம்பழித்துப் பொய்ப்பொருள் கூறித் தம்மைத்தாமே [2] இறப்ப உணர்ந்தாரெனமதித்துக் கழி பெருங் களியாட்டயரா நிற்[redacted]. அவர் அதுமட்டோ, பிற செந்தமிழிலக்கிய விலக்கண நூலுரைகளையும் தந்தம் வெள்ளறிவுகொண்டு அவ்வாறாராயப்புகுந்து தொல்லை வரம் பழித்துப் போலிப்பொருள் கூறிக் களியாட்டயரா நிற்பர். நல்லாசிரியர் அவர்பொய்ப்புலமை கண்டு ஏயே! இவர்புலமை இஃதோவென எள்ளி நகையாடா நிற்பர். அதுநிற்க

சூளைச்சோமசுந்தர நாயகர் சின்னாளின்முன்னர் ஞானபேத விளக்கம் என்று ஒன்று வெளியிட்டார். அதன்

1. அறுபது ஆண்டுகட்குமுன்.
2. இறப்ப - மிக

கண் ஞானவரம்பும் [1] "சிவனடியே சிந்திக்கும்" எனவரும் பெரியபுராணத் திருப்பாட்டின் மெய்ப்பொருளும் பிறவும் அவராற் பெரிது மலைக்கப் பட்டமைகண்ட பெரியோர் அதுபற்றி உலகுக்குவரும் ஏதத்திற்கு அஞ்சி அதற்கோர் மறுப்பு எழுதுமுகத்தானே அத்திருப்பாட்டின் உண்மை ஞானம் பொருள்புலப்பட வொருநூல் செய்கவென்று ஆணைதந்தருளினராக அதுகடைப்பிடித்து அவ்வாற்றான் 'ஞானசூடாமணி' என்னும் பெயரினால் இதுகூறப் புகுந்தா மென்பது.

"ஞானபேதவிளக்கம்" என்பது ஞானத்தின் மறுதலை விளக்கமெனப் பொருள்தந்து "நானும் அறியேன் அவ னும் பொய்சொல்லான்" என்னும் பழமொழியைத் தெற் றெனப் புலப்படுத்துமாறு காண்க.

காப்புச் செய்யுளில் "நால்வித" மென்பது நாலும் விதமென அமங்கலப் பொருள்தந்து 'தொகையார்பொருள் பலவாய்த் தோன்றுதல்' காண்க

"ஞானமென்பது அறிவெனவிளங்கும்" என்றார். ஈண்டு அவர் "ஞானமென்பது" என்றெடுத்தது ஞானத் தின் இலக்கணமு உணர்த்தற்கோ? அதன் பொருளு ணர்த்தற்கோ? இலக்கணம் உணர்த்தற்கேயெனின், அதன் சொரூபம் புலப்படும் பொருட்டு அவர் ஈண்டுக் கூறிய விலக்கணம் என்னை? அறிவென விளங்குதலே யெனின், அது பிறிதொரு சொல்லால் அதன் பொரு ளுணர்த்தியதேயாம். சொரூபம் புலப்படாமையின் இலக் கணமாகாதென்க. இனிப் பொருளுணர்த்துங்காலும்,

---

1. பெரியபுராணம் - திருஞான. எம.

பயிலாத சொற்களைப் பயின்றசொற்கள் சார்த்திப் பொருளுணர்த்தலே முறையாம். ஞானமென்பதும் அறி வென்பதுபோலப் பயின்றுவருவதொரு சொல்லாதலின், அதற்கு அதனாற் பொருளுணர்த்துதல் நின்று வற்றுதலென்னுங் குற்றமாமென்க. அல்லதூஉம், பயின்ற சொற்களைப் பயின்ற சொற்கள் சார்த்திப் பொருளுணர்த்தலுமன்றி அங்ஙன முணர்த்தவந்த சொற்கும் பொருள் யாதென்று மேலுமேலும் பொருட்குப் பொருடெரியப்புகுவானன்றே, புகுதாவே அவ்வினா [1] இறைவரம்பின்றியோடுமென்பது. இது பற்றியன்றே [2] "பொருட்குப் பொருடெரியி னதுவரம்பின்றே" எனவும், [3] "மரபுநிலை திரியிற் பிறிது பிறிதாகும்" எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் ஓதியருளியதூஉ மென்க. இன்னும் "விளங்குபு" என வொரு சொல் அன்று மிகையாய் நிற்றலுங் காண்க.

'தேகமுதலிய ஜடப் பொருள்களையன்றி வேறு சித்துப பொருள்களில்லையென்று அறியும் அறிவே பாசஞானம், ஆன்மாவாகிய சித்துப்பொருளையன்றி வேறு ஜடசித்துப் பொருள்களில்லையென்று அறியும் அறிவே பசுஞானம்; ஜடப்பொருள்களை யுடைமையாகவும் ஆன்ம சித்துப் பொருள்களை அடிமையாகவுங்கொண்டு அசைப்பித்தும் அறிவித்தும் இயற்றும் பரமான்மாவாகிய சித்துப் பொருளை அறியும் அறிவே பதிஞானம்" என்றார்.

1. இறை—விடை
2. தொல் சொல். உரியியல் 95.
3. ஷை பொருள் மரபியல் 91.

பொருள்களன்றியென உரைக்கவறியாது பொருள்களை யன்றியென ஈரிடத்து ஐயுருபுகள் முடிபின்றி வாளா கிடக்க உரைத்தார் என்னை? ஆண்டுப் பொருள்களென்பன எழுவாய் வேற்றுமையாகியே நின்று உண்டு எனனும் பயனிலை கொண்டு முடிதலானென்க. வாக்கியந்தோறும பிறழ்ந்து கிடக்குங் குற்றங்களை இங்ஙனம் ஆண்டாண் டுரைக்கப் புகின் பெருகுமாகலின், அவற்றினை லக்ஷியப்படுத்தாமல்விட்டு, [1]ஸ்தாலீபுலாக நியாயபற்றிப் பெரிய [2]அநர்த்தங்களை விளைவிக்கும் பொருட் குற்றங்களைமாத்திர மெடுத்துக் காட்டி ஒழித்துப்போவோம.

அவர் பாசஞானம் பசுஞானம பதிஞானமென்னும் [3]பரிபாஷைகள் சைவர் கொள்கையென்று கூறி அவைகளுக் கிலக்கணம் [4]பரபக்கமாகவே யுரைத்தார். என்னை? அவர்கூறிய பாசஞான பசுஞான இலக்கணங்கள் நாஸ்திகர் நையாயிகர் சாங்கியர் மாயாவாதிகள் முதலியோர் கொள்கைகளாயும், பதிஞான இலக்கணம் பேதவாதசைவர் பாடாணவாதசைவர் முதலியோர் கொள்கைகளாயும் இருக்கலானென்க அவை அவ்வாறாதல் யாம் முன்னர்ச் சித்தாந்தசைவர் கொள்கையெனக்கூறும் அறுவகை ஞான இலக்கணங்கள்பற்றி இனிதுணர்க.

1. ஒரு பானைச் சோற்றிற்கு ஒரு சோறு பதம் என்னும் நியாயம்.

2 அநர்த்தம்—கேடு

3. பரிபாஷை—குறியீட்டு வழக்கம்.

4. பரபக்கம்—பிறர் சார்பு

[1] பாசஞானமாவது முப்பொறி முதலியனபற்றி ஏகதேசமாய் நிகழுஞ் சுட்டுணர்வாம். பசுஞானமாவது தற்சொரூபமேயறியமாட்டாது பல தலைப்பட்டு நிற்கும் ஐயவுணர்வாம். பதிஞானமாவது தானே தற்பிரகாசமும் பரப்பிரகாசமுமாய் எல்லாப்பொருள்களையும் இனிது விளக்கும் அருளுணர்வாம். இவையே சித்தாந்தசைவர்கள கூறும் அம்மூவகைஞான இலக்கணங்களாம். முப்பொருள் கொள்ளுஞ் சித்தாந்த சைவர்களுக்கும, முப்பொருளுணர்வு முப்பொறி முதலியனபற்றி ஏகதேசமாயும் பசுத்துவ வாதனைபற்றி ஐயவுணர்வாகியும் அருள்பற்றி மெய்யுணர்வாகியும் முறையே நிகழ்ந்து முற்றிநிலை பெறுமெனபது சிவாகமநூற் றுணிபென்றறிக. இஃதென் சொல்லிய வாறோவெனின்;—சித்தாந்த சைவர்க்குப் பதிஞானம்போல மற்றை யிருவகை ஞானங்களும மெய்யுணர்தற்கட் சாதகமாவனவோவென்று ஐயுறுவார்க்கு [2] அவையும் அவ்வுணர்ச்சிக்கண் அவர்க்குப் பூர்வசாதகமாவனவேயென ஐயமொழித்தவாறென்க

"பாசம் ஜடமாகையால் அது ஒன்றினையு மறியாது; பதிநிர்மலசித்தாகையால் அதுவும் ஒனறினையுமறியாது; பசுவானது மலசித்தாகையால் பாசத்தோடு சேர்ந்து பாசமாயும் பதியோடு சேர்ந்து பதியாயும விளங்கும்"

---

1. சிவஞான சித்தி. சுபக்கம். 9-ம சூத்திரம். திருவிருத்தம் 4 சிவஞான சுவாமிகள் உரை

2. ஷை சூத்திரம். திருவிருத்தம் ௩ள் உரையில் 'அஃதங்ஙனமாக........ பயன்படுதலுடைமையின்' என்றருளியது

என்றார். பாசம் ஜடமாதலின் அது ஒன்றினையு மறியா தென்றல் பொருந்தும். பதியை நிர்மல சித்தென்றுகூறிப் பாசம்போல அதுவும் ஒன்றினையும் அறியாதென்றல் பொருந்தாமையறிக. ஒன்றினையும் அறியாதென்பதற்கு ஒன்றினையும் அனுபவ விடயமாகச் சுட்டியறியாது பொது மையின அறிந்தாங்கறிந்து நிற்குமென்பதே பொருளெ னின், ஒன்றற்கு இலக்கணங்கூறுமிடத்துச் சொற்குறை யாமலும் பல்காமலும் [1] அவ்வியாத்தி [2] அதிவியாத்தி [3] அசம்பவம் என்னும் குற்றங்கண் மூன்றும் அணுகாமலும் பொருளினிது விளங்குமாறு வாக்கியங்கூறலே நெறியாம். அவ்வாறன்றி மனத்திலொன்று குறித்து மற்றொன்றுபட வாக்கியங்கூறுதல் வாக்கியநெறி யாகாதென்க. உய்த் துணருமாறு அங்ஙனம் உரைத்தாரெனின், அவாய்நிலை கொண்டு பொருந்துமாறுபற்றி உய்த்துணருமாற்றானுரைப் பது செய்யுட்கும் செய்யுளோடொக்குஞ் சூத்திரவார்த்தி கங்களுக்கு மியலுவதன்றி மற்றை மெல்லுரை நடைக்கன் றெனமறுக்க மற்று அதுதானும் அவைபோல உய்த் துணருமாற்றான் உரைக்க இயலுவ தாங்கால், அறிவின் மெலியராய இடைமாணுக்கர் கடைமாணுக்கர் என்னுமிரு திறத்தாரும் அவற்றின் பொருள் அறியுமாறின்றிக் கலங்கி உறுதிகூடா ரெனவுமுரைக்க. பசுவிற்கு அறிவு விளங்கு

---

1. அவ்வியாத்தி—வியாபித்தலின்மை. அஃதாவது இலக்கணம் இலக்கியத்தின் ஏகதேசத்தில் இருத்தலின்மை.

2. அதிவியாத்தி—மேல் வியாபித்தல். அஃதாவது இலக்கணம் இலக்கியமல்லாததன் கண்ணும் இருத்தல்.

3. அசம்பவம்—இருத்தலின்மை. அஃதாவது இலக்கணம் இலக்கிய முழுதினும் இருத்தலின்மை.

இவற்றைத் தருக்க சங்கிரகத்து 2-ம்பகுதி உரையிற்காண்க.

மாறு உணர்த்தும் பொருட்டுப் பசுவானது என்று எடுத்தார், அஃது இப்பெற்றித்தாக அறியுமென்று மேல் வாக்கியங்களோடு பொருந்த முடித்துக்கூறுது, மலசித்தாகையால் பாசத்தோடு சேர்ந்து பாசமாயும் பதியோடு சேர்ந்து பதியாயும் விளங்குமென்று நிலைகூறியொழிதல் பொருந்தாமையறிக. பிறவும் இவ்வாறு நெகிழ்ந்து போனவற்றையும் எடுத்துக்காட்டாம்; என்னை? அவையும் விரிந்து மற்றொன்று விரித்தலென்னுங் குற்றமாய் முடிதலினென்க.

அவர் இங்ஙனம் தலைப்பெய்துரைத்துப் போந்து, தாங்கொண்டபடி, பெரிய புராணத் திருப்பாட்டில் நால்விதஞானம நாட்டத்தொடங்கிப் "பதியாகிய சிவன் சுட்டறநின்று தன்னையறிவிக்குங்கால் அங்ஙனம் அறியும் அறிவு நால்வகைப்படும்; அவை கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்பன; இவை சிரவணம் மநநம் நிதித்தியாசநம் சமாதியெனவும்படும்; இவைகளையே "சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம, பவமதனையறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம், உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெஞ்ஞானம், தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தாரந்நிலையில்" என்று அருண்மொழித் தேவர் கூறினர்—இதில் முதலடியில் சிந்திக்கும ஞானமென்னும் மநநமும் இரண்டாவதடியில் பாங்கினிலோங்கிய ஞானமென்னும் நிதித்தியாசநமும் மூன்றாவது அடியில் கலைஞான மென்னும சிரவணமும் முடிவில் மெஞ்ஞானமென்னுஞ் சமாதியும் தெள்ளிதின் விளங்குமென்றும், 'இவ்வாறு பொருள்கொள்ள அறியாதார் ஞானமிரண்டேயெனவும் நான்குயாண்டுங் கண்டதுமில்லை கேட்

டதுமில்லை எனவுங்கூறிக் களிப்பரென்றும், பரம் அபர மென்னும் ஞானபேதங்களை யாமும் அங்கீகரித்திருக்கின்றோம்; சேக்கிழார்கூறிய ஞானப்பாடலில் அது சேராதென்பதே துணிவென்றும், பூர்வ பக்கத்தார் தங்கொள்கையைப் பலப்படுத்தற்கு [1] “ மேவருஞானமிரண்டவற்றொன்று விமலனார் பாததாமரையே, ஓவறுமன்பினுணர் திருவளிக்கு மொட்பிலாவுயர் கலைஞானந், தாவரும் பாவத்தைவேரொடுங்களையுந் தக்கமெய்ஞ்ஞான மென்றிவற்றாற், சாவதும் பிறப்புந்தணப் புறச்சிவத்தைச் சார்ந்ததுவாய் நிற்றல் யோகம் ” என்னுந் திருத்தணிகைப் புராணச் செய்யுளை ஆதாரமாகத் தேடிக்கொண்டனரென்றும், ‘ஈழ நாட்டாருட் பலரும் தொண்டை நாட்டாருட் சிலரும் இச்செய்யுள் பெரியபுராணத் திருப்பாட்டின் பொருளை நிர்வசனஞ் செய்தலின் அத்திருப் பாட்டின் பொருளை இருவகை ஞானவிடயமே என்று கொண்டு போதருகின்றார்களென்றும், தொண்டை நாட்டாருட் பலரும் ஈழ நாட்டாருட் சிலரும் அத்திருப்பாட்டின் பொருள் நான்கு ஞானங்களா மென்னும் நங்கொள்கையையே தங் கொள்கையாகக் கொண்டு போதருகின்றார்க ளென்றும், ‘தம்பிரான் கூறிய இருவகைஞானம் சேக்கிழார் அருளிச் செய்த திருவாக்கில் சேர்ந்து அமையா’ வென்றும் பலவாறு கூறினார்.

தொண்டைநாட்டாருட் பலரும் ஈழநாட்டாருட் சிலரும் நங்கொள்கையைத் தழீஇ நிற்கின்றார், ஈழ நாட்டாருட் பலரும் தொண்டை நாட்டாருட் சிலரும் நம் மறு

---

1. தணிகைப் புராணம்—அகத்தியனருள் பெறுபடலம். ௩௫௩.

தலைக் கொள்கையைத் தழீஇ நிற்கின்றார் என்று போதரு வித்தது யாது? இரு கொள்கைகளுஞ் சமபல முடையன வென்பதேயெனின் தாங்கூறு ஞானங்கள் நான்கனையு மொப்பாது வேறு ஞானம் நான்கு கூறும் அவர் தமமை அவர் தழீஇக் கூறும் பலம் துர்பலமாதலன்றிச் சமபல மாகுமோ? அகாதாகவே, இக்கூற்றினால் அ வ ர் க் கு ப் போந்தபலம் யாதுமின்றென்க. அது கிடக்க, சேரநாட் டார், சோழ நாட்டார், பாண்டி நாட்டார் இவ்விரண்டு கொள்கைகளுள் இது தழீஇயினுமொன்று எடுத்தோது தல் அத்தியாவசியமாகவும், அது அவர் கூறாததென் கொலோ? [1] இவரெல்லாம்[2] மேலையோர்போலக் கைலாய பரம்பரையில் வந்த சிவஞானயோகிகள் பலரும் அத்திருப் பாட்டின் மெய்ப்பொருள் இதுவெனத் துணிந்துரைத் தருளிய இரு முதல் ஞானபிரபலக் கொளகையை மறு தலைத்துத் துர்ப்பல முடைய தங்கொள்கையை அங்கீகரிக்க மாட்டார்கள் என்று கருதிக் குன்றக்கூறலென்னுங் குற்றம் பட அது கூறாதொழிந்தார் போலும்! மற்றிது [3] மசகக் கடிககஞ்சிப் புலியின் வாய்ப்பட்ட கதைக்கு இனமென்க.

இனி ஞானப்பகுதிகளான கேட்டன் முதலிய நான் கும் அப்பெரியபுராணத் திருப்பாட்டில் முகஇயப் பொரு ளின்வழி உட்படு பொருளாகப் பெறப்படுமென்பது எம் மனோர்க்கும் சம்மதமேயாம் மற்று அவை அத்திருப் பாட்டின் முக்கியப்பொருளாக உரைக்கப்பட்டன வென் பது எம்மனோர்க்கு உடன்பாடன்றுப. அத்திருப்பாட்

1. சேர நாட்டார் முதலிய மூவரும்
2. ஈழ நாட்டாருட் பலரும், தொண்டைநாட்டாரிற் சிலரும்
3. மசகம்—கொசுகு.

டின் முக்கிய பொருள்கள் இவை என்பதூஉம், இவையும் இன்னோரன்ன பிறவும் அவற்றின் வழிப்படும் உட்பொருள்களென்பதூஉம் போதந்து கூறுதும். ஞானத்தின் செம்பொருளும் அது இருமுதலாமாறும். கேட்டல் முதலிய நான்கும் அவ்விரண்டன் வகையாமாறும் முன்னர்த் தெரிப்பாம்.:—

பௌஷ்கராகமத்தில்

[1]சிவஸ்ய ஸமவேதாயாஸ்ஸக்திர்க்ஞாநாத்மிகாமலா,
சைவக் ஞானமிதி பிரோக்தம் ஸாப்தம் ததநுமாபகம்.
என்றருளிச் செய்யப்பட்டது.

இதன் பொருள்:- சிவனுடைய நிர்மலமான சமவேத ஞான சத்தியேஞானமென்று நூல்களால் உறைக்கப்படும்; சத்தம் அந்த ஞானம் விளங்குதற்கு, ஏதுவாமென்றவாறு. [2]பல்பொருட் கேற்பின் நல்லதுகோட லென்பதனால் ஈண்டுச்சத்த மென்பதுபற்றிச் சிவாகமமே சிறப்பாற்றாற் கொள்ளப்படும். ஈண்டு வேதம் அதுபற்றிக் கொள்ளப் படாதோவெனின்; பொதுவாற்றாற் கொள்ளப்படுமன்றோ. அதுதானுஞ் சிவாகமத்தோடு ஒற்றுமையுடைய தொருமுதனூலாய்த் தத்துவ ஞானத்தினைப் பயக்குஞ் சாதனமாய் நிற்றலினென்க. சிவஞானம் விளங்குதற்குச் சிவாகமம் ஏதுவாமெனவே, அது மற்றொரு சிவஞானமா மென்பதுதானே பெறப்படுமென்க.

1. பௌஷ்கராகமம் பதிபடலம் ௭, ௬இ

2. தொல், பொருள், மரபியல் ௱௧௦.

இனிச் சிவப்பிரகாசத்தில்[1] "உயர்ஞானமிரண்டா மாறுமலமகலவகலாதமென்று போதத் திருவருளோன் றென்றதனைத் தெளியவோதுஞ் சிவாகமமென்றுலகமறியச் செப்புநூலே" என்று இவ்வாறு அருளிச்செய்யப்பட்டது பௌஷ்கரச்சுருதி ஞானம் இருமுதலாகலையே எடுத்தோதிற்று, சிவப்பிரகாசச் சுருதியோ வெனின், ஞானம் இருமுதலாமென்றும், நிர்வசனம் பண்ணுமுகத்தானே அவ்விருமுதன் ஞானங்களும் கேட்டன் முதல் நான்கவாமென்றும், எடுத்தோதிற்று. பௌஷ்கரச்சுருதியின் பொருளையே எடுத்துக்கொண்டு விளங்க உரைத்தலின், சிவப்பிரகாசசுருதி அதற்கு உபபிருங்கணத்துணிபுரையாய் எழுந்ததெனவேண்டும். என்னை? பௌஷ்கரசுருதியில் ஏதத்தென்று பொதுவாகக் கூறியதனைச் சிவாகமமென்று சிறப்பாக எடுத்தோதி, அதற்கு அண்டுப்பெறப்படாத ஞான[2]பிதானத்தைப் பெறுவித்து, அவைதாம் ஒரினமாத றெளிய உயர் ஞானமிரண்டாமென்று நிர்வசனஞ் செய்தமையா லெனக. அற்றேல், பௌஷ்கரச சுருதிக்கு உபபிருங்கணத் துணிபுரையாய் எழுந்த இச்சிவப்பிரகாசச்சுருதி இருமுதன் ஞானங்களும் நான்கவாமென அதனுற்கூறப்படாத பொருளையும் உடன்கொண்டு ஓதியதெற்றிற்கெனின்—நன்றுவினுயினுய். ஞானம் இரண்டாமென்றும நானகாமென்றும முந்து நூல்கள் கூறுதலின், அவைதாம் வேறு வேறுவனவேயோ ஒன்றுவனவேயோ என்று பொருள் ஒருமைகாண மாட்டாது மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது இருமுதன் ஞானங்களே நால்வகை

1. சிவப்பிரகாசம் பாயிரம் கO.
2. அபிதானம்—பெயர்

யாக உரைக்கப்படுமென்று அவற்றின் ஒருமையுணர்த்து தற்கு அவ்வாறுகொண்டோதிற்றென்க. இஃது உணர்ந்து கோடற்கன்றே ஒன்றதனைத் தெளியவோதுஞ் சிவாகம மென்றொழியாது; [1] 'ஓதுஞ்சிவாகம மென்றுலகறியச் செப்புநூலே' என்று மூன்றுநூல்களின் கருத்து ஒருப்படுத்துவார்போன்று அவைதம் மேல் வைத்து ஓதி யருளிய வாற்றினைச் சிறிது புலப்படுத்துவாம்.

ஞானத்தின் பாகுபாடுணர்த்தி யருளுகின்றார் :— உயர்ஞானம் இரண்டாம் என்பது — உயர்ஞானம் பர ஞானம் அபரஞானமென இருமுதலா மென்றவாறு. அது தனக்குயர்ச்சி [2] 'மூந்நிலைக்காலமுந் தோன்றும் இயல்'பிற்றாகலின் உயர்ஞானம் நிகழ்கால வினைத்தொகை. இனி அவைதாம இவையென நிர்வசனஞ் செய்தருளுகின்றார். " மாறுமலமகலவகலாதுமன்னு போதத்திருவருளொன்று என்பது — [3] பிராரத்தவினை மங்கிப்போயவழியும் மங்காது நின்று உழல்விப்பதாகிய பசுத்துவவாதனை பற்றறக்கழியுமாறு நிலைபெற்றுபகரிக்குந் தெளிதலறிவின் பயனாகி விளங்குந் திருவருண் ஞானம் ஒன்று என்றவாறு. இதன்கண் மாறு மலமகலவகலாது மன்னுபோதம் என்றதனாற்றெளிதலும், அதன் பயனாகிய திருவருண்ஞான மென்றதனால் நிட்டையாகிய அனுபூதியும், பெறப்படும். ஈண்டுமலமென்றது பசுத்துவவாதனையை. போதத்திருவருள் என்பது —

1. சிவப்பிரகாசம் பாயிரம் ௧0
2. தொல். சொல். வினை. ௪௫
3. சிவஞான சித்தி, கபக்கம் சூத்திரம், திருவிருத்தம் உரை.

போதத்தினது பயனாகிய திருவருளெனவிரியும். [1] ஆறுவது பண்பின் கிழமையும் உணர்ச்சிக் கிழமையும் பற்றிவந்தது. அதனைத் தெளியவோதுஞ் சிவாகமமொன்று என்பது—அத்திருவருண் ஞானத்தினைச் சிந்தித்தற்குச் சாதகமாய் ஓதப்படும் சிவாகமஞானம் மற்றொரு ஞானமாகும் என்றவாறு. இதன்கண் ஓதுஞ்சிவாகமமென்றதனாற் கேட்டலும், தெளியவென்றதனாற் சிந்தனையும் பெறப்படும். தெளிதற்குக் காரணமாகிய சிந்தனையைத் தெளிவெனக் காரியமாகவும் ஓதலின் பயனாகிய கேட்டலை ஓதலெனக் காரணமாகவும் உபசரித்தருளினார். தெளியவோதுமென் புழிச் செயவெனெச்சம் காரியப்பொருளில் வந்தது. ஓதுஞ் சிவாகமம் கருமகருத்தன். இதனால் ஞானசொரூப மிது வென்பதும் அது பரஞானம் அபரஞானமென இரண்டா மாறும் கேட்டன் முதலிய நான்கும் அவற்றின் வகையா மாறுந் தெரிக்கப்பட்டன. இனிப்பரஞானம அபரஞான மென்னும் இருமுதலும் சிவனடியே சிந்திக்கு மென்னுந் திருப்பாட்டில் இங்ஙனம் வகைபெற அருளிச்செய்யப் பட்டவாறும் பிறவுந் தெரிப்பாம்

[2] சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்
உவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்.

என்பது திருப்பாட்டென்னுதலிற்றோவெனின்; ஆளுடையபிள்ளையாருக்குத் தவமின்றியும் ஞானநிகழ்ந்தவா

1. சிவஞானபோதம் பத்தாஞ் சூத்திரம் முதலதிகரணத்து ஏதவின் உரைக் குறிப்பக் காண்க.

2. பெரிய புராணம் திருஞான: திருவிருத்தம் ௭௰

றென்னை என்னுங் கடாவை ஆசங்கித்து அதனைவிடுத்த முகத்தானே அப்பிரானார் உணர்ந்தருளிய ஞானத்தின் பாகுபாடுணர்த்துதனுதலிற்று. இதன்பொருள்;— தவ முதல்வர் சம்பந்தர் தாமென்பது, முற்றவிசேடத்தானே திருஞானசம்பந்தராகி விளங்கும் ஆளுடைய பிள்ளையா ரென்றவாறு. [1]முதல்வர் வினையெச்சமுற்று. ஈண்டுச் செய் தெனச் சங்காரணகாரியப் பொருட்டாய் நின்றது [2]சம் பந்தர் தாமென்பது கட்டுரைச் சுவைபட நின்றது, [3]'வேற்றுமைதாமே' என்புழிப் போல. ஆண்டைப்பன் மைக்கிளவி[4] வழக்கினீங்கிய உயர்சொற் கிளவியாய்ப் பயின்று செய்யுட்கண்ணும் வந்தவாறு. ஆக்கம் தொகுக் கும்வழித் தொகுத்தலாகலின் விரித்துரைக்கப்பட்டது. முதல்வன் பிரளயாகலர்க்குப்போல நாற்றோளும் முக்கண் ணும் கறைமிடறு முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்திநின்ற தன் இயற்கைவடிவே குருவடிவாகக்காட்டி முன்னாக நின்று தத்துவ ஞானத்தினை உபதேசித்துணர்த் தற்கேதுவாம பெருந்தவமென்பார் தவமுத லென்றும், அத்தவமுடையராகிய எதுவாற்றானே திருஞானசம்பந்தரா யினாரென்பார் தவமுதல்வர் சம்பந்தரென்று உடம்பொடு புணர்த்தியும் ஓதியருளினார். அம்முதற் றவமாவது பக் குவமுதிர்ச்சி பற்றிநிகழும் நாலாஞ் சத்திநிபாதமுதிர்வினா னெய்திப் பதினாருவது அவதிக்தாய் நிற்குந்தலைமைச் சிவ புண்ணியமாம். கலிவிருத்தத்தாற் கூறி யருளியதூஉம்

---

1. குறிப்புவினைப் பெயரெச்சமுற் றென்றவாறு
2. உரையிற் கூறப்பட்டதன் விளக்கம்
3. தொல், சொல், வேற்றுமையில் க.
4. தொல், சொல், கிளவி. உஎ.

இஃதுணர்ந்து கோடற்குப்போலும். எனவே ஆளுடைய பிள்ளையாருக்கு முற்றவ விசேடத்தானே சிவஞானம் நிகழ்ந்ததென விடுத்தவாறாயிற்று.

அற்றேல், ஈண்டுச் சகலருள் வைத்துச்[1] சாமுசித்தக ரென்று ஓதியருளிய ஆளுடைய பிள்ளையாரைச் சீகாழி மான்மிய முதலிய சில நூல்கள் சுப்பிரமணியக் கடவுள என்று கூறுதல் மாறுகாதோவெனின்:— ஆகாது; அவை அபரசுப்பிரமணிய மூர்த்தி என்னுங்கருத்தால் அங்ஙனம் ஓதுதலினென்க. சிவஞானபோதச் சிற்றுரையில்[2] ஆளுடையபிள்ளையார் முதலாயினோர்க்குத் தவமின்றியும் ஞான நிகழ்ந்தவாறென்னை என்னுங்கடாவை விடுத்தற்கு மேற் செய்துழி என ஈண்டும் வலியுறுத்தார்" என்று ஓதியருளுதலின், திராவிடமாபாடிய முனிவர் கருத்தும் இதுவே என உணர்க. இதன்றிறமெல்லாம் பராபரசுப்பிரமணிய நிரூபண மென்னுங் கிரந்தத்தில் விரித்துக் கூறுதும். ஆண்டுக்காண்க.

சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் உவமையிலாக் கலைஞானம் என்பது சிவபிரான்றிருவடியையே சிந்தித்தலாகிய திருவை வளர்விக்கும் ஞானமாகிய ஒப்பில்லாத கலைஞான மென்னும் அபர ஞானத்தினையு மென்றவாறு. சிவனருளைச் சிவனடியென்றும கலைஞானத்தினை சிவஞானமென்றும் உபசரித்தருளினர். ஏகாரம் தேற்றப்; பிரிநிலை எனினுமாம், [3]'நின்முகங்காணு மருந்

---

1. மிருகேந்திராகமம் கலாதிபிரகாணம் உ௬, இ-௯0
2. சிவஞானபோதச் சிற்றுரை அ-ம் சூத்திரம். முதலதிகாணம்.
3. கலித்தொகை குறிஞ்சி உ௪.

தினை னென்'னுமால் என்புழிப்போலச் சிந்திக்குந் திருவென்புழிச் சிந்திக்கலைத் திருவென்றருளிச் செய்தாராகலின், வினைகொண்டு முடிந்தது.[1] "குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்" என்பொழிவிவ்விகுதிதொக்கு நின்றவாறு போலப் பெருகுவிக்குமென நிற்கற்பாலது பெருகென விவ்விகுதிதொக்கு நின்றது. ஆண்டுச செய்யுமெனெச்சம் எதுப்பொருட்கண் வந்தது, நோய்தீர்க்கும் மருந்தென் புழிப்போல. வேதசிவாகமங்கள் ஏனைக்கலை ஞானங்கள் போலாது சிவனருளைத்தப்பாதுபயக்குஞ்சாதனமாவதோர் அருட்செல்வ மென்பார் சிவனடியே சிந்திக்குந் திருப் பெருகு சிவஞானம் உவமையிலாக் கலைஞான மென்றும், இவ்வுண்மைக் கேட்டல் சிந்தனையென்னும் அபரஞானம் முத்தியைந்தெழுத்து மூன்றுறக்கொண்டு தத்துவத் தெரி யுந்தனிக கேவல வுணர்வென்பார் சிவஞானமென அத் திருவெழுத்துக் கடலைப்பெய்து சிவஞானமென்றும் ஓதி யருளினார். உவமையின்மையாவது அச்சிறப்பானே அக் கலைஞானர்களின் மேம்பட்டுநிற்றல். எனவே, வேதாகமக் கலைகள் ஏனைக்கலைகளுக்கெனின் உவமையாய் நிலைபெறு மென்றவாறாயிற்று. என்னை? உவமம் [2]"உயர்ந்ததன் மேற்றே" என்பவாகலின். ஈண்டுக் கலைஞானமென்பது முக்கிய விருத்தியினால் முத்தி பஞசாக்கரத்தை யுணர்த்து மேனும், கௌண விருத்தியினால் வேதாகமங்களையும், மற்றைக்கலைஞானங்கள் அனைத்தினையும் உணர்த்துவதாஉ மாம். என்னை? [3]அவையெல்லாம் அதன்பொருட் பரப்

1. திருக்குறள் வெஃகாமை க.
2. தொல், பொருள், உவமவியல் ந.
3. திருவருட்பயன் ௬௬.

பாய் நிற்றலின். சிவஞானமாகிய கலைஞானமென்க. இதன்கட்பெருகுவிக்குஞ் சிவஞானமாகிய கலைஞான மெனவே கேட்டலும், சிவனடியே சிந்திக்குந் திரு வெனவே சிந்தித்தலும் பெறப்படும்

பவமதனையற மாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம் உணர்வரியமெய்ஞ்ஞான மென்பது-பசுத்துவ வாதனையைப் பற்றற நீக்குந்தெளிதலின் மேலாய் விளங்கு ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞான மென்னும் பரஞானத்தினையும் என்றவாறு. ஈண்டுப்பவமென்றது பசுத்துவ வாதனையை. அது பகுதிப்பொருள் விகுதி. பாங்காக நிகழுந் தெளிவைப் பாங்கென்றுபசரித் தருளினார். பாங்காதல் நிட்டையென்னும் அநுபூதி ஞானத்துக்கு அயன்மைத் தாதல். மாற்றும் பாங்கென்பதற்குச் சிந்திக்குந் திரு வென்பதற்கு உரைத்தாங் குரைக்க. பாங்கினிலோங்கிய வென்புழி ஐந்தாவது [1]உறழ்பொருவின்கண் வந்தது, [2]"அறத்தினூஉங்காக்கமு" மென்புழிப்போல் ஆண்டை இல் [3]இன்னுருபின்பொருளில்நின்றது. உணர்வரிய வென் புழி அருமை இன்மைமேனின்றது, [4]"உறற்பால-தீண்டா விடுதலரிது" என்புழிப்போல. பரஞானத்தினை உணர் வரிய மெய்ஞ்ஞான மென்றார், அதனைப்பெற்றார் உணர்ச்சி தேய்ந்து அதுவாய் நிற்றலின். உணர்வரிய என்பதற்குப் பாசஞான பசுஞானங்களானே அறிதற்கரியவென்று

---

1. உறழ்தல்—ஒன்றனின் ஒன்றை மிகுத்தல் (நச்சினார்க் கினியார்) இதனினும இத்தன்மைத்து இது—உறழ்பொரு

2. திருக்குறள்—அறன்வலியுறுத்தல் 2

3. ஐந்தாம் வேற்றுமைப்பொருள்

4. நாலடியார். பழவினை 9.

பொருள் கூறுதலுமொன்று. உணர்வரிய மெய்யென்பது சிவசத்தென்னுந் துணையாய் நின்றது. தெளிதல் நிட்டையென்னும பரஞானத்துள் முன்னதற்குப் பயன் பாசவிடுதி யென்பார் பவமதனையறமாற்றும பாங்கென்றும், பின்னதற்குப் பயன் சிவப்பேறென்பார் உணர் வரிய மெய்யென்றும், ஓதியருளினா ஓங்கிய ஞானமாகிய மெய்ஞ்ஞான மென்க. கலைஞானமும மெய்ஞ்ஞானமுமாகிய அபர பரஞானங்க ளிரண்டினையும் எனமுடிவு செய்க. இரண்டென்னுஞ் செவ்வெண்டொகையோடு உம்மை விகாரத்தாற் றொக்கது.

இதன்கட் பவமதனையறமாற்றும பாங்கெனவே தெளிதலும், உணர்வரிய மெய்ஞ் ஞானமெனவே நிட்டையும பெறப்படும.

நுங்கிலையிலுணர்ந்தா ரென்பது — அங்ஙனம் உபதேச ஞானப்பாலமிர்தம உண்டருளிய மாதநிரையே இடையீடின்றி ஓதாமே உணர்ந்தருளினரென்றவாறு. ஏழாவது [1] வினை செய்யிடத்துக் குறிப்பின்கண் வந்தது

இனித் தாமுணாந்தாரெனப் பிரித்துரைத்து, அரிசி தானே யட்டதென்றாற்போல எளிதினுணர்தலைக்குறித் தாமேயுணர்ந் தருளினரென்றுரைத்தலும ஒன்று. தாண்டுத்தாம்பெயர். இப்பொருட்குத் தேற்றேகாரம்விகாரத் தாற் றொக்கதென்றுகொண்டு விரித்துரைத்துக் கொள்க.

இது தவ முதல்வர் சம்பந்தர்தாம் சிவனடியே சிந்திக்குந் திருபெருகு சிவஞான முவமையிலாக் கலை

---

1. தொல் சொல் [illegible]

ஞானம் பவமதனையறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞான மூணர்வரிய மெஞ்ஞானம் அங்கிலையில் உணர்ந்தாரென இயைந்துகொண்டு கூட்டுப்பொட்டும் நிரனிறை பொருட்கும் இடனுய்நின்றவாறு. சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் உவமையிலாக் கலைஞானம் பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங்கியஞான மூணர்வரிய மெஞ்ஞான மென்புழிப்பினனிலைப் பெயர்கள் பயனிலையாகாமையின்கொண்டுகூட்டேயாம், நிரனிறையன்றென்பாரு முளராலோவெனின்; [1]நிறுத்தசொல்லுங் [2]குறித்துவருகிளவியுமாய் [3]இன்னதிதுவென்பதுபடவரூஉம் பண்புத்தொகைகள் எழுவாய்ப்பொருள்பட வொட்டிநிற்பனவேயாகலின் அப்பின்னிலைப் பெயர்கள் பயனிலையாதல் ஒரு தலையாகலானும், ஆசிரியர் தொல்காப்பியனுர் [4]'நிரனிறுத்தமைத்த நிரனிறைசுண்ணம்-வரைநிலை வைத்த மூன்றலங்கடையே' என்னுஞ் சூத்திரத்து அமைத்த வென்றதனுனே இங்ஙனம் பெயர் நிரனின்று தொக்குமுடிபுகோடலும் பிறவும் அப்பொருள் கோளியலேயா மென்றறிவுறுத்தலானும், அது இருபெயரொட் டிலக்கணமும் நிரனிறைப் பாகுபாடும் நிரனிறையோடுகொண்டு கூட்டிடைப்படும் வேறுபாடு முணராதார் கூற்றேயாமென்று மறுக்க. அற்றேல், ஞானமாகிய ஞானமென்பது நின்றுவற்றும் பிறவெனின்; சிவனடியே சிந்திக்குந் திருவைப்பெருகுவிக்கும் சிவஞானமாகிய உவமையிலாக் கலைஞானமென றும், பவமதனையற

---

1. நிறுத்தசொல்-நிலைமொழி.
2. குறித்துவருகிளவி வருமொழி.
3. தொல் சொல் எச்ச உ௦
4. ஷெ பொருள் உவமவியல் ௩௭,

மாற்றும் பாங்கினிலோங்கிய ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானமென்றும், நுண்ணேக்குப்பொருள் பலவுடைய அடைகொளீஇப் பயன்பெரிது பயந்து இன்னதிது வென் பதுபட இருபெயருமொட்டுதலின், நின்றுவற்றுதல் யாண் டையதெனை மறுக்க. அவையன்னவாதன் முன்னருரைத் தாம்.

இனிப்பாத்தாம் [1]"அந்நிலை மருங்கினற முதலாகிய இம்முதற்பொருட்கு முரியவென்ப" என்பவாகலின் இத் திருப்பாட்டு நோக்குறப்புப் பெரிதுடைத்தாய் [2]'மறுவில் கொள்கை மூவகைக்காலமும் நெறியினாற்றியவறிவன்றே யத்" தாகிப் பத்துங்குணனு மொய்த்துப்பயின்று அறப் பயனாகிய / வீடுபேற்றுணர்வுக் குரித்தாய்வந்த வாகைப் பாடாண்பாட்டென் றுணர்க.

இனிச்சிவனடியையே சிந்தித்தலாகிய திருவைவளர் விக்கும் ஞானமாகிய ஒப்பில்லாத கலைஞானமெனக் கேட் டலையும் சிந்தித்தலையும் ஒருதொடர்பாக ஓதவே அவை இரண்டும் அபரஞானமென ஒன்றுமென்பதூஉம். பசுத் துவ வாதனையைப் பற்றற ஒழிக்குந் தெளிதலின்மேலாய் விளங்கும் ஞானமாகிய உணர்வரிய மெய்ஞ்ஞானமெனத் தெளிதலையும் நிட்டையையும் ஒருதொடராக ஓதவே அவையிரண்டும் பரஞானமென ஒன்றுமென்பதூஉம் போந்தவா றுணர்க.

---

1. ௷ ௷ செய்யுளில் ௱௬.

2. தொல். பொருள். புறத்திணையியல் 20. 'மறுவில் செய்தி' என்பது அச்சுப்பிரதிகளிற் கண்டபாடம்.

அற்றேலஃதங்ஙனமாக; கேட்டன் முதலிய நான்கும் ஞானப்பகுதிகளாகவும், அவை தம்முள் முன்னிரண்டையும் அபரஞானமென்றும், பின்னிரண்டையும் பரஞானமென்றும், ஓதியதெற்றுக்கெனின்,—கேட்டலும் சிந்தித்தலும் நூலும் அருளும் பற்றுக்கோடாக நிகழ்தலானும், அங்ஙனம் ஓதுவாராயிற்றென்பது. கேட்டற்குப் போலச் சிந்தித்தற்கும் நூல்வேண்டுமென்பதும், தெளிதற்கும் நிட்டைக்கும் நூல் வேண்டாமென்பதும், [1]"தெளிதற்கும் நிட்டைக்கும் நூல்வேண்டாமையின் நூலாராய்தற்பாலன வாய வினை ஐந்துமே ஈண்டு வேள்வி யென்றெடுத்துக் கொள்ளப்பட்டன" என்று திராவிடமாபாடிய முனிவர் கூறுமாற்றானுமுணர்க. அபரோக்ஷஞான மென்றும், பரோக்ஷஞானமென்றும் ஞானங்களைத் தினையும்; இங்ஙனம் இரு முதலில் அடக்கிக்கொண் டோதுதலின், வேதாந்த நூல்களுக்கும் இக்கருத் துடன்பாடாதல் பெற்றும். அஃதேல் நிட்டையாகிய அனுபூதிஞானம் இறுதிச்சாத்தியமாய் நிற்றலின் அதில் அதன் சாதனமாய் தெளிதலடங்கிப் பரஞானமென ஒன்றாமென்றல் பொருந்தும்; கேட்டலாகிய கலைஞான சாதனத்தில் அதன் சாத்தியமானசிந்தனை அடங்கி அபரஞானமென ஒன்றா மென்றல் செல்லாதாலோ வெனின்;—அறியாதுகடாயினாய். அதன்கண் அது அடங்கி ஒன்றாமென்றகருத்து — நூல்பற்றுக்கோடாக நிகழும் ஒப்புமைபற்றி ஓரினமாம் என்பதே யாகலின், அதுசெல்லாமை யாண்டையதென்க. இனிக்கேட்டற்குப் போலச்

1. சிவஞானசித்தியார் அம். சூத்திரம். திருவிருத்தம் உடன் உரை,

சிந்தித்தற்கு நூல்பெரிது வேண்டாமையின் [1]கேட்டலை விந்துஞானமென்றும், சிந்தித்தவாறே இடையீடின்றித் தெளிவுநிகழ்தலின் அவ்விரண்டினையும் பாவனஞான மென்றும், சாத்தியமாய் முற்றிநிலைபெறுதலின் நிட்டையை அனுபூதிஞானமென்றும் கூறுபவெனவுமுணர்க. இங்ஙனங் கூறவே, சிவஞானந் தொகையா னொன்றாயும் [2]வகையா னிரண்டாயும் விரியான்மூன்றாயும் நான்காயுநிற்கு மென்பது தானே போதரும். இன்னும் அதுவே சுத்தாவத்தைப் பற்றி ஐந்தாயும், உபாயம் உண்மை என்னும் வேறு பாட்டாற் சரியை முதனான்கும் பற்றி எட்டாயும், தசகாரியம்பற்றிப் பத்தாயும், மேற்கூறிய எட்டுநிலனும் ஒரோவொன்று நந்நான்கா முறைபற்றி முப்பானிரண்டாயும் விரிந்தும் [illegible]ரும். மேலும் விரிக்கிற் பெருகுமென்க. இவை எல்லாம் அவ்விருமுதன் ஞானங்களுள் அடங்குவனவேயாம். அற்றாகலினன்றே ஞானம் இரண்டா மென்றது உயர் ஞானம் இரண்டாமென்று விதந்தோதியருளியதூஉ மென்க. ஈண்டு உயர்ச்சி ஞானப்பகுதிகளெல்லாம் தம்முள்ளடங்கத் தாம் அவற்றுளடங்காது வியாபித்து நிற்றலாம்.

---

1. சிவஞானசித்தி. பதினொராஞ்சூத்திரம். திருவிருத்தம் உள் உரை.

2. இரண்டு-பரம், அபரம். மூன்று-விந்து. ஞானம் பாவன ஞானம் அநுபூதி ஞானம். நான்கு-சரியாதி. ஐந்து-சுத்த சாக்கிராதி. எட்டு-உபயச் சரியாதி உண்மைச் சரியாதி. பத்து-தத்துவ ரூபமுதல் சிவபோக முடியவுள்ளவை. முப்பானிரண்டு-உபாயச் சரியாதி எட்டும் தனித்தனி சரியாதியால் உறழவருவன.

இனி அவர் இத்திருப்பாட்டிற்கு இவ்வாறன்றி கேட்டன் முதலிய ஞானப்பகுதி நான்கனையும் முக்கியப்பொருளாகக்கொண்டு இடர்ப்படுப்பொருட்பேறுகற்பித்தொழிவர் அஃது ஆசிரியருக்குக் கருத்தாயின் உவமையிலாக்கலைஞானம் சிவனடியே சிந்திக்குந்திருஞானம், பவமதனையறமாற்றும் பாங்குஞானம், உணர்வரிய மெஞ்ஞானமென்று முறையான் விளங்கவைத்து [1] ஓதியருளுவார்மன். அவ்வாறோதாமையானும், திருப்பெருகு சிவஞானம் உவமையிலாக்கலைஞான மென்றும் பாங்கினிலோங்கிய ஞானம் உணர்வரிய மெஞ்ஞானமென்றும் நிரையாகவைத்து விசேடணவிசேடியமாகப் பொருள்கொள்ள ஓதியருளினமையானும், சிந்தித்தல் தெளிதல் கேட்டல் நிட்டை எனத் தலைதடுமாறச் செய்தலான் ஒரு பயன் போதராமையானும், புராணத்துள் அங்ஙனம் வந்த வழிமொழியின்மையானும் அதுபோலி யுரையென மறுக்க. அல்லதூஉம் பெருகுவித்தலென்னும் வினைக்கட் சிந்திக்குந் திருவென்பது செயப்படு பொருளாம். செயப்படுபொருட்கு வினைமுதல் வேறேயாகலின், அவ்வினைமுதலாய் நிற்குஞ் சிவஞானம் அதனின் வேறெனவேபடும். அங்ஙனமே ஓங்குதலென்னும் உறழ்ச்சிக்கண் பவமதனையறமாற்றும் பாங்கென்பது இதனினென்னும் உறழப்படு பொருளாம். [2] இதனினென்னும் உறழப்படு பொருட்கு இற்றென்னும் உறழ்பொருள் வேறேயாகலின் இற்றென்னும் அவ்வுறழும்பொருளாய் நிற்குஞ்ஞானம் அதனின் வேறெனவேபடும்.

---

1. மன்னைச் சொல் ஒழியிசை குறித்து நின்றது.

2. 'இதனினிற்றிது' என்பது தொல் சொல் வேற்றுமையியல் ௧௬.

ஆதலின், அவை முறையே கலைஞானம் மெய்ஞ்ஞானம் என்பவற்றின் விசேடணங்களேயா மென்பது. இத்தொடர்கள் வேறாற்றானும் விரிக்கப்படும் பிறவெனின்;- அவ்வாறு இடர்ப்பட்டு விரித்தற் பயப்பதூஉம் இப் போலியுரையேயாதலின். அவை பிறவாற்றான் விரிக்கப் படாவென மறுக்க.

அற்றேல், உவமையிலாக் கலைஞானம் சிவனடியே சிந்திக்குந் திருஞானம் பவமதனை யறமாற்றும் பாங்கு ஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் எனமுறை தெரித் தோதின் அப்பொருள் போதராவோவெனின்:— போத ராவன்றே; என்னை? இந்நான்கும் ஆற்றொழுக்கா ஞேதுத லானே கேட்டன் முதலிய நான்கு ஞானங்களும் உணர்ந் தருளினுமென்னும் பொருளே போதரு மல்லது ஞானம் பரம்பரமென இருமுதலாமென்பதூஉம் இந்நான்கும் அவ் விரண்டின் வகையாமென்பதூஉம் பிறவும் ஆண்டு அதனாற் பெறப்படாமையின். அல்லதூஉம், கேட்டன் முதலிய ஞானப்பகுதிகள் நான்கனையும் பிறவாற்றான் வரும் ஞானப் பகுதிகள் பலவற்றையும் தட்டுடகொண்டு வியாபகமாய் நிற்குா விழுப்பமுடைய அவ்விருமுதன் ஞானங்களையும் உணர்ந்தருளினுமென்னும் பிரபலப்பொருள் ஆண்டோது தற் பாலதாய்ச் சிறந்து நிற்கவும், அதனை யொதுக்கி இரு முதன் ஞானங்களையும் அடக்குமாற்றலின்றி அவற்றின் பகுதியாய் அடங்குதன் மேலும ஞானப்பகுதி பலவற்றை யும அடக்குமாற்றல் அனைபோல இனிதுடைய வாகாமே நிற்கும் அந்நான்கினையு முணர்ந் தருளினுமென்னும் வியாப் பியப் பொருளை ஆண்டோதியருள ஆசிரியர் ஒருப்படா ரென்று முரைக்க அல்லதூஉம், அதுமயங்குதற்கிடனுமா

மென்க. அது மயங்குதற்கிடனாதல் யாங்ஙனமெனின்:— அது மேலுரைத்தாம். கடைப்பிடிக்க.

அற்றேல், அப்பொருளெல்லாம் போதரச் சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் உவமையிலாக் கலைஞான மென்றும், பவமதனை யறமாற்றும் பாங்கினி லோங்கிய ஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞான மென்றும் அற்றொழுங்காற்கூற வமையும்; நிரனிறையாற்கூறல் வேண்டாவெனின்; அற்றன்று. அங்ஙனம் அற்றொழுக்குப் பொருள்கோள்படக் கூறலான் அவைபோதருமேனும் அக்கூற்று உறுநோக்கின்றி வெற்றெனத்தொடுத்தலின் உறுநோக்குடைத்தாய் அப்பொருள் கிடக்கவைத்தலாற் செய்யுள் சிறப்புறுதல் நோக்கி நிரனிறையாற் கூறியருளலை வேண்டினார் ஆசிரியர் ஆகலின், அதுகன்றுற் கூறுதல் ஒரு தலையான் வேண்டற்பாற்றேயாமென்க. மற்று எப்பொருளும் அப்பொருள்கோளாற் கூறவே அமையுமெனின், அஃதல்லாப் பொருள்கோள் பல கூறிப்பயந்ததிலராவர் தொல்லாசிரியரென்றுஞ் சொல்லிமறுக்க. இதனானே அத்திருப்பாட்டிற்கு வேறுநான்கு ஞானங் கூறுவார் கூற்று மறுக்கப்பட்டவாறு முணர்க. இனி அவர் இப்பெற்றியெல்லாம் அறியமாட்டாமையால் இரண்டாக ஓதற்பாலதனை நான்காக ஓதின் ஆசிரியர்க்கு மிகை என்னுங்குற்றமா மென்று [1]கொன்னேபுலம்பி யொழிந்தாரென்க.

ஈண்டுக்கூறிய வாற்றால் அபரஞானம் பரஞான மிரண்டனையுமே ஆசிரியர் ஆண்டுமுறையே கலைஞானமென்றும்

1. கொன்னே—பயப்பாடின்றி.

மெய்ஞ்ஞானமென்றும் முக்கியப்பொருளாக வகைபெற அருளிச்செய்தனவென்பது வச்சிரலேபமாக காட்டப்பட்டது படவே, பரம அபரம் என்னும் ஞானங்கள் ஸ்ரீ சேக்கிழார் ஞானச்செய்யுளில் சேர்ந்த அமைமயாமென்னும் அவர்கூற்று ஊகமில்லாத மடமேவார் கூற்றேயாய் ஒழிந்ததென்க.

இம்முறை சிவனிறைப் பொருளே அக்கூற்றிற்படும் முக்கிய பொருளென்பது, "என்னையுமுன்னையுந் தன்னையுங் காட்டா நிற்குமவிடயமே காட்டியியல் வினைமாயை யிரண்டையுமென்னுமிணைசகிய வாணவ மலத்தின், றன்னுருவழி நின் சத்தியை நடாத்தித் தருமதன் சத்திகளெல்லாந் தயங்குநின் னுருவமுன் றினுள் மாற்றித் தாணிழறந்து காத்தனையே, கன்னலங்கழனிக் காழி மாநகரிற்கவுணிய னிரண்டு ஞானமுமே. கற்றிடா தணரவீர்ந்திடைபோகாக் கதிர்முலைப்பால் சுரந்தளித்த, வன்னை தன்பகவாந் தன்மையையகற்றி யாதரித்தருள் கொடுத்தவனே யாவது அம்மைநமையம்பலவாற்ற வழியவாம் நருநேசா நிதியே" என்று [1] திருக்கழுநெடலென்னும் ஞானநூலுள் உலகுடையநாயனார் கூறியருளிய திருவாக்கானும் உணர்க. இனித் தவமுதல்வர் சம்பந்தரென்னு ஞானவேதக் கூற்றுளப்பட இவ்விரண்டும் அத்திருப்பாட்டின் முக்கிய அதிகாரப்பொருள்களென்றும், ஏனைய இவற்றின் வழிப்படுதலின் அதனுட்படு பொருள்களென்றும், நுண்ணுணர்வாற் கண்டுகொள்க. இனி மேற்செல்வாம்.

1. திருக்கழிநெடில் எ.

"மேவருஞான மிரண்டவற்றொன்று விமலனார்பாத தாமரையே, யோவறுமன்பினுணர் திருவளிக்கு மொப்பிலாவுயர் கலைஞானந், தாவருந்பவத்தை வேரொடுங்களையுந் தக்கமெய்ஞ் ஞானமொன்றிவற்றாற், சாவதும் பிறப்புந் தணப்புறச்சிவத்தைச் சார்ந்தது வாய்மிற்றல் யோகம்" என்னும் [1]திருத்தணிகைபுராணச் செய்யுள், சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம் உவமையிலாதகலைஞானமென்பன ஒருதொடரென்பதறிவித்தற்கு ஒன்றுவிமலனார்பாததாமரையே ஓவறுமன்பினுணர் திருவளிக்கு மொப்பிலாவுயர் கலைஞானம் என்றும், பவமதனையறமாற்றும் பாங்கினிலோங்கிய ஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் என்பன ஒருதொடரென்ப தறிவித்தற்குத் தாவரும்பவத்தை வேரொடுங்களையுந் தக்க மெய்ஞ்ஞானம் ஒன்று என்றார், அங்ஙனப்போந்த சொற்பொருளை வாங்கிக் கூறிற்றாகலின், அப்பெரியபுராணத் திருப்பாட்டின் பொருளைக் கசடறவுணர்த்தும் [2]உபபிருங்கணமேயாம். வேதாகமவசனங்கள் மெய்ப்பொருள் இதுவெனத் தெற்றென அறியவாராது பல பொருள்படப் பொதுமையினின்றக்கால், முனிவர்கள் மெய்ப் பொருள் இதுவென்பது தோன்ற அங்ஙனங்கிடந்தபடி அவற்றைத் தந்தம நூல்களில் வாங்கி உபபிருங்கணமாகக்கூறி விளக்கிப் போவர். அது போலவே, அருண்மொழித் தேவர் சிவனடியே யென்னுந் திருப்பாட்டில் கூறியருளிய பரம்பர ஞானங்களேயோ அவற்றின் வேறானவேயோ என்று

---

1. தணிகைப்புராணம். அகத்தியனருள் பெறுபடலம்.

353

2. இஃது அடுத்த வாக்கியத்தால் விளக்கப்படுகிறது.

பயக்குமெய்ப்புத்தியுடையார்க்கு நூற்கலைஞானம் தன் பய னாகிய சிந்தனையினாலும் மெய்ஞ்ஞானம் தன்சாதனமாய தெளிதலானும் விசேடிக்கப்பட்டு ஆண்டு முறையாக நிலை பெறுகின்றன என்று அறிவுறுத்தற் பொருட்டுக் கச்சி யப்ப முனிவர் அவற்றினை உபபிருங்கணமாக அவ்வுப தேசவுரையில் வாங்கிக்கூறி விளக்கிப் போயினரென் றுணர்க. அவரைத்துணையாது சேக்கிழார் ஞானம் நான் காகக்கூறினார்: [1] தம்பிரான் ஞானமிரண்டாகச்சொற்றார்; அதனால் அதற்கு இது நுணிபுரையாகாதெனத் தமக்குத் தோன்றியவாறு பயனில்லனபல பாராட்டி விடுத்தார். அவர் இரண்டு ஞானத்தில் நான்கு ஞானம் அடங்கா வென்றது இரண்டில நான்கு அடங்காவென்னும் கணித ஞானங்கொண்டு போலும். இக்கணித ஞானங்கொண்டு ஒன்றாயுள்ள மாயையில் பலவாகிய தத்துவ தாத் துவிகங்கள் அடங்காவென்றும் ஒன்றாயுள்ள பராசத்தி யில் பலவாகிய சத்திபேதங்கள் அடங்காவென்றும், இங்ஙனங் கூறவும் முயல்வர்போலும் இனி மேல்நடப் பாம்.

[2] "புடைத்தனுஞான போனக முண்டதோன்ற லோரான்றபல் கலைத ளிடைப்புணர் ஞானந் தோய்ந்து தோய்வின்றி யெவ்வுயிர்க் கண்ணுமோர் நிலையே படைத் தளித்தழிக்கு நிறைபரம்பொருளுட் படிரு ஞானமு

---

1. தணிகைப்புராண ஆசிரியர் ஸ்ரீமக் கச்சியப்ப முனிவர்.

2. சீகாழித்தல புராணம். திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருவவதார 11.

மாங்கே, கிடைத்தன ரொருகன்றாதையு மாங்கே கிட்டி
ஞர் சிறிதுளம் வெருண்டு" என்றுஞ் சீகாழிப் புராணச்
செய்யுள் அப்பெரிய புராணத் திருப்பாட்டின் பொருளைச்
சாதிக்கும் உபபிருங்கண மாகாது-என்றார் அஃதானும்
அப்பெரிய புராணத் திருப்பாட்டின் பொருளை அவ்வாறு
வாங்கிக்கூறி அதற்கு உபபிருங்கணமாகியே நிலைபெறுவ
தாம். யாங்ஙனமெனின்;— கூறுதும்: இதன்பொருள் —
ஞானபோனகமுண்ட தோன்றலா ரென்பது—உபதேச
ஞானப் பாலமுதுண்டருளிய ஆளுடைய பிள்ளையார் அங்
கேயென்பது — அவ்வுபதேச ஞானப்பாலமுதுண்டருளிய
மாத்திரையே—ஆன்ற பல்கலைகளிடைப் புணர்ஞானம்
என்பது—விரிந்த வேதாகம முதலிய பலகலைகள் பற்றுக்
கோடாக விளங்கும் கேட்டல் சிந்தித்தல் எனனும் அபர
ஞானங்க ளிரண்டினையும் - எவ்வுயிர்கண்ணும் ஓர் நிலையே
நிறை என்பது—எல்லா உயிர்களிடத்தும் ஒரு பெற்றி
யாகவே கலந்து நிறைகின்ற-படைத் தளித்தழிக்கும் பரம்
பொருளுள் என்பது-படைத்தும், காத்தும், துடைத்தும்
அனுக்கிரகிக்கின்ற பரம்பொருளாகிய சிவபிரானது சீபாத
நிழலின் கீழ்—தோய்ந்து தோய்வின்றிப் படரிரு ஞான
மும் என்பது — பசுத்துவ வாதனை பற்றியும் பற்றாதுங்
கலந்து விரியுந் தெளிதலும நிட்டையுமாகிய பரஞானங்
கள் இரண்டினையும்-கிடைத்தனர் என்பது-இடையீடின்றி
ஓதாமே யுணர்ந்தருளினரென்றவாறு. இரண்டு என்னுஞ்
செவ்வெண்டொகையோடு உம்மை விகாரத்தாற் றொக்
கது நிறைபரம்பொருள் படைத்தளித்தழிக்கும் பரம்
பொருள்ளனத் தனித்தனி சென்றியையும். தோய்ந்து
படர்ஞானம் தோயாது படர்ஞானம் என்க இனி மெய்ஞ்

ஞானமும் என்பது பாடமாயின், ஆன்ற பல்கலைகளிடைப் புணர்ஞானத்தோடு மெய்ஞ்ஞானத்தினையுங் கிடைத்தனர் என்று உரைக்க. ஈண்டு ஆன்ற பல்கலைகளிடைப் புணர் ஞானம் மெய்ஞ்ஞானம் என்பன முறையே அபரஞானமும் பரஞானமும் ஆம் என்பது மேலுரைத்த வாற்றாற் கடைப்பிடிக்க. இதன்கண் ஆன்றபல்கலைகளிடைப்புணர் ஞானம் எனவே கேட்டல் சிந்தித்தலும், தோய்ந்து தோயாதுபடர்ஞானம் எனவே தெளிதல் நிட்டையும் பெறப்படுமாறு காண்க. இப்பொருட்கும் இரண்டென்னும் செவ்வெண்டொகையோடு உம்மை விகாரத்தாற்றொக்கதென்க. எண்ணும்மையும் அற்று. மற்றை உம்மை சிறப்பும் எண்ணுமாம். இச்செய்யுட்கு இவ்வாறு செம்பொருள் கொள்ள அறியாது இடர்ப்பட்டுத் தமக்குத் தோன்றிய வாறெல்லாம் விருத்தப் பொருள் கூறியொழிந்தார். அது நிற்க

அவர் ஞானம் கேட்டன்முதல் நான்காமென்பதற்கு மேற்கோளாகக் "கேட்டலுடன் சிந்தித்தறெளிதனிட்டை கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கின்ஞானம" என்னுஞ் [1]சிவஞான சித்திச் சுருதியை யெடுத்துக்காட்டினர். இச் சுருதியில் கேட்டல் சிந்தித்தல் இரண்டு மோரினமாமென்றுணர்த்துதற்குக் 'கேட்டலுடன் சிந்தித்த'லென்று அவையிரண்டையுமுடன் கொடுத்துக் கூட்டியுரைத்து அங்ஙனம் உரைக்கு முகத்தானே மற்றைத்தெளிதல் நிட்டை இரண்டும் மற்றோரினமாமென்று ஆசிரியர் அறிய வைத்தமையானும், இதற்கும் பெரியபுராணத் திருப்பாட்டின் முக்கியப்

1. சிவஞான சித்தி. எட்டாஞ்சூத்திரம் திருவிருத்தம் உச

பொருட்டும் யாகோரிமையும் இல்லையாயினார், அந்த
அவர்கட்கு இவ்விட ¹விகாதம்பண்ணி நயக்கே பலக்கும்
மென்க. கிரியைகூட்டாற்றி ஞானமாமென்ப தறிவிக்கற்குக்
“ கிரியாயோக ” மென அவ்விரண்டினையுஞ் ²சமாசனைக்கி
³முதனூலாசிரியரும் ⁴புடைநூலாசிரியரும் ⁵முதனூலுள்
ளும் ⁶புடைநூலுள்ளும் இவ்வாறு ஓதியருளியதாலுங்
காண்க. இங்ஙனமாகலின், அச்சுருதிகொண்டு பெரிய
புராணத் திருப்பாட்டிற்கு நான்கு ஞானமுணர்த்தி நாட்
டப்புகுந்த அவரது சபரிமம் வாளாபோயிற்றென்க.
இச்சுருதிக்கு அத்திருப்பாட்டின் முக்கியப்பொருட்கும்
இயைபின்மை மேற்கடாவிடைகளான் விளங்கக்கூறினும்.
கடைப்பிடிக்க. வேதாகமங்கள் சிரவணம் மநநம் நிதித்தி
யாசனம் சமாதியெனப் பிரசித்தமாகக்கூறும் ஞானப்
பகுதிகள் நான்கு: ஞான நூலாராய்ச்சி யுடையார்க்கெல்
லாம் வெள்ளிடைமலை போலத் தெளிவின் அறியக்கிடக்
கும்[7] விழுப்பொருள்களேயாம். இங்ஙனமாகவும், எவரோ
ஞானம் நான்கு யாண்டுங்கண்டதுமில்லை கேட்டதுமில்லை
யென்று சொற்றொன்றும், தாம் சிவஞானசித்தியில் அந்த
கண்டு எடுத்துக்காட்டி நால்வகை ஞானம் காட்ட எழல்
வேண்டிற்றென்றும், அவர்பெருமிதப்பாராட்டியது அம்
மம்ம சாலவும் வியக்கற்பாலதேயாம்!

1. விகாதம—அழிவு
2. சமாசன்—தொகை
3. ஸ்ரீ மெய்கண்டதேவ நாயனார்
4. ஸ்ரீ உமாபதி சிவாசாரியார்
5 சிவஞானபோதம் ௩ம் சூத்திரத்து முதலதிகரணவேது
6 சிவப்பிரகாசம்—பாயிரம் கம
7. விழும்பொருள்—சிறந்த பொருள்.

பெரியபுராணத் திருப்பாட்டில் ஆசிரியர் வெகுபிரபலார்த்தங்கள் சித்திக்கும்படி வைத்தருளிய முறைநிரை நிறைச் செம்பொருளின் உண்மைகாணமாட்டாது. அதனை ஒழுகவிட்டுச் சிந்தித்தல் தெளிதல் கேட்டல் நிட்டை என்று குளறுபடையாக வெறும்போலிப்பொருள் கொண்டாராகலானும், அக்குளறு பாட்டினை ஸ்தாபிக்கும் பொருட்டு ஞானபேதவிளக்கத்தும் ஆசாரியப்பிரபாவத்தும் கூரேசவிசயபங்கத்துப் போலி உரைகள் பலபகர்ந்தாராகலானும் அவர் கூறிய குளறுபடைஞான முதலிய தையறியாமை அவரையே சாருமென்க. இன்னும் பழித்துரையும் தருக்குரையும் அவர் தம்பேத விளக்கத்தின் மிகுத்துரைத்தார் அது தோல்வித்தானம் எய்தும் வாதி கதையாகலானும் பயனொன்று படாமையானும் யாம் அவற்றை மறுத்துரையாம். இனி அமைக

இதுகாறுங் கூறிப்போந்த நியாயங்களானே அவர் உரை பூர்வபக்கமே யென்பதும் யாங்கூறிய முறைநிரனிறைச் செம் பொருளும் பிறவும் ஆசிரியர் திருவுளக்கருத்தாகியமைந்த சித்தாந்தப் பொருளென்பதும் தெற்றெனப் புலப்படுதலின், நல்லோர் இப்பொருளே கொண்டு மகிழ்வரென்க.

இனி அவர் மெய்ப்பொருள்காண்பது கடனென்று சமநிலை நின்று இலக்கணவரம்புபற்றிக்கூறிய நியாய உரைகளை மனம்பற்றி யுணர வொருப்படுவரேல், தாம் கூறிய உரை போலி உரைஎன்றும் நாங்கூறியஉரை மெய்யுரை என்றும் அத்திருப் பாட்டிற்கு மெய்யுரை பெற்றோமென்றும் மகிழ்ச்சியுறுதன் மேலும் தந் தவற்றிற்கு இரங்கு

தலுஞ்செய்வர். இங்ஙனம் மெய்யுணர ஒருப்படமாட்டா ராய்த் துரபிமானந் துரப்பத்துரப்புண்டு கொண்டது விடாது சாதிப்பாமென்று தருக்கி விதர்க்கம் விளைத்துப் பழித்துரை மிகுத்துரைக்கலுறுவரேல், உண்மை நூலின் மெய்ப்பொருளை எண்ணெழுத்துக் கண்கொண்டு தாமே யுமறியுமறிவின் மதுகை பெற்றுடையரல்லர்; அறிந்தார் கொளுத்தக்கொள்ளும் சமநிலையோடு பட்டியலும் அறி வுவாயிலும் பெற்றுடையரல்லர்; இவர் அறிவின்பெற்றி எற்றெற்றென்று நல்லோர் எள்ளி நகையாடிடப்படுவர் என்க. அற்றாக; அவர் கொள்ளுமாற்றான் மீட்டும் கொளுத்தலுறாமோ வெனின், கொளுத்தலுறாமன்றே; என்னை? [1] "உணர்ச்சிவாயிலுணர்வோர் வலித்தே" என் றும், [2] 'தக்கன்பான்ஞானத் ததீசியுபதேசமெல்லாந், தொக்கதனாலாவதென்னை சோமேசா—மிக்குக், களித தானைக் காரணங்காட்டுதல் கீழ்நீர்க்குளித்தானைத்தீத்துரீ இயற்று" என்றும், ஓதியருளுபவாகலின என்க. அற்றாக, பழித்துரை களையாவழிப்படுமேதமும் உண்டாகலின் அது களையா தடங்குதல் செயற்பாற்றன்றெனின்,— ஒருவர் ஒள்ளறிவுடையராய்நின்று எள்ளுரையே யேதம் பயப்ப வாகலின் அவைதம்மை நியாயப்படைகொண்டு களைதல் ஒருதலை யான் வேண்டற்பாற்றேயாம். வெள்ளறிவுடைய ராய் நின்று எள்ளுரை அவர்தம் தோல்வித் தானத்தை வெளிப்படுத்துதலல்லது எள்ளப்படுவார்க்குச் செய்யு மேதமொன்றில்லாமை யானும், அவர் பழித்துரைபொ

1. தொல். சொல். உரி ௩௰.
2. சோமேசர் முதுமொழிவெண்பா ௩௨.

ழுத்தல் அறனாய்ச் சிறக்குமென் பவாகலானும், அவர் பழித்துரைகளை நியாயங்கொண்டு களைய முயறலானும்; அணிகலனெனக்கொண்டு வந்தடங்குதலைசெய்வாமென்க அல்லதூஉம், நாம் [1] 'வாதுசெய்யும் பூசலுக் கெதிராகக் கடவமன்றித் [1] 'தீயவாய் திறந்தவையும் பூசலுக் கெதிராகக் கடவமல்லேல, மென்றுஞ்சொல்க.

என்றுமின்பம் பெருகுமியல்பினா
லொன்றுகாதலினுள்ளமுமோங்கிட
மன்றுளாரடி யாரவர்வான் புகழ்
நின்றதெங்குநிலவியுலகெலாம்.

வைய நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க.
சிவஞானயோகிகள் திருவடி வாழ்க.

ஞானசூடாமணி

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

1. திருவிளையாடற்புராணம் இசைவாதுவென்ற படலம் ௧௫.

# ஆதீன வெளியீடுகள்.

---

1. பஞ்சாக்கர தேசிகர்மாலை - உரையுடன்.
2. ஞானபூசாவிதி - பழையவுரையுடன்.
3. கல்லூர் மாசி மகோற்சவ வைபவம்.
4. மண்ணிப் படிக்கரை ஸ்தல மாகாத்மியம்.
5. காருண்யாமிர்த தீர்த்த மகிமை.
6. இராமாயண தாற்பரிய சங்கிரகம் உரையுடன்.
7. ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள்மீது
   தோத்திரப்பா (முதற்பாகம்) - உரையு
8. சிவஞானபோதம் - சூத்திரமூலமும - உரையும்.
9. சித்தாந்தமரபு, சித்தாந்தமரபு கண்டனம்,
   சித்தாந்தமரபு கண்டனகண்டனம் - குறிப்பு
10. நமசிவாயமூர்த்தி மும்மணிக்கோவை.
11. திருநெல்வேலித் தேவாரப்பதிகம் - உரையுடன்.
12. ஸ்ரீமத் மாதவச் சிவஞான சுவாமிகள்மீது
    தோத்திரப்பா (இரண்டாம் பாகம்) உரையு
13. சைவ சமயம்.
14. பஞ்சாக்கர தேசிகர் அந்தாதி-உரையுடன.
15. சித்தாந்தப் பிரகாசிகை - குறிப்புடன்.
16. சுதந்திரத் திருநாள்.
17. கச்சி ஆனந்தருத்திரேசர் வண்டுவிடுதூது.
    டாக்டர் உ. வே. சாமிநாதய்யரவர்கள் - உரை
18. திருச்செந்தூர்-கடற்கரை முருகர்கோயில் (ஆங்.
19. ஞானசூடாமணி.
20. சிவஞானபோதம் -
    ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் சிற்.
21. சுவாமிநாத தேசிகர் பிரபந்தத் திரட்டு.

+ இக்குறியிட்டவை கையிருப்பிலில்லை

தமிழ் மகள்—அணி—1.

# ஸ்ரீ சுந்தரமூர்த்தி

(தடுத்தாட்கொள்ளப் பெறுதல்.)



ஈசனருளை எடுத்துக்காட்டிட

ஓர்

## இனிய நாடகம்



சென்னை சூளை

ஸ்வாமி விவேகாநந்த ஹிந்துபாலிகா பாடசாலை

தலைமை உபாத்தியாயர்

சே. மு. வேலுமுதலியார்

இயற்றியது.

முதற் பதிப்பு - 1000.

தமிழ்க்கல்வி வளர்சங்கம்,

சூளை, சென்னை.

1916



[விலை அணா - 2½.

*T. Chelvakesavaroya Mudaliyar,* M.

PERAMBUR.

*Madras N 9th October* 191

சுந்தரமூர்த்தி நாயனார் புராணத்தில் உயிர்நிலையான பகுதியைப் பாலரும் பாலிகைகளும் படித்தும் நடித்தும் நடிக்கக் கண்டும் ஆநந்தமடையுமாறு மூன்று களமுள்ளதாய் இயற்றியுள்ள ஸ்ரீ சுந்தரமூர்த்தி என்னும் சிறிய நாடகத்தைப் படித்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன் அச்சம் வியப்பு உருத்திரம் நகை என்னும் சுவைகள் இனிதமைந்துள்ள இந்நாடகத்தை இயற்றிய ஸ்ரீமாந் வேலுமுதலியார், இங்ஙனமே பக்திரசம் ஒழுகும் வேறு சில திருத்தொண்டர்களுடைய புராணங்களையும் நாடகமாக அமைத்துதவி எல்லோரையும் மகிழ்விப்பாரென்று எதிர்பார்க்கிறேன்.

தி. செல்வக்கேசவராயன்.

பச்சையப்பன் கல்லூரி.

# முகவுரை.

பெரும்பாலும் பாடசாலைகளில் மத சம்பந்தமான படிப்பின்மையால், சிறுவர்கள் தம்தம் மதவிஷயங்களை அறிந்துகொள்ளக் கூடாதவர்களாகவே இருக்கின்றார்கள். அவ்வம் மதச்சார்பான விஷயங்களை சிறு நூற்களின் வாயிலாய் எளிய நடையில் கதாரூபமாகவும், நாடக ரூபமாகவும், வெளிப்படுத்துதலே இக்குறையை நீக்கும் உபாயங்களில் ஒன்று என்பது கற்றோர்களின் அபிப்பிராயம். அதனை முன்னிட்டே இச்சிறு நூலை எழுதத்துணிந்தேன்.

இனிய குயிலோசைக்கு முன் காக்கை கரைவதையொத்த என் புன் சொற்களி லுள்ள குற்றம் நாடாது குணத்தைக் கைக்கொள்ளும் தமிழ் வல்லார்மாட்டு யான் அளிக்கும் வந்தனங்கள் அளவில.

இதனை வெளி யிடுவதற்குப் பற்பல உதவிபுரிந்தும், கிளர்ச்சியையுண்டாக்கியும் வந்த நண்பர்கட்கு என் அன்பார்ந்த வந்தனத்தை அளிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

செ. மு. வே.

## விநாயகர் துதி.

எப்போ தகத்தில் நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

## சபாநாதர் துதி.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

## ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனார் துதி.

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட் டாட்கொண்ட
உவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பிணிகொண்ட வல்லாளன்
எல்லா முய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த பேரருளின்
பெருமா னென்றுப்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள் எமதுகுல
தெய்வமாமால்.

## ஆசிரிய வணக்கம்.

இப்புவி யினிதி னென்று மியற்றமி ழமிழ்தந் தன்னை
அற்பினுக் கன்னை யாகி யருத்தியே யென்னைக் காக்கும்
அப்பனை யுளத்தி ஞானை அப்பனை யான்முன் செய்த
நற்பயன் றனைப்பா வல்லோர் நாதனை வழுத்து வேனே.

# ஸ்ரீ சுந்தரமூர்த்தி.

## (தடுத்தாட்கொள்ளப்பெறுதல்.)

---:o:---

### முன்னுரை.

சூத்திரதாரர்:—ஸ்ரீ சேக்கிழார் நாயனார் செய்தருளிய பெரியபுராணத்துள் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரமசிவனால் தடுத்தாட்கொள்ளப்பட்ட கதை இப்பொழுது இங்கு நடிக்கப்படும். இதனுடைய முன்தொடர்ச்சி :—

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபியாகிய பரமசிவன், ஆன்மாக்களுக்கு அருளும்பொருட்டு, மாயாகாரியமாகிய சரீரம்போலாகாது சத்தியகாரியமாயுள்ள சரீரத்தை யெடுத்து, தமது அருட்சத்தியாகிய பார்வதி தேவியுடன் ஸ்ரீ கைலாசகிரியிலே வீற்றிருப்பார். அக்கடவுளுக்குத் திருத்தொண்டுசெய்யும் அடியார்கூட்டத்துள் ஆலாலசுந்தரர் என ஒருவர் உண்டு. அவர் ஒருநாள் தாம் செய்யும் திருத்தொண்டின் தவறினாலே பரமசிவனால் தக்ஷிணபூமியிலே மானுடதேகம் எடுக்கும்படி ஆஜ்ஞாபிக்கப்பட்டனர். அவ்வாஜ்ஞையை வகித்த ஆலாலசுந்தரர் மனங்கலங்கி, சந்நிதியில் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து எழுந்துநின்று அஞ்சலியஸ்தராய், "ஸ்வாமி! தேவரீருடைய அருமைத் திருவடிகளைப் பிரிதற்கு ஹேதுவாகிய கொடும்பாவத்தைச் செய்தவனாகிய சிறியேன், மயக்கம்பொருந்திய மானுடப்பிறப்பை யெடுத்து, கொள்ளவேண்டியது இன்னது, தள்ளவேண்டியது இன்னது என்று அறியாமல் பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கும்போது, தேவரீர் வெளிப்பட்டுவந்து அடியேனைத் தடுத்து ஆட்கொண்டருளவேண்டும்," என்று பிரார்த்தித்தனர். வேண்டுவார் வேண்டியவை

களை ஈந்தருளுங் கடவுளும் அவ் வேண்டுகோளுக்கு இசைந்தருளி ஞர். பின்பு, ஆலாலசுந்தரர் பூமியிலே புண்ணியபூமியாகிய பரத கண்டத்திலே, தமிழ் வழங்கும் நிலயாகிய தென்னுட்டைச்சார்ந்த திரு முனைப்பாடி நாட்டிலே, திருநாவலூரிலே, ஆதிசைவ ப்ராஹ்மண குலத்திலே, சடையனுரது மனைவியாராகிய கற்பிலேசிறந்த இசை ஞானியார் என்னும் மாதுசிரோமணியிடத்திலே, ஆன்மாக்கள் சைவ சமயமே மெய்ச்சமயமென்று உணர்ந்து அதனை அனுசரித்து உய்யும் பொருட்டு அவதாரஞ் செய்தனர். தாய்தந்தையர், அவதரித்த அப் பிள்ளைக்கு நம்பியாரூரர் என்று நாமகரணஞ் செய்தார்கள். நம்பியா ரூரரும் இளம்பிறைபோல வளர்ந்துவரும் நாளில், அந்நாட்டு அரச ரால் நன்குமதிக்கப் அபிமானப் புத்திரராகப் பாவித்து வளர்க்கப்பட்டு வந்தனர். அங்ஙனம் அரசரால் அவர் வளர்க்கப்படினும், தமது ஆதி சைவத்திற்குரிய ஒழுக்கத்தையே யுடையவராகி, உரியகாலத்தில் உப நயனஞ் செய்யப்பெற்று, வேதங்களை அத்தியயனஞ்செய்து, சகலகலை களிலும் பூரண பாண்டித்திய முடையவராய், விவாகம் செய்வதற்கு உரிய பருவத்தை யடைந்தனர்.

தந்தையாராகிய சடையனர் அது கண்டு, தமது குலத்திற்கேற்ப, புத்தூரிலிருக்கும் சடங்கவி சிவாசாரியாரிடத்திலே, அவருடைய புத்தி ரிக்கும் தமது புத்திரர்க்கும் மணம்பேசி வரும்படி, சில முதியோர்களை அனுப்பினர். அதற்கு, சடங்கவி சிவாசாரியர் உடன்பட்டதைக்கண்ட சடையனர் மகிழ்ச்சிகொண்டு முகூர்த்தநாள் நியமித்து, பெண்வீடா கிய புத்தூரில் விவாகம் நடக்கப்போகின்றதாகத் தமது பந்து மித்திரர் களுக்கு விவாகபத்திரம் சிட்டினர். யாவரும் விஜயஞ் செய்திருந்தார் கள். நம்பியாரூரரும் விவாகத்திற்கு முன்னுள் சமாவர்த்தனம் பண்ணி ரக்ஷாபந்தனஞ் செய்து, மறுநாள் நித்திய கர்மங்களை முடித்துக் கொண்டு, மணக்கோலத்துடன் குதிரைமேல் ஏறி, மஹா அலங்காரத்தோடு புத்தூரிலே சடங்கவி சிவாசாரியர் வீட்டிலே திருக்கல்யாணப் பந்த ருக்கு முன்சென்று, குதிரையினின்றும் இறங்கி உள்ளே சென்று ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தனர்.

இவ்வாறு அமர்ந்திருக்குந் தறுவாயில், பரமசிவனுனவர், தாம் கைலாசகிரியிலே வாக்கிட்டபடி நம்பியாரூரரை உலகவாழ்க்கையிலே

பிராஹ்மண வடிவங் கொண்டு அவ்விடத்தில் எழுந்தருளி, கல்யாண பிள்ளையாகிய நம்பியாரூரனை நோக்கி, "ஐயா! உனக்கும் எனக்கும் ஓர் அடிமைவழக்கு உண்டு" என்று ஓர் ஓலையைக்காட்ட, அதற்கு நம்பியாரூரர் கோபங்கொண்டு கிழவனை நோக்கி, "அந்தணர் அடிமை யாவது எங்கேனும் உண்டா? அடா பித்தா!" என்று சொல்லிக் கொண்டு, அக்கிழவரைத் தொடர்ந்தோடிச் சென்று அங்குள்ள ஒரு காவணத்தில் (சோலையில்) இறுகப்பிடித்து, அவரிடமிருக்கும் ஓலையைப் பறித்துக் கிழித்தெறிந்தார். கிழவரோ கூக்குரலிட்டனர். இதைக் கண்ட பிராஹ்மணர்கள் கிழவரை நோக்கி "நீர் யாரையா? சிவபூஜையில் கரடி புகுந்ததுபோல் எங்கிருந்து புறப்பட்டீர்? உம்மூர் எது?" எனக்கேட்டனர். பின், அன்பரை ஆதரிக்கின்ற பரம கருணைநிதியாகிய விருத்தர், "ஐயா! நான் இருப்பது திருவெண்ணெய்நல்லூர், இந்த நம்பியாரூரனை விடமாட்டோம். அவனை, அவ்வூரிலேயே அழைப்பித்து நியாயம் தீர்த்துக்கொள்ள எமக்குத் தெரியும்" என்று சொல்லினர்.

இது நிற்க, இப்பொழுது கல்யாணப்பிள்ளையாகிய நம்பியாரூரர் அந்தக் காவணத்திலேயே பரமைகொண்டு தனித்துநின்று தனக்குத் தானே பேசிக்கொண்டிருத்தல்.



## நாடக பாத்திரங்கள்.



| | |
|---|---|
| 1. கிழவர். | தடுத்தாட்கொள்ளும் பரமசிவன். |
| 2. நம்பியாரூரர். | மணமகன். (ஆலாலசுந்தரன்.) |
| 3. காமாக்ஷி. | விவாகத்திற்கு வந்திருந்தவர்கள். |
| 4. மீனாக்ஷி. | |
| 5. மார்க்கசகாய குருக்கள். | |
| 6. சந்நியாசி. | வழிப்போக்கர். |
| 7. நீதிமார்க்க குருக்கள். | பஞ்சாயத்தார்கள். |
| 8. சாந்தலிங்க குருக்கள். | |
| 9. தார்க்கீக குருக்கள். | |
| 10. தத்வராய குருக்கள். | |
| 11. சபாலங்கார குருக்கள். | |
| 12. தலையாரி. | |
| 13. கணக்கப் பிள்ளை. | |
| 14. மெய்கண்ட குருக்கள். | சாக்ஷிகள். |
| 15. பொய்யாமொழி குருக்கள். | |
| 16. காலங்கண்ட குருக்கள். | |

என்று அதட்டிக் கூக்குரலிட்டால் நிதானம் எங்கிருந்து வரும்? நீரே சொல்லுமே.

**மீனாக்ஷி:**—ஆம், அதுவும் மெய்தான். ஆனால், ஒன்று செய்யலாம். அக் கிழவன் இருக்கும் ஊருக்கு நாமும் சென்று அங்குள்ள நால்வரை வைத்துக்கொண்டு கேட்டால் நியாயம் விளங்கிப் போகாதா?

**மார்க்க:**—(வந்து) நம்பிகளே! அழைக்கின்றார்.

**நம்பி:**—யார்?

**மார்க்க:**—உம்மை அடிமைகொள்ள வந்தவர்.

**நம்பி:**—என்னை அடிமைகொள்ள வந்தவரா? ஆ! என்னை அடிமைகொள்ள வந்தவர் என்னை அழைக்கின்றாராமே! கண்டவர் நகைக்குங் காலமா இது?

ஆசிரியப்பா

கண்டார் நகைக்கக் காலம் நேர்ந்ததே!
கண்டார் நகைக்கக் காலம் நேர்ந்ததே!
அந்தண னொருவன் அடிமை யாவதுப்
அகிலந் தாங்குமோ! அந்தணரே!!
அந்தணர் நன்றாய் ஆதி சைவர்நீர்!
ஆதி சைவனென் றென்னையு மறிவீர்!
தொண்டு கிழவன் ஒருவ னெழுந்தே
அடிமையென் றென்னை யழைத்தற் கழுவேனோ!
பெண்டிர் புன்னர் போல மானம்
பிறந்து பேதைபோல் நிற்றற் கழுவேனோ!
கடிமணம் புரியுங் காலந் தன்னில்இக்
கொடுமை நேர்ந்ததற் கழுவேனோ! கண்டார்
யாவரும் நகைக்கக் காலம் நேர்ந்ததே!
யாவரும் நகைக்கக் காலம் நேர்ந்ததே!

சந்நி:—தம்பி, குழந்தாய ! அடிமயன் உம்மைக் கேட்டதென்ன ? அடியேன்மீது இவ்வளவு கோபம் ஏன் செய்துகொள்ளுகின்ருய் ?

நம்பி:—என்ன சொன்னீர் ! அடியேனு ? நீரா எனக்கு அடிமை ? தகாத வார்த்தை சொன்னீர் ! சகலத்தையும் நியாசம்பண்ணி சந்நியாசியெனப் பெயர்பெற்ற நீரா எனக்கு அடிமை ? பேஷ், நன்ருயிருக்கிறது ! நான்தான் ஒரு கிழவேதியனுல் அடிமையெனபபட்டுத் தட்டுக்கெட்டுத் தடுமாறிநிற்கின்றேனே இவ்வூரில் ! (காமாக்ஷியை நோக்கி) அம்ம, கிழவனை அழைத்து வருவதாய்ச்சென்ற குருக்கள் இன்னமுங் காணுமே. ஏன் ?

சந்நி:—என்ன சமாசாரம் ? எனக்கு ஒன்றும் விளஙகவில்லையே ! அப்பா, நீ டா ? இவ்வூர்தானோ ?

நம்பி:—நான் இவ்வூரல்ல, திருநாவலூர்

சந்நி:—சரி, இவ்விடத்தில் இங்ஙனம் நின்று தாககிததுககொண்டிருபபானேன் ?

காமாக்ஷி:—ஸ்வாமி ! இவ்வூரில் கலயாணம் என்கெனறு கேட்டீரே, இவர்தாம் அந்த கல்யாணபபிள்ளை.

சந்நி:—அபபடியா ! (அருகில நெருங குதல்)

புன்னாகவராளி—ஆதி தாளம்.

காமாக்ஷி:— "தொங்திசரிய மயிரேவெளிறநரை
தங்தமசைய முகங்கவளையஇதழ்
தொங்கவொருகை தடிமேல்வரமகளிர—நகையாடித்
தொண்டுகிழவ னிவனெனஇருமல்
கிண்கிணெனமுழுமையேகுழறவிழி
துஞ்சுகுருடு படவேசெவிடுபடு -- செவியாகி"

மீனாக்ஷி:—இவ்வாறு பரிகசிக்கத்தக்க கோலத்தோடு ஒரு கிழவன் திருமணபபந்தலில் புகுந்து நம் தம்பியைச் சொல்லத்தகாத வார்த்தையைச் சொல்லியிருக்கிருன். அத்தோடு நின்றதா ! சீட்டும் ஒன்று காட்டினுன்.

சந்நி:—அப்பா, தம்பி ! அவர்கள் சொல்லிக்கொண்டு வரும்போதே எனக்கு மயிர்ச்சிலிர்ப்புண்டாகின்றது. உம்மை என்னென்று

சொல்லினார் அக்கிழவர்? அவரை முன்பின் பார்த்ததுண்டோ நீர்? எந்த ஊரார் அவர்?

**நம்பி:**—இதோ இந்தத் திருவெண்ணெய் நல்லூரென்று சொல்லுகிறார் அவர். யானோ அவரை அறிகிலேன். நான் அவருக்கு அடிமையாம்.--(தனக்குள்) கிழவரை அழைத்துவரச் சென்ற குருக்கள் இன்னமுங் காணோமே!

**மார்க்:**—(வந்து) நம்பிகளே! அந்த வ்ருத்த பராஹ்மணர் நீர் தனியாயிருக்கும் இவ்விடத்திற்கு வரமாட்டாராம். இறுகப்பிடித்து அவரிடத்திலிருந்த அடிமையோலையைக் கிழித்தெறிந்தீராம். நீர் கொலையும் செய்துவிடுவீரென்று பயப்பட்டு நிற்கிறார். அவர் திருவெண்ணெய் நல்லூருக்கு வரச்சொன்னாரமே உண்மை!

**நம்பி:**—-ஆம். அவ்வூருக்கே சென்று இவ்வழக்கைப் பஞ்சாயத்தார் முன்னிலையில் தீர்த்துக்கொள்ளலாம். ஒருவனுக்கு ஒருவன் அடிமையென்றால் இலேசாக விட்டுவிடுவார்களா! பஞ்சாயத்தார்களென்ன பாமரர்களாகவா இருக்கப் போகிறார்கள்! பயப்பட்டு நிற்கின்றாராமே! அடிமையென்று என்னை அழைக்கப் பயமில்லையோ! என்ன பாசாங்கு செய்கிறானையா அக்கிழவன்! திருவெண்ணெய் நல்லூருக்கு வந்து என்னவென்று சாதிப்பானோ பார்க்கலாம்! ஒன்றைச் சாதிப்பதற்கு சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய இம்மூன்றும் வேண்டாவோ? அவன் அழைத்தபடியே திருவெண்ணெய் நல்லூருக்குப் போவோம் நல்லவர்கள் இருக்கமாட்டார்களா, அவ்வூரில்!— ஆ, தெய்வமே! இப்போது இங்ஙனம் நடக்கும் யாவையும் யான் கனவு காண்கின்றேனோ! என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்!! (விரைவொடு) வாருங்கள் போவோம். விடமாட்டேன் அக்கிழவனை.

(யாவரும் ஏகுதல்)



## இரண்டாங்களம்.



இடம்: திருவெண்ணெய் நல்லூர்.
காலம்: மாலை.
பாத்திரம்: பஞ்சாயத்தார்களும், கிழவனும்.

சூத்திரதாரர்:—பரமசிவனாகிய கிழவேதியர், திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று பஞ்சாயத்தார் முன்னிலையில் வழக்குப்பேசி நம்பியாரூரரைத் தமக்கு அடிமையாக்கிக்கொள்ளுதல்.

(பஞ்சாயத்தார்களின்முன் கிழவன் முறையிடுதல்.)

**கிழவர்:**—ஐயா, குருக்கள்மார்களே! நீங்கள் என் பக்ஷமாய்ப்பேச வேண்டாம். நியாயத்தை விசாரியுங்கள். காட்டிய சீட்டைக் கிழித்து எறிந்துவிட்டானே, ஐயா! ஐயா!!

**நம்பி:**—(வருதல்)

**கிழவர்:**—இதோ வருகிறான் ஐயா! பார்த்தீர்களா குறியாக! இவன் தான் ஐயா! இவன்தான்!! (நம்பியைநோக்கி) தம்பீ! கல்யாண கோலத்தோடுதான் பஞ்சாயத்தாருக்குமுன் வரவேண்டுமோ? சற்றுவிலக்கி வரப்படாதோ? என்னகாரியம் செய்தவன் ஐயா இவன்! அஞ்சாத நெஞ்சன்!!

**நீதி:**—வாரும் நம்பிகளே! என்ன, கல்யாணத்தில் வழக்கு வந்து விட்டதாமே!

**நம்பி:**—ஆம்.

**சந்நி:**—(வருதல்)

**நீதி:**—வாரும், ஸ்வாமிகளே! எதற்கு நிற்கவேண்டும், இருக்கலாமே.

**சந்நி:**—(ஆசனத்தில் அமருதல்)

**நீதி:**—நம்பிகளே! ஏன் நும்மீது வழக்கு உரைக்கின்றார் இப் பெரியவர்!

**நம்பி:**—ஆ, சபையோர்களே! என்னகாலம் இது. விதிவசமும் இவ்வாறோ? என்னை அடிமை என்கிறாரே இப் பெரியவர்!

(சாவேரி - ஆதிதாளம்.)

பல்லவி.

அன்னிய ருக்கடிமை யாவே னோநான்
ஆதிசைவ னேச்சே. (அன்னி)

அநுபல்லவி.

அன்னிய ருக்கடிமை யாவது சிறுமை
பன்னகபூஷண பரற்கடிமை பெருமை. (அன்னி)

சரணம்

ஒருவற்கடிமைப் பட்டிவ் வுலகில் வாழ்வதினும்
உயிரைப் போக்குவதே நன்மை
கருதரிய சீல கண்டற் கடிமையென்றென்
கருத்தி லமைந்திருப துண்மை
விருதுடை கேசரி வீற்றிருந்த நரிக்கு
வெண்காட்டி யோடுதல் பொய்ம்மை
திருவெண்ணெய் நல்லூர்த் தேவதேவனது
திருவுளத்தருளது மெய்ம்மை. (அன்னி)

இப் பெரியவர் யாரோ இன்னாரென்று நான் அறிகிலேன். இவர் இற்றைக்காலை என்னை அடாதவார்த்தை கூறிப் படாதபாடு படுத்தி விட்டார் ஐயா!

கிழவர்:—(நம்பியைநோக்கி) அப்பா, தம்பீ! பிள்ளையாண்டான்! உனக்கும் துக்கம் என்பது தோன்றிற்று? நாணம் என்பதும் ஒன்று உண்டா? கல்நெஞ்சு படைத்தவனேச்சே நீ! கல்லுங் கரையுமே, உன் மனம் கரையாதே!

ஆசிரியப்பா.

யாவரும் கேண்மோ! யாவரும் கேண்மோ!
என்னென மதித்தீர் இந்தப் பையலை!
இற்றைக் காலைப் புத்தூ ரதனில்
சுற்றஞ் சூழ வதுவையின் பொருட்டுத்
திருமணக் கோலத் துடன்வீற் றிருக்கும்
தருணத் திவியான் அவையிற் புகுந்தே

இவன்றன் பாட்டனை யீட்டிய அடிமைச்
சீட்டினை விரித்து நீட்டிப் படிக்கையில்
கொண்டு கிழவ னாகிய என்றனைத்
தொடர்ந்து வந்தனன் அங்கோர் காவணந்
தன்னி லிறுகப் பிடித்துச் சீட்டினைச்
சின்னா பின்ன மாகச் செய்தனன்.
யாவருங் கேண்மோ! யாவருங் கேண்மோ!
என்னை மதிக்கீர் இந்தப் பையலை !

ஐயா ! இற்றைக்காலை, புத்தூரில் இந்தப் பிள்ளையாண்டானுக்குக் கல்யாணம். அதற்காக இவ்வூரிலிருந்து தள்ளாடித் தள்ளாடிச் சென்று, சபையார் அறிய அடிமையோலையை விரித்துப் படிக்கத் தொடங்கினேன் ஐயா! உடனே, இவன் கோபத்துடனே என்னைத் துரத்திக் கொண்டு வந்தனன். யானும் இவனுக்கு அகப்படாமல் ஓடோடிச் சென்று ஒரு காவணத்தில் பரமித்து நின்றுவிட்டேன். நின்றதும் என்னை இறுகப்பற்றி என் கையிலிருந்த ஆவணத்தைப் பறித்துக் கிழித்தெறிந்தான் ஐயா ! அப்பட்டில் விட்டானோ இவன்! பலவாறு வைதுந் தீர்த்தான். இவ்வளவும் உண்மையா வென்று கேளுங்கள் ! கேளுங்கள் ஐயா அவனை !

**சாந்த:**—தம்பீ! அவ்வளவு காரியம் ஏன் செய்தாய்? சீட்டைக் கிழித்தது வாஸ்தவந்தானோ?

**நம்பி:**—வாஸ்தவந்தான். என்ன சமாதானமாகக் கூறினாலும் இவர் போனபாடில்லையே. மஹாசபையில் வந்து என் மானத்தை வாங்கிவிட்டார் ஐயா! பேசுவதில் வெகு சமர்த்தர் இக்கிழவர்!

**சாந்த:**—ஆம் ஐயா, அவர் காட்டிய சீட்டை நீர் ஏன் கிழித்தீர்? மற்றவை கிடக்கட்டும்.

**தார்க்கீ:**—சீட்டைக் கிழித்தது வாஸ்தவமென்றுதான் ஒப்புக்கொண்டாரே, அதில் உள்ள விஷயம் என்னவென்று கேளுமே!

**நம்பி:**—விஷயத்தை யான் காணவில்லை.

**தார்க்கீ:**—பின் காணாமல் ஏன் கிழித்தீரையா! ஒருவருடைய சீட்டை நீர் எப்படிக் கிழித்தெறியலாம்?

கிழவர்:—ஐயா, குருக்களே! அதைக்கேளும் ஐயா! அதைத்தான் கேளும்! என் பங்கிலும் தெய்வமிருக்கும்.

தர்க்க:—ஐயா, வ்ருத்த பராஹ்மணரே! அதிலுள்ள விஷயந்தான் என்ன? நீர் சொல்லுமே!

கிழவர்:—நானென்ன சொல்வது. பிள்ளையாண்டானுக்குத் தெரியாதா? அவன் இப்பொழுதும் சொல்லக் கேட்டீர்களே!

தத்வ:—என்னவென்று கேட்டோமையா!

கிழவர்:—நம்பியாரூரன் எனக்கு அடிமையென்று.

தத்வ:—ஏதையா, கிழவரே! நம்பி சொல்வதுபோல் வெகு சமர்த்தரா யிருக்கிறீர் நீர்!

கிழவர்:—ஆம் ஐயா, குருக்கள்மார்களே! இவ்வளவுதூரம் கேட்கிறீர் களே, பிள்ளையாண்டானும் சீட்டைக் கிழித்தெறிந்ததாகத்தானே ஒப்புக்கொண்டான். சீட்டைக் கிழித்ததனாலேயே இவ்வழக்கின் உண்மை வெட்டவெளிச்சமாய் உங்களுக்குத் தெரிய வில்லையோ? ஏன் வழக்கை வளர்த்துகிறீர்களோ! இரண்டொரு வார்த்தையில் முடித்துவிடலாகாதோ?

நீதி:—'சீட்டைக் கிழித்தான், சீட்டைக் கிழித்தான்' என்று கூக்குரல் இடுகிறீரேயன்றி, சீட்டை ஒருவருக்குங் காட்டினபாடில்லையே. அதனை அடிமைச் சீட்டென்று நீர்தான் சொல்லுகிறீர். கிழித் தெறியப்பட்ட சீட்டு அடிமைச் சீட்டுதான் என்று ரூபிக்க உம்மால் முடியுமோ? அங்ஙனம் அடிமைச் சீட்டாயினும் யாருடைய அடிமைச் சீட்டோ, யாருக்குத் தெரியும்?

கிழவர்:—ஐயா! என்னை யாவரும் சேர்ந்து அம்பலத்தில் விட்டீர்களே! நல்ல கேள்வியைத்தான் நீரும் கேட்டீர். தகுந்த கேள்விதான். சீட்டைக் காட்டவேண்டு மென்கிறீர்களோ? அதனை இவன் தானே கிழித்தெறிந்தான்! வேறொருவரல்லவே! கேளுங்கள் ஐயா அவனை! (மேல்நோக்கி) ஹே சங்கரா! திருவிளையாடல் செய்கின்றாயோ! (பூமியைநோக்கி) அவர்கள் கேட்பதும் நியாயந் தான், எழுத்துமூலந்தானே எதற்கும் பலம். (சபையை நோக்கி) என் சீட்டினை என்ன காரியத்திற்காகக் கிழித்தான்

இவன் ? அதைக் கேளுமே! அப்போது கிழித்த காரணம் வெளிப்படாதா ?

நீதி:—ஐயா விருத்தரே !

கிழவர்:— ஐயா !

நீதி:—அவர்தான் அச் சீட்டிலுள்ள விஷயம் இன்னது எனக்காண வில்லை என்கிருரே, அதைக் குறித்து நீர் என் மன்ருடுகிறீர் ஐயா ? நடக்கவேண்டியதைக் கவனியுமே.

சபா:— கிழவர் வெகுசமர்த்தரையா, ஏதோ ஓர் ஓலையைத் தானே கிழித்தெறிந்துவிட்டு, 'கிழித்தெறியப்பட்ட ஓலை அடிமை யோலை, கிழித்தெறியப்பட்ட ஓலை அடிமையோலை' என்று பாட்டுப்பாடுகிருர். பார்த்தீர்களா கிழவருடைய தந்த்ரம் !

கிழவர்:—என்ன தந்த்ரம் பண்ணுகிறேன் ஐயா ?

சபா:—பின் என்ன ! நீர் எடுத்ததோ, பெருத்த வழக்கு. அதிலும் தொந்த வழக்கு. எழுத்துமூலந்தானே வழக்குக்குப் பிடிப்பு. (தார்க்கிகரை நோக்கி) என்ன தார்க்கிகருக்களே! சும்மா இருக்கின்றீரே, நான் சொல்வதென்ன நியாயந்தானே ?

கிழவர்:—ஐயா ! ஐயா !! நீங்கள் கேட்பது நியாயந்தான் ! மெத்தவும் நியாயந்தான் ! இல்லை என்று யார் சொன்னது ?

மோஹனடிச்சிந்து.

ஐயா ஒன்றுகேளும் !

என்னை - அவனிவனென்று நீங்கள் எண்ணவேண்டாம் நடையத் தெரியுமது—இந்தப் - பையலுக்காக நீங்கள் பரியாதீர் - எப்படி யெனுநீங் கள்—இவ்வழக்குக் - கெதிர்வழக்கெடுப்பினும் விடுவேனே - தொடுப்பேன் ஒருவழக்கை—வழக்கினைத் - தப்பிதுவென்று நீங்கள் தள்ளிவிடினும் - தரணியறியவும்மைச்—சும்மா - விடுவேனோநான் விடமாட்டேன் - ஐயா இதொன்றுகேளுய— சீட்டைக் - கிழித்ததனுல் நீங்கள் குதிக்காதீர் - மதி யுங்கள் என்னையுமே—நாட்டுக் - கிழவன் ஒருவனிவன் யாரோவென் - றையங்கொள்ளாதீர் — ஐயா - ஐயங்கொள்ளாதீர் !

சபையோர்களே ! என்னை நீங்கள் சாதாரணக் கிழவஞக மதித்து வாய்வம்பு அளக்கவேண்டாம். நீங்கள் இவ்வழக்கில் போகின்றபோக்கை நிதானித்துப் பார்த்தால் அவன் எனக்கு அடிமை என்பதை மறைத்து,

என்னை அவனுக்கு அடிமையாக்கி விடுவீர்கள்போல் இருக்கிறதே! 'வாசகம் வல்லார்முன்னின் றியாவர்வாய் திறக்கவல்லார்.' யாவும் இருக்கட்டும் ஐயா! நான் ஒன்றுகேட்கிறேன். கிழவனுடைய ஓலையை என் கிழித்தாயடா என்று இதுகாறும் அவனை அதட்டிக் கேட்டபாடில்லையே! யாவரும் ஒருதலையாகவே நிற்கிறீர்களே! என் பங்கிலும் மங்கைபாகன் இருக்கானு! அம்பா! நீயும் என்னைக் கை விடுவையோ!

**நீதி:**— விருத்தரே!

**கிழவர்:**—ஐயா!

**நீதி:**—என்ன இவ்வாறு பேசுகின்றீரே?

**கிழவர்:**—(உரத்தகுரலுடன்) பின் என்ன குருக்களே! என் சீட்டுக் கிழித்தெறியப்பட்டதனுலேயே நான் எடுத்த வழக்குப்போய் விட்டதா? நான் ஏமாந்து நின்றதாய் நீங்கள் கருதக்கூடும்.

"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவமென் பது இழுக்கு"

ஒரு காரியத்தைத் தொடங்காமலேயே இருக்கவேண்டும். தொடங்கியபின் கடைசிவரையில் ஒரு கை பார்த்தே விடவேண்டாமா? (உரத்தகுரலுடன்) ஐயா, குருக்கள்மார்களே! இதுகாறுந்தான், எழுத்து மூலம் எங்கே எழுத்துமூலம் எங்கே என்று பாட்டுப பாடினீர்கள். புத்தூரில் மணப்பந்தலில் அந்தப்பாமதுவ்டனுல் கிழித்தெறியபபட்ட ஓலைபடியோலை என்றறியுங்கள் இதோ இருக்கிறதே மூலவோலை என்னிடத்தில், இதற்கென்ன செய்வீர்கள் குருக்கள்மார்களே!

**தந்வ:**—நீதிமார்க்ககுருக்களே!ஏது கிழவர் கெட்டிக்காராயிருக்கின்றார்.

**கிழவர்:**—ஆம், ஐயா! வெட்டிபபேசினுல் கெட்டிக்காரன்தான். நான் கிழவனுயிருபபினும் உம்மைபபோல வழவழவென்று பேசவில்லையே. 'நியாயவாதி வெகுஜனவிரோதி' என்று உலகம் சொல்வது சஹஜந்தானே!

**நீதி:**—ஐயா! உமது மூலவோலையைச் சற்றுக்காட்டும், பார்பபோம்.

**கிழவர்:**—(சும்மா இருத்தல்)

**சந்தி:**—என்ன நிதானம்? எடுத்துக்காட்டுமே!

**சாந்த:**— காட்டுவாரையா, நாம் ஏன் அவசரப்பட வேண்டும்.

கிழவர்:—சீட்டைக் காட்டச்சொல்லுகின்றீரா? காட்டத் தடையில்லை. பிள்ளையாண்டானைக் குறித்து யோசிக்கிறேன்.

சாந்த:—ஏன், கிழித்து விடுவாரென்றா? அவ்வாறு ஒன்றும் நடவாது, நீர் காட்டும் ஐயா!

கிழவர்:—நடவாதுதான். எனக்கும் தெரியும். நீங்கள் மெத்த நல்லவர்கள். நல்ல அந்தணர்கள் வாழும் திருவெண்ணெய்நல்லூராச்சே இது. பிள்ளையாண்டான்தான் பரமதுஷ்டன்.

நீதி:—விருத்தரே! இத்தனை பேர்கள் நிறைந்துள்ள இச்சபையில் அவர் கிழிப்பரா சீட்டை? எதோ சீட்டைக்காட்டும்?

கிழவர்:—ஐயோ! ஐயா! அப்படிச் சொல்லாதேயும். இது ஒரு கூட்டமா? புத்தூரில் மணப்பந்தலில் மஹாசபையில் என்னைக் கோலங் காட்டினானே இவன்! ஆள் அழகனென்று பார்க்கிறீர்களோ? இங்கிருக்கும் யாவரும் அவன் ஒருவனுக்கு நிகராகமாட்டார்கள். மெத்த பலசாலி. என்ன வலுவையா அவனுக்கு!

நீதி:—இவ்வளவுக்கும் சீட்டைக் காட்டினபாடில்லை. கதை பேசுகிறீர். பொழுதாகிறது!—காட்டுமையா சீட்டை!

கிழவர்:—காட்டுகிறேன். முன்போல் ஆகிவிட்டாலோ? சீட்டுக்கு உத்தரவாதம் நீங்கள் தானே, சம்மதந்தானா?

சந்நி:—கிழவரிடத்தில் கொஞ்சம் பாசாங்கும் உண்டுபோல் இருக்கிறது.

கிழவர்:—(நகைத்து) உள்ளதைச் சொல்லினால் பாசாங்கா!

தத்வ:—நீர் எடும் ஐயா சீட்டை! நாங்களே உத்தரவாத மாகிறோம். அவ்வளவு துஷ்டரா அவர்?

கிழவர்:—என்ன கேட்கிறீர், துஷ்டர் என்று கேட்கிறீர்? அதற்கென்ன சந்தேகம்! பரமதுஷ்டன், பரமதுஷ்டன்!

(சங்கராபரணம்.)

என்னகண்டையா ஏதுகண்டையா
இவன்துஷ்டத் தனத்தினையே (என்ன)

நீதி:—(பாடிக்கொண்டிருக்கும்போதே) ஐயா, விருத்தரே!

கிழவர்:—ஐயா!

**நீதி:**—என்ன? ஓலை எடும் என்ருல் பாட்டுப் பாடுகின்றீரே! பாட்டு வேண்டாம். காலதாமதம் ஆகிறது. சீட்டை எடும்.

**கிழவர்:**—அப்படியே. மெத்தப் பொல்லாதவன் ஐயா இவன்! இவனைப் போல் யான் எங்கும் கண்டதில்லையே!

**நீதி:**—சரி, கிடக்கட்டும். நீர் எடும் ஓலையை.

**கிழவர்:**—எடுக்கிறேன். முன்போல் ஆனுலோ?

**தார்க்கீ:**—அப்படி ஒன்றும் நடவாதையா! இதனை ஒரு நீதி விசாரிக்கும் சபையென்று மதிக்கவில்லைபோல் இருக்கிறதே நீர்!

**கிழவர்:**—ஐயா! கோபங்கொள்ளாதேயும். நீங்கள் எவ்வளவு தைரியங் கொடுத்தாலும் பிள்ளையாண்டான் விஷயத்தில் எனக்கு நம்பிக்கை யில்லையே.

**சந்நி:**—பின், எதைத்தான் செய்யச் சொல்லுகிறீர் ஐயா நீர்!

**சபா:**—சாந்தலிங்க குருக்களே! கிழவர், தம்மிடத்தில் ஓலை இருப்பதாசச் சொல்வது மெய்யோ பொய்யோ? அதைத் தெரிந்துகொள் ளுங்கள் முதலில்.

**சாந்த:**—சும்மா இருங்களையா! கிழவர், தள்ளாதவர். என்னசெய்வார் அவர்?

**நீதி:**—சாந்தலிங்க குருக்களே! இதற்கு என்ன செய்யலாம்?

**சாந்த:**—வ்ருத்த ப்ராஹ்மணரே! நாழிகையாகிறது. என்ன சொல்லு கிறீர்?—ஐயா விருத்தரே! என்ன யோசிக்கிறீர்?

**கிழவர்:**—(குதித்துப்பின்னிடைந்து) ஒன்றுமில்லை. நம்பியாரூரன் என்னைத் தூக்கிக்கொண்டு வருவதுபோல் இருக்கிறது. அவன்—,

**தத்வ:**—அவர்மீதிலேயே உமக்குப் பித்தம் பிடித்து விட்டதுபோல் இருக்கிறதே!

**கிழவர்:**—ஐயா! அவன் என்னை ப ்ரபந்தலிலே 'பித்தா' என்றும் அழைத்திருக்கின்ருனே ஐயா!

**சந்நி:**—யாவும் இருக்கட்டும். ஓலையைச் சற்றுக் காட்டும்.

**கிழவர்:**—அப்படியே காட்டுகிறேன். வருவது வரட்டும். (மூலவோலையை எடுக்கத் தொடங்குதல்)

**நம்பி:**—(தம் இடத்தைவிட்டுக் கிழவரிடம் செல்லுதல்)

**கிழவர்:**—(குதித்துச் சற்றுவிலகி உரத்தகுரலுடன்) பார்த்தீர்களா! பார்த்தீர்களா!! இவன் ஒருவருக்கும் அஞ்சாத நெஞ்சம் படைத்தவன் ஐயா! இத்தனை பேர்களுக்கு நடுவில் அடிமையோலையை யான் எடுத்துக் காட்டுகிறேனென்று அருகில் வருகின்றானே, ஐயா! நீங்கள் என்மீது தயைகூர்ந்து, அசையாமல் அவனை ஓரிடத்தில் நிற்கச்செய்யுங்கள். அங்ஙனம் அவனைச் செய்தாலன்றி எனக்குத் தைரியம் பிறக்காது. அவ்வளவு செய்யுங்கள் ஐயா!

**சாந்த:**—ஐயா, நம்பியாரூரரே! பெரியவருக்கு ஏதோ நும்மீது துரபிப்பிராயம் தோன்றிவிட்டது. உம்மைக்குறித்து எங்களுக்கும் பேசுவதற்கு வாயில்லை. ஏன்? அவருடைய ஓலையை நீர் கிழித்ததனால். அவர் சொல்லுகிறபடி சற்று எட்ட இருந்தால் காரியமும் துரிதத்தில் ஆகிவிடும். உமக்கும் வாலிபம், கல்யாண மிடுக்கு. நீரோ இவ்வாறு கூத்தாடினால் அவருக்கு எப்படியிருக்கும்? (கிழவரை நோக்கி) ஐயா, வார்த்திகரே! உம்முடைய வேலை யாகட்டும்!

**நம்பி:**—(தம் இடத்திற்சென்று) சபையோர்களே! இவர் யாரோ திடீரென்று வானத்தினின்று குதித்ததுபோல் குதித்தனரே! இவரை இன்றென்றும் யான் அறிகிலேனே! எனக்குப் பழைய வழக்காளியோ இவர்!

**சபா:**—நம்பிகளே! நீர் சும்மா இரும். (கிழவரைநோக்கி) ஓலையெடுமே!

**கிழவர்:**—இதோ எடுக்கிறேன். (கட்டையவிழ்த்து ஓலையை எடுத்து) நானே வாசிக்கட்டுமா?

**தாரக்கீ:**—வேண்டாம்! வேண்டாம்!! ஏதோ சீட்டைக்காட்டும். நாங்களே பார்க்கிறோம். (கைநீட்டுதல்)

**கிழவர்:**—(சீட்டைக்காட்டி) இதோ காட்டினேன். பார்த்தீர்களா! பார்த்தீர்களா!! நன்றாய்ப் பாருங்கள் ஐயா!

**நீதி:**—பெரியவரே! காட்டவேண்டாம். கையிற் கொடும்.

**கிழவர்:**—பிள்ளையாண்டான், ஜாக்ரதை.

**சந்நி:**—ஒன்றும் நடவாதையா! சும்மா கொடும், பார்ப்போம்.

**கிழவர்:**—கொடுக்கிறேன், கொடுக்கிறேன். ஹே அம்பா! பரமேஸ்வரீ! நீயே என் பங்கிலிருந்து இச் சீட்டுக்குக் காவலா யிருக்கவேண்டும். உன்னைத்தான் நம்பினேன். சபையோர்களே! பராமுகமா யிருக்கவேண்டாம். யாவருக்கும் அவன்மீது ஒருகண் இருக்கட்டும். இவனுக்குப் பெண் கொடுக்கவந்த பெரியவர்கள் என் கண்ணில் அகப்படவில்லையே. ஐயா! இந்தாரும் என் அடிமைப்பத்திரம். கொடுத்தேன், கொடுத்தேன். யாவரும் பாருங்கள் ஐயா! பாருங்கள் ஐயா யாவரும்! பிள்ளையாண்டான் ஜாக்ரதை, ஜாக்ரதை ஐயா! (அடிமையோலையைக் கொடுத்தல்.)

**நீதி:**—(ஓலையைக் கைநீட்டிப் பெற்றுத் தனக்குள் படித்துப்பார்த்தல்)

**கிழவர்:**—நாழிகை யாகிறதையா!

(பஞ்சாயத்தார்கள் தம்முள் ஒருவரிடமிருந்து ஒருவர் ஓலையைப் பெற்றுப்பார்த்தல்.)

**கிழவர்:**—என்ன தாமதம்? நாழிகையாகிறதே! சீட்டை உற்றுப்பார்க்கிறான் பிள்ளையாண்டான். ஜாக்ரதை ஐயா!

**நீதி:**—தலையாரி எங்கிருக்கிறான்? தலையாரீ!

**தலையாரி:**—(கைகூப்பிவந்து) ஏன் சாமி!

**நீதி:**—நீ போய், கணக்கப்பிள்ளையை யாம் அழைப்பதாய் அழைத்துக் கொண்டு வா, சீக்கிரம்!

**தலையாரி:**—அப்படியே சாமி! (ஏகி மீண்டுவந்து) இதோ வர்ரார் சாமி கணக்கெப்பிள்ளை. (கைகூப்பி ஏகுதல்.)

**கணக்க:**—(வந்து) நமஸ்காரம்.

**நீதி:**—வாருங்கள் கணக்கப்பிள்ளையவாள்! இவ்வோலையைப் பிரித்துச் சற்று வாசியுங்கள். (ஓலையைக்கொடுத்தல்.)

**கணக்க:**—(ஓலையைப்பெறுதல்).

**தார்க்கீ:**—ஐயா, கணக்கப்பிள்ளை! உள்ளதை உள்ளவாறு வாசியுங்கள், நீர் ஏதேனும் புள்ளி திட்டப்போகிறீர். முன்னமே இது தீரா வழக்கா யிருக்கிறது.

**நீதி:**—கணக்கப்பிள்ளை! ஆகட்டும்.

கணக்க:—(ஓலையை நிதானித்துப்பார்த்து.)

விருத்தம்.

" அருமறை நாவ லாதி சைவனு ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கியானு மென்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெ ழுத்து."

சாக்ஷிகள்.

மெய்கண்ட தேசிகர்.
[illegible]
[illegible]

[illegible]
நாவல் - ஆரூரன்.

தத்வ:—சரி, விளங்கினது. இது, செய்யுள்நடை யாதலின், சிலருக்கு விளங்கி யிராது. பொருளை விளக்கிக் காட்டிவிடும். யாவர்க்கும் நன்றாய்த் தெரியட்டும்.

கணக்க:—திருநாவலூரில் இருக்கின்ற ஆதிசைவனுகிய ஆரூரன் என்கின்ற நான், திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு, நானும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப உடன்பட்டு இவ்வடிமை யோலையை எழுதிக்கொடுத்தேன். இதற்கே, இது என் கையெழுத்து, என்பதுதான் இதன் கருத்து.

கிழவர்:—சபையாருக்கல்லவா! கணக்கப்பிள்ளை வாசித்ததை யாவரும் கேட்டீர்களல்லவா? யான் சொல்வதையும் தயைபுரிந்து சற்றுக் கேட்பீர்கள். (கணக்கப்பிள்ளையை நோக்கி) ஐயா, கணக்கப் பிள்ளை! பிள்ளையாண்டான் ஓலையைப் பறிக்கப் பார்க்கிறுன், ஜாக்ரதை. நீர்தான் வாசித்துக் காட்டிவிட்டீரே, குருக்களிடத்தில் சேர்த்துவிடுமே ஓலையை. (சபையை நோக்கி) இப்பிள்ளையாண்டான் என்னை அறியமாட்டேன் அறியமாட்டேன் என்று பலமுறையும் சொன்னுனே! அது உங்கள் யாவருக்கும் தெரிந்ததுதானே. இருக்க; இற்றைக்காலை புத்தூரிலே மணப்பந்

தலிலே என்னை, 'பித்தா' என்று என் பெயரிட்டு அழைத்தான். என்னை இன்னானென்று அறியாதிருக்கும் இவனுக்கு என்பெயர் மாத்திரம் எப்படித் தெரியும்? சபையோர்களே! அதைக்கேளுங் கள் முதலில்! கேளுங்கள் ஐயா!

சபா:—நீர் சும்மா இருமே ஐயா, விருத்தரே!

நீதி:—சாக்ஷிகளை விசாரிப்போமே.

சபா:—சாக்ஷிகள் மூவருள் ஒருவர் காலமாயினர்.

நீதி:—யாரவர்?

சபா:—காலங்கண்ட குருக்கள்.

சாந்த:—அப்படியா! எப்போ?

தார்க்கி:—இரண்டுமாத மாயின.

சாந்த:—அப்படியா!

தார்க்கி:—ஆம்.

நீதி:—மற்றைய இருவரையும் விசாரிப்போமே. ஒய் தலையாரீ!

தலையாரி:—(வந்து) என் சாமி! (கைகூப்பி நிற்குதல்)

நீதி:—நீ போய் மெய்கண்ட குருக்களையும், பொய்யாமொழிக் குருக் களையும், யாம் அழைப்பதாய் அழைத்துக்கொண்டு வா பார்ப் போம்.

தலையாரி:—அப்படியே அழைத்துக்கொண்டு வர்ரேன் சாமி! (ஏகி மீண்டுவந்து) இதோ ரெண்டுபேரும் வர்ரார்கள் சாமி. (ஏகு தல்.)

மெய்கண்ட:—(வருதல்)

சாந்த:—இதோ வந்தனர் மெய்கண்ட குருக்கள்.

யாவரும்:—வாருங்கள் வாருங்கள்! குருக்களவாள்! (ஆசனமளித்து) இதோ இவ்வாசனத்தில் இருங்கள்.

மெய்கண்ட:—(ஆசனத்தில் அமர்ந்திருத்தல்)

நீதி:—குருக்களவாளுக்கு மூப்பு அதிகரித்துவிட்டது, தேஹ ச்ரமங் கொடுத்தோம். மன்னியுங்கள்.

மெய்கண்ட:—விஷயம் என்ன?

நீதி:—விஷயமா, (கிழவரைக்காட்டி) இப் பெரியவர் உங்களுக்குத் தெரியுமோ?

மெய்கண்ட:—(கிழவரை உற்றுப்பார்த்து) விஷயத்தைச் சொல்லுங்கள்.

நீதி:—(ஓலையைக் கொடுத்து) இதனை முற்றும் வாசித்துப் பாருங்கள்.

மெய்கண்ட:—கண்மங்கல், பார்க்க முடியாது, நீரே வாசியுமே.

நீதி:—கணக்கப்பிள்ளை! அதனை நீர் வாங்கி வாசித்துக்காட்டும்!

கணக்க:—(ஓலையைப் பெற்று மெய்கண்டகுருக்களுக்கு வாசித்துக் காட்டுதல்.)

நீதி:—இதில், முதல் சாக்ஷி உம்மது. இரண்டாவது, பொய்யாமொழிக் குருக்கள். மூன்றாவது, காலங்கண்ட குருக்கள்.

மெய்கண்ட:—காலங்கண்ட குருக்கள் காலமாயினரே.

நீதி:—ஆம்.

மெய்கண்ட:—பொய்யாமொழிக குருக்களைக் கேட்டீர்களோ?

நீதி:—அவரும் இப்போது வருவர்.

பொய்யா:—(வருதல்.)

சபா:—இதோ வந்துவிட்டார் அவரும்.

யாவரும்:—வாருங்கள் வாருங்கள்! (ஆசனமளித்தல்)

பொய்யா:—(ஆசனத்தில் அமர்ந்து மெய்கண்டாரை நோக்கி) ஓ ஓ! குருக்களவாளும் வந்திருக்கின்றார்களே! என்னவிசேஷம்?

நீதி:—ஏதோ அடிமையோலையாம், பித்தனுக்கு ஆரூரன் எழுதிக் கொடுத்ததாம்.

பொய்யா:—ஆம்.

நீதி:—அதில், உம்முடைய சாக்ஷியும் உள்ளது.

பொய்யா:—ஆம். உள்ளதுதான்.

நீதி:—இவ்வெழுத்து உம்மதா பாரும்! (ஓலைகொடுத்தல்.)

பொய்யா:— என்னுடையதுதான். சந்தேகமென்ன? (ஓலையைப் பெற்றுப்பார்த்து) என் எழுத்தேதான் இது.

மெய்கண்ட:—(பொய்யாமொழியை நோக்கி) எதோ ஓலையை இப் படிக்காட்டும். (பெற்றுத் தமது பெயரை நிதானித்துப்பார்த்து) ஆம், இந்தக் கையெழுத்து என்னுடையதுதான்.

தத்வ:—கிழவரைக் கேலிசெய்தோமே, கேலிப்பு அவரதாயிற்றே!

தார்க்கி:—தடை என்ன?

நீதி:—நம்பிகளே! நீர் என்ன சொல்லுகிறீர்?

நம்பி:— விருத்தம.

*அனைத்துநூ லுணர்ந்தி ராதி சைவனென் றறிவீ ரென்னைத்*
*தனக்குவே றடிமை யென்றிவ் வந்தணன் சாதித் தானேல்*
*மனத்திறு லுணர்தற் கெட்டா மாயையென் சொல்லு கேன்யான்*
*எனக்கிது தெளிய வொண்ணு தென்செய்கேன் அந்தோ! அந்தோ!!*

சகலகலா பண்டிதர்களே! வேதவித்துக்களே! நான் ஆதிசைவ னென்று உங்களெல்லாருக்கும் தெரியும். அங்ஙனம் இருக்க, இந்த வ்ருத்த ப்ராஹ்மணர் தமக்கு என்னை அடிமையென்று சாதித்தாராயின், இதனை என் மனசினால் அறியபபடாத ஒரு மாயையென்று நினைக்க வேண்டுமே யன்றி வேறில்லை. இதைக் குறித்து நான் யாது சொல் லப்போகிறேன். ஐது, என்னுல் அறியபபடுதல் கூடாதது.

நீதி:—நம்பியாரே! (ஓலையை நீட்டி) இவ்வெழுத்து உம்முடைய பாட்டனர் எழுத்தா பாரும்.

கிழவர்:—(குதித்துத் தள்ளாடி உரத்தகுரலுடன்) ஐயா, குருக்களே! அவ்வோலையை அவன் கையில் கொடாதேயும் ஐயா!

சந்தி:—கொடுத்தால்தான் என்ன முழுகிப்போமோ? ஏது, இந்தப் பெரியவரிடத்தில் குறும்பு குடிகொண்டிருக்கிறது.

கிழவர்:—(சும்மா இருந்து) சும்மா இருக்கலா மென்றாலும் இருக்க முடியவில்லை. (நீதிமார்க்கரைநோக்கி) ஐயா, குருக்களே! நீர் அவனிடத்தில் ஓலையைக் கொடுக்கின்றீரே, இந்தச் சிறுவனு தன் பாட்டன் கையெழுத்தை அறியச் சக்தியுள்ளவன்? இவனு டைய பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்து இருந்தால் அதை வருவித்து இத்துடன் ஒத்துப்பார்த்து, உங்கள் மனசிலே தோன் றிய தீர்ப்பைச் சொல்லுங்கள் ஐயா, என்னுல் நிற்க முடிய வில்லையே. (பூமியைநோக்கி) வந்த காரியம் முடிந்தது.

**சாந்த:**—தள்ளாத கிழவர். எவ்வளவு நேரம் நின்றுகொண்டிருப்பர். கால் வலிக்குமே, இருக்கச் சொல்லலாமே ?

**நீதி:**— ஆம். விருத்தரே ! உட்காரும்.

**கிழவர்:**—அப்பா, நம்பி ! உனக்காக எவ்வளவு பாடு படுவது அப்பா ! இரண்டொரு வார்த்தையில் அடங்கிப் போமே. (ஆசனத்தில் அமருதல்).

**நீதி:**—கணக்கபிள்ளையவர்கள் ! நம்பியாரூரருடைய பாட்டனார் கையெழுத்து ஏதேனும் நம்மிடத்து உண்டா ?

**கணக்க:**— உண்டு, பார்க்கவேண்டும்.

**நீதி:**—பார்த்து, எடுத்துக்கொண்டு வாரும்.

**கணக்க:**— (ஏகி ஓலைக்கட்டுடன் வந்து அக கட்டைப் பிரித்துப் பார்த்து) இதோ இருக்கின்றது.

**நீதி:**— இதையும் அதையும ஒத்துப்பாரும், (ஓலை கொடுத்தல்)

**கணக்க:**—(ஓலை பெற்று நிதானித்துப்பார்த்து) ஒத்திருக்கிறது. ஒரு வித்தியாசமும் இல்லை. (ஓலையையும் கட்டையும்கொடுத்தல் )

**நீதி:**—(ஏடுகளை உற்றுநோக்கி) ஆம், ஒத்தே யிருக்கிறது. ஒரு வித்தியாசமும் இல்லை. தார்க்கிகருருக்களவாள் ! நீர் பாரும். (ஓலை கொடுத்தல்.)

**தார்க்க:**— (கவனித்துப்பார்த்து) பார்ப்பது, என்ன ! சரியாகத்தான் இருக்கிறது. சாந்தலிங்க குருக்களவாள் ! இந்தாரும், நீர்பாரும். (ஓலை கொடுத்தல்.)

**சாந்த:**—(வாங்கிப பார்த்துச் சந்நியாசியை நோக்கி) ஸ்வாமிகளே ! இந்தாரும், பார்ப்பானேன் ! நன்றாய்த் தெரிகின்றதே! (ஓலை கொடுத்தல்.)

**சந்நி:**—(பெற்றுச்சற்றுக் கவனித்து) சபாலங்கார குருக்களே ! சரி. நீர்தான் பாரும் ! (ஓலை கொடுத்தல்.)

**சபா:**—(ஓலைகளை உற்று நோக்கிப் பார்த்து) பார்த்தேன் ! பார்க்க வேண்டியது என்ன இதில் ! ஒன்று மில்லையே ! நீர்தான் பாரும் தத்வராயகுருக்களவாள் ! (ஓலைகொடுத்தல்.)

**தத்வ:**—(சீட்டைப பெற்றுப்பார்த்து) யாவரும் பார்த்து விட்டீர்கள். எனக்குத்தானா மாறுபடப் போகின்றது. அஃதில்லை ! இனி,

தீர்ப்பைத்தான் சொல்லவேண்டும்! (நீதிமார்க்கரிடம் ஓலை கொடுத்தல்.)

**நீதி:**—(பெற்று யாவரையும் நோக்கி) இன்னு மென்ன! தீர்ப்பைச் சொல்லி விடுவோமே!

**சாந்த:**—சொல்லிவிடுங்கள்.

**நீதி:**—சாந்தலிங்க குருக்களவாள்! உமது அபிப்பிராயத்தை விளக்க வேண்டும்.

**சாந்த:**—பட்டப்பகல் வெட்டவெளிச்சமாய் விளங்குகின்றதே இவ் வழக்கு. இதில் சம்சயமும் ஒன்று!

**நீதி:**—சபாலங்காரகுருக்களே! உம்முடைய அபிப்பிராயமோ?

**சபா:**—யாவும் சரியே. ஆயினும், அந்தணரும அடிமையாவது உண்டோ என்பதுதான் ஓர் ஆசங்கை!

**நீதி:**—தார்க்கிக குருக்களே! நீரோ?

**தார்க்கீ:**—ஐயா! விஷயம் சரியாகத்தான் இருக்கிறது ஆனால், என் யுக்தியை எவ்வளவுசெலுத்தினாலும் உண்மைதான் எட்டவில்லை. தீர்ப்பைச் சொல்லிவிடுங்கள்.

**நீதி:**—தத்வராயகுருக்களே! நீர் என்ன சொல்லுகிறீர்?

**தத்வ:**—நீதிமார்க்க குருக்களவாள்! யான் இதனை யோசிக்குங்கால் பகவன்மாயை எனவே தோன்றுகிறது! அடிமை அடிமைதான், ஆக்ஷேபமில்லை!

**நீதி:**—(சந்நியாசியை நோக்கி) ஸ்வாமிகளே! உமக்கு என்ன விளங்குகிறதோ?

**சந்நி:**—எனக்கா! என்னையா கேட்கிறீர்! நீர் தான் எல்லாவற்றையும் விசாரித்து விட்டீர். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஆனால், அதோ அந்தச் சபாலங்கார குருக்கள் சொல்லியபடி அந்தணர் அடிமையாகும் விஷயத்தைக்குறித்துத்தான் எனக்கும்யோசனை.

**நீதி:**—சரிதான், யாவும் முடிந்தன. விருத்த பராஹ்மணரே! நம்பியாரூரரே! இனி, தீர்ப்பு சொல்லப்படும்.

**நம்பி:**—அப்படியே செய்யுங்கள்.

**கிழவர்:**—செய்யுங்கள் குருக்கள்மார்களே! (எழுந்து நிற்குதல்.)

**நீதி:**—(*தீர்ப்பு எழுதி யாவரையும்நோக்கி) இதுதான் பஞ்சாயத்தார்களின் தீர்ப்பு. கேளுங்கள்.*

**நம்பி:**—(*ஒருபுறம நின்று பஞ்சாயத்தாரைப் பார்த்து, தீர்ப்பின்மீது செவிசாய்த்து நிற்குதல்)*

**கிழவர்:**—(*தண்டுன்றி, தலைகுனிந்து அசைந்து, சபையாரையும் நம்பியாரூரரையும் பார்த்துக்கொண்டு, தள்ளாடியிருத்தல்)*

*தீர்ப்பு*

---

திருவெண்ணெய்நல்லூர் பிச்சுகுருக்கள்

*திருநாவலூரா*

நம்பியாரூரர்மீது கொண்டுவந்த

வழக்கின் தீர்ப்பு.



*"ஒரு வழக்கைச் சாதிக்கவேண்டுமானால் திரிவித நிரூபணங்கள் வேண்டும், அவைகள், 1 - ஆவது அனுபவம். 2 - ஆவது லிகிதம். 3 - ஆவது சாக்ஷி."*

2. *"இம்மூவகை நிரூபணங்களால் ஒருவழக்கைச்சாதிப்பதற்குச் சக்தியில்லாவிடில், அதமபக்ஷம் இம்மூன்றினுள் ஏதாவது ஒன்று இரண்டைக் கொண்டாயினும் சாதிப்பது தான் நியாயம்."*

3. *"திருவெண்ணெய்நல்லூர் பிச்சுகுருக்கள் திருநாவலூர் நம்பியாரூரர்மீது கொண்டுவந்த இந்த அடிமைவழக்கை எறக்குறைய அனுபவ லிகித சாக்ஷிகளாகிய மூன்றினையுங் கொண்டு சாதித்து விட்டார்." இது உத்தம பக்ஷம்.*

4. (a) *"இப்பெரியவரை அறியமாட்டேன் என்றுசாதித்த நம்பியாரூரர் புத்தூரில் மணப்பந்தலில்* **பித்தா** *என்று இப்பெரியவரின் பெயரையே யிட்டு. அழைத்ததனால் பெரியவராகிய பிச்சுகுருக்கள் அனுபவ மூலமாய் வென்றார்."*

(b) "அடிமை யோலையைக் காட்டி விகித மூலமாய் ஜெயித்தார்."

(c) "சாக்ஷிகளையுங் கொண்டு ரூபித்தார்."

ஆகையால்,

"புத்தூரில் மணப்பந்தலில் கிழித்தெறியப்பட்ட ஓலை அடிமையோலை யென்றே நிச்சயிக்கப்பட்டது."

5. "மேற்போந்த திரிவித நிரூபணங்களால்" 'அந்தணர் அடிமையாவது அடாதது' என்னும் வாக்கியமானது அடியோடு தள்ளப்பட்டது. நம்பியாரூரர் பிச்சகுருக்களுக்கு அடிமையென்பது தடையின்றிக் கொள்ளப்பட்டது."

6. "இனி, நம்பியாரூரர் தப்புவதற்கோ வழி யில்லை: பிச்சகுருக்களுக்குத் தோற்றுப்போயினர். ஆனபடியால், நம்பியாரூரர் பிச்சகுருக்களுக்கு அடிமைப்பட்டு வழித்தொண்டு செய்வதே கடன்."



திருவெண்ணெய் நல்லூர்
சாலிவாகன *சகாப்தம் ௧௧௬
ஆனிமீ ௨௬உ

நம்பி:—சபையோர்களே! ஆதிசைவர்களே! அடிமை என்றால் மனுஷ்யனுக்கு மனுஷ்யன் அடிமையாவது!

விருத்தம்.

"கண்ணுதலாலயநோக்குங் கண்களேகண்கள்!
கறைக்கண்டன்கோயில்புகுங் கால்களேகால்கள்!

*காலம் உள்ளபடியே கிடைக்காவிடினும், இங்ஙனம் அமைத்தமை நாடகப்போக்கின் அவசரம் பற்றி.

பெண்ணொருபாகனைப்பணியுந் தலைகளே தலைகள் !
பிஞ்ஞகனைப்பூசிக்குங் கைகளே கைகள் !
பண்ணவன்றன்சீர்பாடும் நன்னாவே நன்னா !
பரன்சரிதையேகேட்கும் படுசெவியேசெவிகள் !
அண்ணல்பொலங்கழல் நினைக்கும் நெஞ்சமேநெஞ்சம் !
அவனடிக்கீழ்அடிமைபுகும் அடிமையே அடிமை ! "

அடிமைபட்டால், பார்வதி நாதனுக்கும் பரமேசுவரனுக்கன்றோ அடிமைப்பட்டிருக்கவேண்டும். மானிடனுக்கு அடிமையாவது மடமையன்றோ ? நான்மறை நன்குணர்ந்த சிலர்காள் ! விதிமுறை இதுவேயாயின், இதற்கு உடன்படாதிருத்தல் கூடுமோ ? உடன் பட்டுத்தான் தீரவேண்டும் !

நாரதர்:—ஐயா, பிச்சுகுருக்களே ! தொடுத்த வழக்கைச் சாதித்து விட்டீரே! இருந்தால் உம்மைப்போலன்றோ இருக்கவேண்டும்! கிழவர்களுள் வைரம்பெற்ற கிழவரையா நீர் !

கிழவர்:—(தலையசைத்து) இருக்கலாம்.

நீதி:— இந்தாரும், நீர் கொடுத்த அடிமையோலை (ஓலைகொடுத்தல்.)

கிழவர்:—(தள்ளாடிநடந்து பெறுதல்)

நீதி:—ஐயா, விருத்தரே ! உம்மைக் கேட்பது ஒரு விஷய முளது.

கிழவர்:—என்ன கேட்கிறீரோ ஐயா ! வழக்குத்தான் தீர்ந்து விட்டதே. இன்னுமென்ன ஐயா !

நீதி:—உமது பெயரை திருவெண்ணெயநல்லூர் பித்தனென்று உமது அடிமைச்சீட்டில் தீட்டியிருந்ததே, உம்மூர் இவ்வூரானால், இவ்வூரில் நீர் எத்தனை காலமாக உள்ளவர் ? உமது வீடு எங்கே ? உமக்குப் புத்திரபாக்கியம் உண்டா ?

கிழவர்:—(நகைத்து) என் ஊரா ? என் ஊரையா கேட்கிறீர் ? இந்தத் திருவெண்ணெய் நல்லூரே. இவ்வூரில் யான் தலைமுறை தலை முறையாக வுள்ளவன். எனக்குப் புத்திரபாக்கியம் ஒன்றுதான், சகல பாக்கியங்களும் உண்டு.

நாரதர்:—இருக்கட்டும், பெரியவரே ! எதோ உம்முடைய வீட்டைக் காட்டும் ? பார்ப்போம்.

கிழவர்:—காட்டுகிறேன், குருக்கள்மார்களே. நம்பியாரூரா, உனக்குத் தெரியாதா என்வீடு !

சங்கர சங்கர சம்பு-சிவ —,

"என்றும் அழியுமிக் காயம் - இதை
எதுக்கு மெய்யென் றிருந்தீர் உலகீர்
என்றும் அறியாத தோ - யமன்
ஓலைவந் தாற்சொல உத்தர முண்டோ."

சங்கர சங்கர சம்பு.

ஐயா, சபையோர்களே! தர்க்கசாஸ்திரங்களையும், தத்வசாஸ்திரங்களையும், ஞானசாஸ்திரங்களையும் பொழுதுபோவது தெரியாமல் பேசிப்பேசி, வாய்வம்பு அளப்பதில் வல்லவராய் நிற்கிறீர்கள். உலக விஷயத்தில் ஒருவர்க்கொருவர் உன்னைப்பிடி என்னைப்பிடி என்கிறீர்கள். இவ்வூரிலேயே நெடுநாளாகக் குடியிருக்கும் என்னை அறியமாட்டேன் என்கிறீர்களே! குருக்கள்மார்களே, எழுந்து வாருங்கள்! வீட்டைக் காட்டுகிறேன். நம்பியாரூரா! புறப்படு. உனக்காகத்தானே அப்பா இவ்வளவு பாடு. (கிழவரும் நம்பியாரூரரும் (ஏகுதல்)

நீதி:—குருக்கள்மார்களே! வாருங்கள் நாமும் போவோம். அப்பெரியவர் வீட்டைப் பார்க்கலாம்.

(யாவரும் ஏகுதல்)



## மூன்றாங்களம்.

இடம்: திருவருட்டுறை கோயில்
காலம்: மாலை.
பாத்திரம்: கிழவர்.

சூத்திரதாரர்:—இப்பொழுது, கிழவர் நம்பியாரூரையும் பஞ்சாயத்தார்களையும் தமது வீட்டைக் காட்டுவதாய அழைத்துச் சென்று, அவ்வூரிலுள்ள திருவருட்டுறை கோயிலுட் புகுந்து மறைந்தருள, நம்பியாரூர் திகைத்துத் தெளிந்து, பின் அன்பின் வயப்பட்டு நிற்குதல்

**கிழவர்:**—(திருவருட்டுறை கோயில்வாயிலையடைந்து) தம்பி, நம்பியாரூரா! பார்த்தனையா! (சுட்டிக்காட்டி) இதுதான் என் வீடு பெரியோர்களே! குருக்கள்மார்களே! யாவரும் பாருங்கள்! இதோ என் வீடு, பார்த்தீர்களா! (உட்புகுந்து மறைதல்)

**நீதி:**—நம்பிகளே! பெரியவர் எங்கே! பெரியவர் எங்கே!!

**நம்பி:**—வீட்டைக் காட்டுகிறேனென்று ஆலயத்தைக் காட்டினரே, என்ன ஆச்சரியம்! ஒவ்வொன்றும் ஆச்சரியமாக வல்லவோ இருக்கின்றது! உள்ளே சென்று கூப்பிடலாமா? (உட்புகுந்து) ஐயா, விருத்த பாரஹ்மணரே! வேதியரே! பராஹ்மஶ்ரேஷ்டரே! என்னை அடிமைகொண்டவரே! ஆதிசைவரே! யாண்டுளீர்? என்ன, வீடென்று சொல்லிக் கோயிலுக்குட் புகுந்தீரே! (வெளியில்வந்து தனக்குள்) என்ன, சந்தேகத்திற்கு இடமாயிருக்கிறதே! ஹே ஜெகதீசா! நின் திருக்கூத்தோ! திருவிளையாடல் செய்கின்றாயோ!

**பரமசிவன்:**—(விடைமேல் எழுந்தருளி) ஆம், ஆலாலசுந்தரா! நீ முன்னே நமக்கு வழித்தொண்டனாயிருந்தாய். நம் ஆணையால் பூமியிலே பிறந்தாய். இப்போது சம்சார பந்தமானது உன்னைத் தொடாதபடி நாமே வலியவந்து தடுத்து ஆட்கொண்டோம்.

**நம்பி:**—(வானத்தை நோக்கி, உரத்தகுரலுடன்) ஹே சங்கரா! நின் திருக்கூத்தா இது! ஆ! மாயம் தெரியாமல் மதிமோசம் போனேனே! எம்பெருமானுக்கு என்மீது கருணை யிருந்தவா

றென்னே! என்னே!! ஹே ஜெகதீசா! சம்போ! சந்த்ர சேகரா! கங்காதரா! காளகண்டா! கைலாசபதீ! கருணாநிதே! நின்கருணையை என்னெனக்கூறுகேன்! என்னெனக்கூறுகேன்!!

'—நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே! தேனா ரமுதே! சிவபுரனே!
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேரா அதுநின்ற பெருங்கருணைப் பேராறே!
ஆரா அமுதே! அளவிலாப் பெம்மானே—"

இந் நாயேன்பொருட்டு மானிடச்சட்டைதாங்கி வயோதிக வுருவமடைந்து, குடையேந்தித், தண்டூன்றித், தள்ளாடித் தள்ளாடி அடியேன் இருக்கும் குடிசைக்குட் புகுந்து ஆவணத்தைக் காட்டி அடியேனை வலிய ஆட்கொள்ளவந்த கருணையங்கடலே! நின்னை என்னெனக்கூறுகேன்!— என்ன பேறு பெற்றேன்! என்ன பேறு பெற்றேன்!! கருணையை வாரி யிறைக்கும் வள்ளலே! நீர் கொண்ட திருவுருவத்தைத் தரிசித்தபொழுதும், நும்மிடத்தினின்றும் தோன்றிய அமிர்த வாசகத்தைக் கேட்ட பொழுதும் சம்சயப்பட்டேன். அது சரியாய் விட்டதே!

விருத்தம்.

"கூன்செய்த பிறையணியுந் தண்டலையார் கருணைசெய்து
கோடி கோடி
யான்செய்த வினையகற்றி நன்மைசெய் தாலுபகாரம்
என்னா லுண்டோ?
ஊன்செய்த வுயிர்வளரத் தவந்தானம் நடந்தேற
உதவி யாக
வான்செய்த நன்றிக்கு வையகமென் செய்யுமதை
மறந்தி டாதே?"

கருணையையே திருவுருவாகக் கொண்ட காருண்யமூர்த்தீ! தேவரீர், அடியேனுக்குச் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் என்னசெய்யப் போகிறேன்! வான்செய்த நன்றிக்கு வையகம் என் செய்யும்?

பரமசிவன்:—அப்பா, ஆலாலசுந்தரா! நீ என்னுடன் வலிந்து பேசினமையால் வன்றொண்டன் என்னும் திருநாமம் பெற்றாய். நமக்கு அன்பினோடு செய்யத்தக்க அர்ச்சனையாவது பாட்டேயாகும். ஆதலால், நம்மீது தமிழ்ப்பாக்களைப் பாடக்கடவாய்.

நம்பி:—ஆ! பரமசிவனுக்கு என்மீதிருந்த பரம காருண்யமே காருண்யம். நாய்க்குத் தவிசிட்டு வைத்ததுபோலன்றோ இருக்கிறது நான்பெற்ற பேறு!

விருத்தம்.

"பாங்குளநாம் தெரிதுமெனத் துணிந்துகோடிப்
பழமறைகள் தனித்தனியே பாடிப்பாடி
ஈங்குளதென் றாங்குளதென் றோடியோடி
இளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந் தெட்டுந்தோறும்
வாங்குபர வெளிமுழுது நீண்டுநீண்டு
மறைந்துமறைந் தொளிக்கின்ற மணியே! எங்கும்
தேங்குபர மானந்தவெள்ளமே! சச்
சிதானந்த அருட்சிவமே! தேவ தேவே!"

மஹாதேவா! மஹாப்ரபு! அனந்த கோடிகோடி வேதங்களும் தொடர்ந்து தொடர்ந்து நின்னை எட்டமுடியாமல் இளைத்து நிற்கின்றனவே. அத்தகைய அருமையும் பெருமையும் பொருந்திய உமது திருவுருவம் என் கரங்களினால் எட்டப்பட்டு நின்றதே! ஆ! என்ன கருணை! என்னகருணை!! எனக்கும் உனக்கும் இருந்த பொருத்தம் என்னேயோ!

(காம்போதி)

பல்லவி.

"எனக்கு முனக்கு மிசைந்த பொருத்த மென்ன பொருத்தமோ!
இந்தப் பொருத்த முலகிற் பிறருக் கெய்தும் பொருத்தமோ!

சரணம்.

"எண்ணுந் தோறு மெண்ணுந் தோறு மென்னு ளினிக்குதே
இறைவ நின்னைப் பாட நாவி லமுதஞ் சனிக்குதே
கண்ணுங் கருத்து நின்பா லன்றிப் பிறர்பாற் செல்லுமோ
கண்டே னுன்னை யினிமே லென்னை மாயை வெல்லுமோ !"
(எனக்கும்)

விருத்தம்

வேதிய னாகி யென்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதிய மறியா தேனுக் குணர்வுதந் துய்யக்கொண்ட
கோதிலா அமுதே ! இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை யறிந்தென் சொல்லிப் பாடுகேன் ஆடுகேனே !

ஜெகதீசா ! க்ருபாநிதே ! பிரஹ்மாதி தேவர்கள் யாவரும் தேவரீருக்குத் தொண்டர்களாயிருக்க, இந்நாயேன்பொருட்டு பிராஹ்மணவடிவங்கொண்டு அடியேனை வழக்கினால் வெல்ல எழுந்தருளி வந்தமையை அறியாத சிறியேனுக்குப் பழைய அறிவைத்தந்து உலகவாழ்க்கையிலே மயங்காமல் உய்யும்படி செய்தருளிய கடவுளே! அடியேன் தேவரீருடைய அனந்த கல்யாணகுணங்களில் எதனையறிவேன், என் சொல்லிப் பாடுகேன், பணித்தருள்வீராக.

**பரமசிவன்:**—அப்பா, ஆலாலசுந்தரா ! நீ முன்னே என்னைப் '**பித்தா**' என்று அழைத்தபடியே அதனை முதலடியாக வைத்துப் பாடக் கடவாய்.

**நம்பி:**—(கண்களைமூடிச் சும்மாவிருந்து)

(பண்-இந்தளம்.)
திருச்சிற்றம்பலம்.

பித்தா ! பிறைசூடீ ! பெருமானே ! யருளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தா ! வுனக் காளாயினி யல்லேனெனலாமே !

* * * * *

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையாற்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனெனலாமே !

திருச்சிற்றம்பலம்.

பரமசிவன்:— ஆலாலசுந்தரா! வன்றொண்டா! நீ இன்னும் நம்முடைய புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடக்கடவாய்.

நம்பி:—(கண்களைமூடிக் கைகூப்பி நிற்குதல்.)

நீதி:—சாந்தலிங்க குருக்களே! ஸ்வாமிகளே! குருக்கள்மார்களே! என்ன ஆச்சரியம் நேர்ந்தது பார்த்தீர்களா! மின்னலைப்போல மறைந்தனரே!

(யாவரும் திகைத்துத்தெளிந்து நம்பியாரூரரைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து நிற்குதல்.)

நீதி:—(நம்பியாரூரரை நோக்கிக் கைகூப்பி) ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளே! தேவரீரது அருமையும் பெருமையும் தெரியாமல் சடையனார் புத்திரர் சாதாரணமனிதர் எனவே மதித்திருந்தோமே. இசைஞானியார் பெற்றெடுத்த செல்வமே! கருவிலே திருவுடைய கண்மணியே! பரமாசாரியமூர்த்திகளே! ஆதிசைவ குலதீபமே! அடியேங்களை ஆளவந்த தெய்வமே! தேவரீரது திருவருளால் என்ன பாக்கியத்தைப் பெற்றோம்! என்ன பாக்கியத்தைப்பெற்றோம்!! இதுகாறும் அந்தக்கருணைருபம் எங்கள் அருகில் நெருங்கியிருந்தும் தாமரையைச் சூழ்ந்துகிடக்கும் தவளைகளானோமே! எங்கள்குலதெய்வமே! சிவபிரான் தேவரீரை ஆட்கொண்டனர். தேவரீர் எங்களை, ஆட்கொள்ளுங்கள் ஸ்வாமி! (யாவரும் நம்பியாரூரரைப் பணிதல்.)

நம்பி:—(திருக்கோயிலைப்பணிந்து எழுந்து குருக்கள்மார்களை நோக்கி) வேதவேத்யர்களே! முப்பொழுதும் திருமேனி தீண்டும் முன்னோர்களே! நாம் நம் திருநாவலூர்ப்பிரானை வணங்கித் துதிப்போம், வாருங்கள்!

யாவரும்:—அப்படியே வருகிறோம், ஸ்வாமிகளே!

நம்பி:—நமஃ-பார்வதீ பதயே. } (மும்முறை)
யாவரும்:—ஹர ஹர மஹா தேவ. }

நம்பி:—(கரதாளத்தோடு யாவருடனும் திருநாவலூருக்கு ஏகுதல்.)

தேவ தேவ தேவ மஹா

முற்றிற்று.

---

# பின்னுரை.

**சூத்திரதாரர்:**—நடந்த கதையின் தொடர்ச்சி:—பரமசிவனால் வலிய வந்து ஆவணங்காட்டி வாதாடி வழக்குரைத்து ஆட்கொள்ளப் பட்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் திருவெண்ணெய் நல்லூரிலிருந்து திருநாவலூர், முதலிய திவ்வியக்ஷேத்திரங்களுக்குச்சென்று, தேவாரப் பதிகங்களைப்பாடி அதிக அற்புதங்களைச் செய்தனர். முடிவில், திரு வஞ்சைக்களம் என்னும் திவ்விய க்ஷேத்திரத்திற்கு எழுந்தருளி அங் கிருக்க, பரஹ்மாதி தேவர்களால் உபசரிக்கப்பெற்று வெள்ளையானை யின்மீது ஆரோகணித்து ஸ்ரீ கைலாசத்திற்கு எழுந்தருளி, பரம சிவனுடைய திருவடிகளை வணங்கித் துதித்து, முன்னிருந்தபடியே, ஆலாலசுந்தரராகித் திருத்தொண்டு செய்து கொண்டிருப்பவராயினர். கல்யாணப்பெண்ணாகிய புத்தூர் சடங்கவி சிவாசாரியருடைய புத்திரி யார், தமக்கென நாயகனாக நியமித்து வைத்திருந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளையே சதா தியானம் செய்துகொண்டிருந்து சிவபதம் அடைந்தனர். எடுத்துக்கொண்ட கதைக்கு, முன்னும்பின்னும் உள்ள தொடர்ச்சிகள் சுருக்கமாகக்கூறி முடிக்கப்பெற்றன.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாம்அர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.



தமிழ் மகள்—அணி—1.

# ஸ்ரீ சுந்தரமூர்த்தி

(தடுத்தாட்கொள்ளப்பெறுதல்.)

ஈசனருளை எடுத்துக்காட்டும்

ஓர்

## இனிய நாடகம்




சென்னை சூளை

ஸ்வாமி விவேகாநந்த ஹிந்துபாலிகா பாடசாலை

தலைமை உபாத்தியாயர்

**சே. மு. வேலு முதலியார்**


இயற்றியது.


முதற் பதிப்பு - 1000

தமிழ்க்கல்வி வளர்சங்கம்,

சூளை, சென்னை.

1916




[விலை அணா - $2\frac{1}{2}$.

*T. Chelvakesavaroya Mudaliyar*, M.A.

PERAMBUR

*Madras N 9th October* 1916.

சுந்தரமூர்த்தி நாயனார் புராணத்தில் உயிர்நிலையான பகுதியைப் பாலரும் பாலிகைகளும் படித்தும் நடித்தும் நடிக்கக் கண்டும் ஆநந்தமடையுமாறு மூன்று களமுள்ளதாய் இயற்றியுள்ள ஸ்ரீ சுந்தரமூர்த்தி என்னும் சிறிய நாடகத்தைப் படித்து மிக்க மகிழ்ச்சி அடைந்தேன். அச்சம் வியப்பு உருத்திரம் நகை என்னும் சுவைகள் இனிதமைந்துள்ள இந்நாடகத்தை இயற்றிய ஸ்ரீமாந் வேலுமுதலியார், இங்ஙனமே பக்தி ரசம் ஒழுகும் வேறு சில திருத்தொண்டர்களுடைய புராணங்களையும் நாடகமாக அமைத்துதவி எல்லோரையும் மகிழ்விப்பாரென்று எதிர்பார்க்கிறேன்.

தி. செல்வக்கேசவராயன்.

பச்சையப்பன் கல்லூரி.

# முகவுரை.

பெரும்பாலும் பாடசாலைகளில் மத சம்பந்தமான படிப்பின்மை யால், சிறுவர்கள் தம்தம் மதவிஷ யங்களை அறிந்துகொள்ளக் கூடா தவர்களாகவே இருக்கின்றார்கள். அவ்வம் மதச்சார்பான விஷயங் களை சிறு நூற்களின் வாயிலாய் எளிய நடையில் கதாரூபமாகவும், நாடக ரூபமாகவும், வெளிப்படுத் துதலே இக்குறையை நீக்கும் உபாயங்களில் ஒன்று என்பது கற்றோர்களின் அபிபபிராயம். அதனை முன்னிட்டே இச்சிறு நூலை எழுதத்துணிந்தேன்.

இனிய குயிலோசைக்கு முன் காக்கை கரைவதையொத்த என் புன் சொற்களி லுள்ள குற்றம் நாடாது குணத்தைக் கைக்கொள் ளும் தமிழ் வல்லார்மாட்டு யான் அளிக்கும் வந்தனங்கள் அளவில.

இதனை வெளி யிடுவதற்குப் பற்பல உதவிபுரிந்தும், கிளர்ச்சி யையுண்டாக்கியும் வந்த நண்பர் கட்கு என் அன்பார்ந்த வந்தனத் தை அளிக்கக் கடமைப் பட்டுள் ளேன்.

செ. மு. வே.

## விநாயகர் துதி.

எப்போ தகத்தில் நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

## சபாநாதர் துதி.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம.

## ஸ்ரீசுந்தரமூர்த்தி நாயனார் துதி.

ஒருமணத்தைச் சிதைத்துச்செய் தொருவரைக்கிட டாட்கொண்ட
உவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பிணிகொண்ட வல்லாளன்
எல்லை முய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த பெருமானின்
பெயரா னொன்றும்
திருமணக்கோலப்பெருமாள் மறைப்பெருமாள் எமதுகுல
தெய்வமாமால்.

## ஆசிரிய வணக்கம்.

இப்புவி யினிதி னென்று மியற்றி யுமிழ்ந்த தன்னை
அற்பினுக் கன்னை யாகி யருத்தியே யென்னைக் காக்கும்
அப்பனை யுளத்தி ருனை அப்பனை யான்முன் செய்த
நற்பயன் றனைப்பா வல்லோர் நாதனை வழுத்து வேனே.

௨

# ஸ்ரீ சுந்தரமூர்த்தி.

(தடுத்தாட்கொள்ளப்பெறுதல்.)

———:o:———

## முன்னுரை.

சூத்திரதாரர்:—ஸ்ரீ சேக்கிழார் நாயனார் செய்தருளிய பெரியபுராணத்துள் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பரமசிவனால் தடுத்தாட்கொள்ளப்பட்ட கதை இப்பொழுது இங்கு நடிக்கப்படும். இதனுடைய முன்தொடர்ச்சி :—

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபியாகிய பரமசிவன், ஆன்மாக்களுக்கு அருளும்பொருட்டு, மாயாகாரியமாகிய சரீரம்போலாகாது சத்தியகாரியமாயுள்ள சரீரத்தை யெடுத்து, தமது அருட்சத்தியாகிய பார்வதி தேவியுடன் ஸ்ரீ கைலாசகிரியிலே வீற்றிருப்பார். அக்கடவுளுக்குத் திருத்தொண்டுசெய்யும் அடியார்கூட்டத்துள் ஆலாலசுந்தரர் என ஒருவர் உண்டு. அவர், ஒருநாள் தாம் செய்யும் திருத்தொண்டின் தவறினாலே பரமசிவனால் தக்ஷிணபூமியிலே மானுட தேகம் எடுக்கும்படி ஆஜ்ஞாபிக்கப்பட்டனர். அவ்வாஜ்ஞையை வகித்த ஆலாலசுந்தரர் மனங்கலங்கி, சந்நிதியில் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து எழுந்துநின்று அஞ்சலியஸ்தராய், “ஸ்வாமி! தேவரீருடைய அருமைத் திருவடிகளைப் பிரிதற்கு ஹேதுவாகிய கொடும்பாவத்தைச் செய்தவனாகிய சிறியேன், மயக்கம்பொருந்திய மானுடபிறப்பை யெடுத்து, கொள்ளவேண்டியது இன்னது, தள்ளவேண்டியது இன்னது என்று அறியாமல் பிரபஞ்சவாழ்க்கையிலே மயங்கும்போது, தேவரீர் வெளிப்பட்டுவந்து அடியேனைத் தடுத்து ஆட்கொண்டருள வேண்டும்,” என்று பிரார்த்தித்தனர். வேண்டுவார் வேண்டியதை

களை ஈந்தருளுங் கடவுளும் அவ் வேண்டுகோளுக்கு இசைந்தருளி னார். பின்பு, ஆலாலசுந்தரர் பூமியிலே புண்ணியபூமியாகிய பரத கண்டத்திலே, தமிழ் வழங்கும் நிலமாகிய தென்னாட்டைச்சார்ந்த திரு முனைப்பாடி நாட்டிலே, திருநாவலூரிலே, ஆதிசைவ ப்ராஹ்மண குலத்திலே, சடையனாரது மனைவியாராகிய கற்பிலேசிறந்த இசை ஞானியார் என்னும் மாதுசிரோமணியிடத்திலே, ஆன்மாக்கள் சைவ சமயமே மெய்ச்சமயமென்று உணர்ந்து அதனை அனுசரித்து உய்யும் பொருட்டு அவதாரம் செய்தனர். தாய்தந்தையர், அவதரித்த அப் பிள்ளைக்கு நம்பியாரூரரென்று நாமகரணஞ் செய்தார்கள். நம்பியா ரூரரும் இளம்பிறைபோல வளர்ந்துவரும் நாளில், அந்நாட்டு அரச ரால் நன்குமதித்து அபிமானபுத்திரராகப் பாவித்து வளர்க்கப்பட்டு வந்தனர். அங்ஙனம் அரசரால் அவர் வளர்க்கப்படினும், தமது ஆதி சைவத்திற்குரிய ஒழுக்கத்தையே யுடையவராகி, உரியகாலத்தில் உப நயனஞ் செய்யப்பெற்று, வேதங்களை அத்தியயனஞ்செய்து, சகலகலை களிலும் மஹா பாண்டித்திய முடையவராய், விவாகஞ் செய்வதற்கு உரிய பருவத்தை யடைந்தனர்.

தந்தையாராகிய சடையனார் அது கண்டு, தமது குலத்திற்கேற்ப, புத்தூரிலிருக்கும் சடங்கவி சிவாசாரியாரிடத்திலே, அவருடைய புத்தி ரிக்கும் தமது புத்திரர்க்கும் மணம்பேசி வரும்படி, சில முதியோர்களை அனுப்பினார். அதற்கு, சடங்கவி சிவாசாரியார் உடன்பட்டதைக்கண்ட சடையனார் மகிழ்ச்சிகொண்டு முகூர்த்தநாள் நியமித்து, பெண்வீடா கிய புத்தூரில் விவாகம் நடக்கப்போகின்றதாகத் தமது பந்து மித்திரர் களுக்கு விவாகபத்திரம் விட்டனர். யாவரும் விஜயஞ் செய்திருந்தார் கள். நம்பியாரூரரும் விவாகத்திற்கு முன்னாள் சமாவர்த்தனம்பண்ணி ரக்ஷாபந்தனஞ் செய்து, மறுநாள் நித்திய கர்மங்களை முடித்துக் கொ ண்டு, மணக்கோலத்துடன் குதிரைமேல் ஏறி, மஹா அலங்காரத்தோடு புத்தூரிலே சடங்கவி சிவாசாரியார் வீட்டிலே திருக்கல்யாணப் பந்த ருக்கு முன்சென்று, குதிரையினின்றும் இறங்கி உள்ளே சென்று ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தனர்.

இவ்வாறு அமர்ந்திருக்குந் தறுவாயில், பரமசிவனவர், தாம் கைலாசகிரியிலே வாக்கிட்டபடி நம்பியாரூரரை உலகவாழ்க்கையிலே மயங்கவிடாமல் தடுத்தாட்கொள்ளும் பொருட்டு, ஒரு வயோதிக

பிராஹ்மணவடிவங் கொண்டு அவ்விடத்தில் எழுந்தருளி, கல்யாண பிள்ளையாகிய நம்பியாரூரரை நோக்கி, "அப்பா! உனக்கும் எனக்கும் ஓர் அடிமைவழக்கு உண்டு" என்று ஓர் ஓலையைக்காட்ட, அதற்கு நம்பியாரூரர் கோபங் கொண்டு கிழவரை நோக்கி, "அந்தணர் அடிமை யாவது எங்கேனும் உண்டா? அடா பித்தா!" என்று சொல்லிக் கொண்டு, அக் கிழவரைத் தொடர்ந்தோடிச் சென்று அங்குள்ள ஒரு காவணத்தில் (சோலையில்) இறுகப்பிடித்து, அவரிடமிருக்கும் ஓலை யைப் பறித்துக் கிழித்தெறிந்தார். கிழவரோ கூக்குரலிட்டனர். இதைக் கண்ட பிராஹ்மணர்கள் கிழவரை நோக்கி "நீர் யாரையா? சிவபூஜையில் கரடி புகுந்ததுபோல எங்கிருந்து புறப்பட்டீர்? உம்மூர் எது?" எனக்கேட்டனர். பின், அன்பரை ஆதரிக்கின்ற பரம கருணா நிதியாகிய விருத்தர், "ஐயா! நாம் இருப்பது திருவெண்ணெய் நல்லூர், இந்த நம்பியாரூரனை விடமாட்டோம். அவனை, அவ்வூரிலேயே அழைப்பித்து நியாயம் தீர்த்துக்கொள்ள எமக்குத் தெரியும்" என்று சொல்லினர்.

இது நிற்க, இப்பொழுது கல்யாணபிள்ளையாகிய நம்பியாரூரர் அந்தக் காவணத்திலேயே பிரமைகொண்டு தனித்து நின்று தனக்குத் தானே பேசிக்கொண்டிருந்தனர்.



## நாடக பாத்திரங்கள்.

| | |
|---|---|
| 1. கிழவர். | குடுக்காட்டிகொள்ளும்பரமசிவன். |
| 2. நம்பியாரூரர். | மணமகன். (ஆலாலசுந்தரன்.) |
| 3. காமாக்ஷி. | விவாகத்திற்கு வந்திருந்தவர்கள். |
| 4. மீனாக்ஷி. | |
| 5. மார்க்கசகாய குருக்கள். | |
| 6. சந்நியாசி. | வழிப்போக்கர். |
| 7. நீதிமார்க்க குருக்கள். | பஞ்சாயத்தார்கள். |
| 8. சாந்தலிங்க குருக்கள். | |
| 9. தார்க்கீக குருக்கள். | |
| 10. தத்வராய குருக்கள். | |
| 11. சபாலங்கார குருக்கள். | |
| 12. தலையாரி. | |
| 13. கணக்கப் பிள்ளை. | |
| 14. மெய்கண்ட குருக்கள். | சாக்ஷிகள். |
| 15. பொய்யாமொழி குருக்கள். | |
| 16. காலங்கண்ட குருக்கள். | |

உ

# ஸ்ரீ சுந்தரமூர்த்தி.

## (தடுத்தாட்கொள்ளப்பெறுதல்.)

## முதற்களம்.

இடம்: காவணம் [புத்தூரில்.]
காலம்: காலை
பாத்திரம்: நம்பியாரூரர்

நம்பி:—(தனக்குள்) ஆ, தெய்வமே! சற்றுநேரத்திற்கு முன் என்ன கோலாகலமாகிவிட்டது! அரைநாழிகைக்குள் நம்முடைய மானத்தை வாங்கிவிட்டானே அக் கிழவன்! முதலில் அவன் சபைக்கு வரும்பொழுது ஏதோ நம்மை வேடிக்கையாய் ஏளனம் பண்ணுகிறானென்றுதான் இருந்தேன். போகப்போக விளையாட்டு வினையாய் முடியும் என்கிறார்களே, அது இதுதானோ? ஆ! யான் மணம் புரிந்துகொள்வது மங்கைபாகனுக்கும் சம்மதமில்லையோ? ஹா கங்காதரா! இவ்வாறுதான் என்னைக் கைவிடுவையோ!—அக் கிழவன் யாவனாயிருப்பான், நம் பாட்டனாருக்கு நண்பனாயிருப்பனோ? அல்லது பைத்தியக்காரனோ? அல்ல. ரூபமோ திவ்ய தேஜஸாயிருக்கிறது, முகத்தில் பால் வடிகின்றதே! நம் பாட்டனாரும் அவ்வளவு பைத்தியக்காரராயிருப்பாரா? அடிமைச்சீட்டையா எழுதிக் கொடுத்திருப்பார்? அவர் இவனிடத்தில் செய்யத்தகாத குற்றம் என்ன செய்திருப்பார்? அங்ஙனமே அவர் செய்ததாகவே வைத்துக்கொள்வோம், சந்ததி முற்றும் அடிமை என்கிறானே, என்ன விந்தையாயிருக்கிறது! சாதாரண மனிதன் பேசுகின்ற பேச்சாகத் தோன்றவில்லையே! என்ன ஆச்சரியம்! என்ன காலம்! ஈதென்ன மாயம்! உலகத்தில் ஒருவனுக்கு அடிமைப்பட்டு வாழ்ந்திருப்பதா வாழ்க்கை?

(காமாக்ஷியும் மீனாக்ஷியும் வருதல்)

காமாக்ஷி:—அடி மீனாக்ஷி! இதோ இருக்கிறான் நம் தம்பி. (நம்பியை நோக்கி) ஆ தம்பி! ஏன் இவ்வாறு தியங்கி நிற்கிறாய்? ஏன்

தூக்கிக்கவேண்டும்! வம்புக்கிழுத்த கிழவனெங்கே! சீமாயிரு. ஏன் பயப்படுகிறாய்!

**நம்பி:**—அம்மா—எனக்கென்ன பயம்!

### விருத்தம்.

நெடுங்கடல் சூழு மிந்த நிலமதனி லம்மா!
திடீரென விண்ணி னின்று திண்ணெனக் குதித்த தேபோல்,
கடிமணம் புரியு நாளிக் காவலன் தன்னில் நின்றிப்
படியொரு கிழவ னால்யான் படுதுயர் பட்டேன் பாமே!

அம்மா! பார்த்தீரா அக் கிழவனை! புதிய சம்பந்தம், மஹாசபை, முகூர்த்தவேளை இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு திடீரென வானத்தினின்று குதித்ததுபோலன்றோ இருக்கிறது அக்கிழவன் சபையிற் புகுந்தது!

**காமாக்ஷி:**—அப்பா! நீ இவ் விஷயத்தைக் குறித்து இவ்வளவு தீர்க்கமாய் யோசித்துத் தக்கி பதி உசிதமாய்த் தோன்றவில்லை. ஏனென்றாலோ! அவனோ கிழவன், உள்ளே வந்தான், சபையைப் பார்த்தான், பறை கொண்டான், ஏதோ வாயில் வந்தபடி பிதற்றிவிட்டுப் போனான். நீ அக்கிழவனைப் 'பித்தர்' என்று நேரில் கேட்டதுபோல் அவர் ஒரு பித்தனைப்போலத்தானே காணப்படுகின்றான்.

**நம்பி:**—அம்மா! அப்படிச் சொல்லாதேயும் அக்கிழவனை. நீர் அவன் உருவத்தை நன்றாய்ப் பார்க்கவில்லைபோல் இருக்கிறது. கக்கத்தினின்றும் ஏதோ ஓர் ஓலையை எடுத்துப் படிக்கத் தொடங்கினானே, அதனைத்தான் என் பாட்டனெழுதிக்கொடுத்த ஓலை என்கிறான். அச்சமயம் யானும் அவசரப்பட்டுவிட்டேன். சற்று நிதானித்திருந்தால் விஷயமுற்றும் கிரகித்திருக்கலாம்.

**மீனாக்ஷி:**—ஆம் தம்பி! அவசரப்பட்டு விட்டாய், நிதானித்திருக்க வேண்டும்.

**நம்பி:**—எப்படி நிதானிப்பேன் அம்மா! மஹாசபையில் கிழவனொருவன் நுழைந்து "நீ எனக்கு அடிமை, ஊழியம் செய்வதற்கு வா!"

என்று அதட்டிக் கூக்குரலிட்டால் நிதானம் எங்கிருந்து வரும் நீரே சொல்லுமே.

மீனாக்ஷி:—ஆம், அதுவும் மெய்தான். ஆனால், ஒன்று செய்யலாம் அக் கிழவன் இருக்கும் ஊருக்கு நாமும் சென்று அங்குள்ள நால்வரை வைத்துக்கொண்டு கேட்டால் நியாயம் விளங்கிப் போகாதா?

மாக்க:—(வந்து) நம்பிகளே! அழைக்கின்றார்

நம்பி:—யார்?

மாக்க:—உம்மை அடிமைகொள்ள வந்தவர்.

நம்பி:—என்னை அடிமைகொள்ள வந்தவரா? ஆ! என்னை அடிமைகொள்ள வந்தவர் என்னை அழைக்கின்றாராமே! கண்டவர் நகைக்குங் காலமாயிற்று?

ஆஹிரிபட்பா

கண்டார் நகைக்கக் காலம் நேர்ந்ததே!
கண்டார் நகைக்கக் காலம் நேர்ந்ததே!
அந்தண னொருவன் அடிமை யாவதும்
அகிலந் தாங்குமோ! அந்தணாளரே!!
அந்தணர் குலத்துள் ஆதிசைவர் நீர்!
ஆதி சைவனென் றென்னையு மறிவீர்!
தொண்டு கிழவன் ஒருவனெழுந்தே
அடிமையென் றென்னை யழைக்கற் கழுவேனோ.
பெண்டுகள் முன்னர்ப் பேரவமானம்
பிறந்து பேதைபோல் நிற்றற் கழுவேனோ!
கடிமணம் புரியுங் காலந் தன்னில்இக்
கொடுமை நேர்ந்ததற் கழுவேனோ! கண்டார்
யாவரும் நகைக்கக் காலம் நேர்ந்ததே!
யாவரும் நகைக்கக் காலம் நேர்ந்ததே!

சந்நி:—தம்பி, குழந்தாய்! அடியேன் உம்மைக் கேட்டதென்ன? அடியேன்மீது இவ்வளவு கோபம் ஏன் செய்துகொள்ளுகின்றாய்?

நம்பி:—என்ன சொன்னீர்! அடியேனா? நீரா எனக்கு அடிமை? தகாத வார்த்தை சொன்னீர்! சகலத்தையும் நியாசம்பண்ணி சந்நியாசியெனப் பெயர்பெற்ற நீரா எனக்கு அடிமை? பேஷ், நன்றாயிருக்கிறது! நான்தான் ஒரு கிழவேதியனால் அடிமையெனப்பட்டுத் தட்டுக்கெட்டுத் தடுமாறிநிற்கின்றேனே இவ்வூரில்! (காமாக்ஷியை நோக்கி) அம்ம, கிழவனை அழைத்து வருவதாய்ச்சென்ற குருக்கள் இன்னமுங் காணோமே. ஏன்?

சந்நி:—என்ன சமாசாரம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! அப்பா, நீ யார்? இவ்வூர்தானோ?

நம்பி:—நான் இவ்வூரல்ல, திருநாவலூர்.

சந்நி:—சரி, இவ்விடத்தில் இங்ஙனம் நின்று துக்கித்துக்கொண்டிருப்பானேன்?

காமாக்ஷி:—ஸ்வாமி! இவ்வூரில் கல்யாணம் எங்கென்று கேட்டீரே, இவர்தாம் அந்த கல்யாணபிள்ளை.

சந்நி:—அப்படியா! (அருகில் நெருங்குதல்)

தந்த தன்ன தனன தன்னதன—தனதான.

காமா. மீனா:—“தொந்திசரிய மயிரேவெளிறநரை
தந்தமசைய முதுகேவளையஇதழ்
தொங்கவொருகை தடிமேல்வரமகளிர்—நகையாடித்
தொண்டுகிழவ னிவனாரெனஇருமல்
கிண்கிணெனமு னுரையேகுழறவிழி
துஞ்சுகுருடு படவேசெவிடுபடு — செவியாகி”

மீனாக்ஷி:—இவ்வாறு பரிகசிக்கத்தக்க கோலத்தோடு ஒரு கிழவன் திருமணப்பந்தலில் புகுந்து நம் தம்பியைச் சொல்லத்தகாத வார்த்தையைச் சொல்லியிருக்கிறான். அத்தோடு நின்றதா! சீட்டும் ஒன்று காட்டினான்.

சந்நி:—அப்பா, தம்பி! அவர்கள் சொல்லிக்கொண்டு வரும்போதே எனக்கு மயிர்ச்சிலிர்ப்புண்டாகின்றது. உம்மை என்னென்று

சொல்லினார் அக்கிழவர்? அவரை முன்பின் பார்த்ததுண்டோ நீர்? எந்த ஊர் அவர்?

**நம்பி:**—இதோ இந்தத் திருவெண்ணெய் நல்லூரென்று சொல்லுகிறார் அவர். யானோ அவரை அறிகிலேன். நான் அவருக்கு அடிமையாம்.—(தனக்குள்) கிழவரை அழைத்துவரச் சென்ற குருக்கள் இன்னமுங் காணோமே!

**மார்க்க:**—(வந்து) நம்பிகளே! அந்த வ்ருத்த ப்ராஹ்மணர் நீர் தனியாயிருக்கும் இவ்விடத்திற்கு வரமாட்டாராம். இறுகப்பிடித்து அவரிடத்திலிருந்த அடிமையோலையைக் கிழித்தெறிந்தீராம். நீர் கொலையும் செய்துவிடுவீரென்று பயப்பட்டு நிற்கிறார். அவர் திருவெண்ணெய் நல்லூருக்கு வரச்சொன்னாராமே உம்மை!

**நம்பி:**—ஆம். அவ்வூருக்கே சென்று இவ்வழக்கைப பஞ்சாயத்தார் முன்னிலையில் தீர்த்துக்கொள்ளலாம். ஒருவனுக்கு ஒருவன் அடிமையென்றால் இலேசாக விட்டுவிடுவார்களா! பஞ்சாயத்தார்களென்ன பாமரர்களாகவா இருக்கப் போகிறார்கள்! பயப்பட்டு நிற்கின்றாராமே! அடிமையென்று என்னை அழைக்கப் பயமில்லையோ! என்ன பாசாங்கு செய்கிறானையா அக்கிழவன்! திருவெண்ணெய் நல்லூருக்கு வந்து என்னவென்று சாதிப்பானோ பார்க்கலாம்! ஒன்றைச் சாதிப்பதற்கு சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய இம்மூன்றும் வேண்டாவோ? அவன் அழைத்தபடியே திருவெண்ணெய் நல்லூருக்குப் போவோம். நல்லவர்கள் இருக்கமாட்டார்களா, அவ்வூரில்!—ஆ, தெய்வமே! இப்போது இங்ஙனம் நடக்கும் யாவையும் யான் கனவு காண்கின்றேனோ! என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்!! (விரைவொடு) வாருங்கள் போவோம். விடமாட்டேன் அக்கிழவனை.

(யாவரும் ஏகுதல்)



# இரண்டாங்களம்.



இடம்: திருவெண்ணெய் நல்லூர்.
காலம்: மாலை.
பாத்திரம்: பஞ்சாயத்தார்களும், கிழவரும்.

**சூத்திரதாரர்:**—பரமசிவனாகிய கிழவேதியர், திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று பஞ்சாயத்தார் முன்னிலையில் வழக்குப்பேசி நம்பியாரூரரைத் தமக்கு அடிமையாக்கிக்கொள்ளுதல்.

(பஞ்சாயத்தார்களின்முன் கிழவர் முறையிடுதல்.)

**கிழவர்:**—ஐயா, குருக்கள்மார்களே! நீங்கள் என் பக்ஷமாய்ப்பேச வேண்டாம். நியாயத்தை விசாரியுங்கள். காட்டிய சீட்டைக் கிழித்து எறிந்துவிட்டானே, ஐயா! ஐயா!!

**நம்பி:**—(வருதல்)

**கிழவர்:**—இதோ வருகிறான் ஐயா! பார்த்தீர்களா குறிப்பாக! இவன் தான் ஐயா! இவன்தான்!! (நம்பியைநோக்கி) தம்பீ! கல்யாண கோலத்தோடுதான் பஞ்சாயத்தாருக்குமுன் வரவேண்டுமோ? சற்றுவிலக்கி வரப்படாதோ? என்னகாரியம் செய்தவன் ஐயா இவன்! அஞ்சாத நெஞ்சன்!!

**நீதி:**—வாரும் நம்பிகளே! என்ன, கல்யாணத்தில் வழக்கு வந்து விட்டதாமே!

**நம்பி:**—ஆம்.

**சந்நி:**—(வருதல்)

**நீதி:**—வாரும், ஸ்வாமிகளே! எதுக்கு நிற்கவேண்டும், இருக்கலாமே.

**சந்நி:**—(ஆசனத்தில் அமருதல்)

**நீதி:**—நம்பிகளே! ஏன் நும்மீது வழக்கு உரைக்கின்றார் இப் பெரியவர்!

**நம்பி:**—ஆ, சபையோர்களே! என்னகாலம் இது. விதிவசமும் இவ்வாறுமோ? என்னை அடிமை என்கிறாரே இப் பெரியவர்!

(சாவேரி - ஆதிதாளம்.)

பல்லவி.

அன்னிய ருக்கடிமை யாவே ஞெநான்
ஆதிசைவ ஞெச்சே. (அன்னி)

அநுபல்லவி

அன்னிய ருக்கடிமை யாவது சிறுமை
பன்னகபூஷணை பரற்கடிமை பெருமை. (அன்னி)

சரணம்

ஒருவற்கடிமைப்பட்டிவ் வுலகில் வாழ்வதினும்
உயிரைப் போக்குவதே நன்மை
கருதரிய நீல கண்டற் கடிமையென்றென்
கருத்தி லமைந்திருப்ப துண்மை
விருதுடை கேசரி வீறிழுந்த நரிக்கு
வெங்காட்டி யோடுதல் பொய்ம்மை
திருவெண்ணெய் நல்லூர்த் தேவதேவனது
திருவுளத்தருளது மெய்ம்மை. (அன்னி)

இப் பெரியவர் யாரோ இன்னாரென்று நான் அறிகிலேன். இவர் இற்றைக்காலை என்னை அடாதவார்த்தை கூறிப் படாதபாடு படுத்தி விட்டார் ஐயா!

கிழவர்:—(நம்பியைநோக்கி) அப்பா, தம்பீ! பிள்ளையாண்டான்! உனக்கும் துக்கம் என்பது தோன்றிற்று? நாணம் என்பதும் ஒன்று உண்டா? கல்நெஞ்சு படைத்தவனுச்சே நீ! கல்லுங் கரையுமே, உன் மனம் கரையாதே!

ஆசிரியப்பா.

யாவரும் கேண்மோ! யா வரும் கேண்மோ!
என்னென மதித்தீர் இந்தப் பையலை!
இற்றைக் காலைப் புத்தூ ரதனில்
சுற்றஞ் சூழ வதுவையின் பொருட்டுத்
திருமணக் கோலத் துடன்வீற் றிருக்கும்
தருணத் திலியான் அவையிற் புகுந்தே

இவன்றன் பாட்டன் தீட்டிய அடிமைச்
சீட்டினை விரித்து நீட்டிப் படிக்கையில்
கொண்டு கிழவ னாகிய என்றனைத்
தொடர்ந்து வந்தனன் அங்கோர் காவணந்
தன்னி லிறுகப் பிடித்தச் சீட்டினைச்
சின்னா பின்னா மாகச் செய்தனன்.
யாவரும் கேண்மோ! யாவருங் கேண்மோ!
என்னென பகர்த்தீர் இந்தப் பையலை!

ஐயா! இற்றைக்காலை, புத்தூரில் இந்தப் பிள்ளையாண்டானுக்குக் கல்யாணம். அதற்காக இவ்வூரிலிருந்து தள்ளாடித் தள்ளாடிச் சென்று, சபையார் அறிய அடிமையோலையை விரித்துப் படிக்கத் தொடங்கினேன் ஐயா! உடனே, இவன் கோபத்துடனே என்னைத் துரத்திக் கொண்டு வந்தனன். யானும் இவனுக்கு அகப்படாமல் ஓடோடிச் சென்று ஒரு காவணத்தில் ப்ரமித்து நின்றுவிட்டேன். நின்றதும் என்னை இறுகப்பற்றி என் கையிலிருந்த ஆவணத்தைப் பறித்துக் கிழித்தெறிந்தான் ஐயா! அம்மட்டில் விட்டாரோ இவன்! பலவாறு வைதுந் தீர்த்தான். இவ்வளவும் உண்மையா வென்று கேளுங்கள்! கேளுங்கள் ஐயா அவனை!

சாந்த:—தம்பீ! அவ்வளவு காரியம் ஏன் செய்தாய்? சீட்டைக் கிழித்தது வாஸ்தவந்தானோ?

நம்பி:—வாஸ்தவந்தான். என்ன சமாதானமாகக் கூறினாலும் இவர் போனபாடில்லையே. மஹாசபையில் வந்து என் மானத்தை வாங்கிவிட்டார் ஐயா! பேசுவதில் வெகு சமர்த்தர் இக்கிழவர்!

சாந்த:—ஆம் ஐயா, அவர் காட்டிய சீட்டை நீர் ஏன் கிழித்தீர்? மற்றவை கிடக்கட்டும்.

தார்க்கீ:—சீட்டைக் கிழித்தது வாஸ்தவமென்றுதான் ஒப்புக்கொண்டாரே, அதில் உள்ள விஷயம் என்னவென்று கேளுமே!

நம்பி:—விஷயத்தை யான் காணவில்லை.

தார்க்கீ:—பின் காணாமல் ஏன் கிழித்தீரையா! ஒருவருடைய சீட்டை நீர் எப்படிக் கிழித்தெறியலாம்?

**கிழவர்:**—ஐயா, குருக்களே! அதைக்கேளும் ஐயா! அதைத்தான் கேளும்! என் பங்கிலும் தெய்வமிருக்கும்.

**தார்க்கீ:**—ஐயா, வ்ருத்த ப்ராஹ்மணரே! அதிலுள்ள விஷயந்தான் என்ன? நீர் சொல்லுமே!

**கிழவர்:**—நானென்ன சொல்வது. பிள்ளையாண்டானுக்குத் தெரியாதா? அவன் இபபொழுதும் சொல்லக் கேட்டீர்களே!

**தத்வ:**—என்னவென்று கேட்டோமையா!

**கிழவர்:**—நம்பியாரூரன் எனக்கு அடிமையென்று.

**தத்வ:**—ஏதையா, கிழவரே! நம்பி சொல்வதுபோல் வெகு சமர்த்தராயிருக்கிறீர் சீர்!

**கிழவர்:**—ஆம் ஐயா, குருக்கள்மார்களே! இவ்வளவுதூரம் கேட்கிறீர்களே, பிள்ளையாண்டானும் சீட்டைக் கிழித்தெறிந்ததாகத்தானே ஒப்புக்கொண்டான். சீட்டைக் கிழித்ததனாலேயே இவ்வழக்கின் உண்மை வெட்டவெளிச்சமாய் உங்களுக்குத் தெரியவில்லையோ? ஏன் வழக்கை வளர்த்துகிறீர்களே! இரண்டொரு வார்த்தையில் முடித்துவிடலாகாதோ?

**நீதி:**—'சீட்டைக் கிழித்தான், சீட்டைக் கிழித்தான்' என்று கூக்குரலிடுகிறீரேயன்றி, சீட்டை ஒருவருக்கும் காட்டினபாடில்லையே. அதனை அடிமைச் சீட்டென்று நீர்தான் சொல்லுகிறீர். கிழித்தெறியப்பட்ட சீட்டு அடிமைச் சீட்டுதான் என்று ரூபிக்க உம்மால் முடியுமோ? அங்ஙனம் அடிமைச் சீட்டாயினும் யாருடைய அடிமைச் சீட்டோ, யாருக்குத் தெரியும்?

**கிழவர்:**—ஐயா! என்னை யாவரும் சேர்ந்து அம்பலத்தில் விட்டீர்களே! நல்ல கேள்வியைத்தான் நீரும் கேட்டீர். தகுந்த கேள்விதான். சீட்டைக் காட்டவேண்டு மென்கிறீர்களோ? அதனை இவன்தானே கிழித்தெறிந்தான்! வேறொருவரல்லவே! கேளுங்கள் ஐயா அவனை! (மேல்நோக்கி) ஹே சங்கரா! திருவிளையாடல் செய்கின்றாயோ! (பூமியைநோக்கி) அவர்கள் கேட்பதும் நியாயந்தான், எழுத்துமூலந்தானே எதற்கும் பலம். (சபையை நோக்கி) என் சீட்டினை என்ன காரியத்திற்காகக் கிழித்தான்

இவன் ? அதைக் கேளுமே! அப்போது கிழித்த காரணம் வெளிப்படாதா ?

நீதி:—ஐயா விருத்தரே !

கிழவர்:—ஐயா !

நீதி:—அவர்தான் அச் சீட்டிலுள்ள விஷயம் இன்னது எனக்காண வில்லை என்கிறுரே, அதைக் குறித்து நீர் என் மன்றுடுகிறீர் ஐயா ? நடக்கவேண்டியதைக் கவனியுமே.

சபா:— கிழவர் வெகுசமர்த்தரையா, ஏதோ ஓர் ஓலையைத் தானே கிழித்தெறிந்துவிட்டு, 'கிழித்தெறியப்பட்ட ஓலை அடிமை யோலை, கிழித்தெறியப்பட்ட ஓலை அடிமையோலை' என்று பாட்டுப்பாடுகிறுர். பார்த்தீர்களா கிழவருடைய தந்த்ரம் !

கிழவர்:—என்ன தந்த்ரம் பண்ணுகிறேன் ஐயா ?

சபா:—பின் என்ன ! நீர் எடுத்ததோ, பெருத்த வழக்கு. அதிலும் தொடு வழக்கு. எழுத்துமூலந்தானே வழக்குக்குப் பிடிப்பு. (தார்க்கீகரை நோக்கி) என்ன தார்க்கீகருருக்களே! சும்மா இருக்கின்றீரே, நான் சொல்வதென்ன நியாயந்தானே?

கிழவர்:—ஐயா! ஐயா !! நீங்கள் கேட்பது நியாயந்தான் ! மெத்தவும் நியாயந்தான் ! இல்லை என்று யார் சொன்னது ?

மோனமுடிசசிந்து.

ஐயா ஒன்றுகேளும் !

என்னை - அவனிவனென்றுநீங்கள் எண்ணவேண்டாம் மையத் தெரியுமது—இந்தப் - பையலுக்காகநீங்கள் பரியாதீர் - எப்படி யெனுநீங் கள்—இவழக்குக் - கெதிர்வழக்கெடுப்பினும்விடுவேனே - தொடுப்பேன் ஒருவழக்கை—வழக்கினைத் - தப்பிநுவென்றுநீங்கள் தள்ளிவிடினும் - தரணியறியவும்மைச்—சும்மா - விடுவேனோநான்விடமாட்டேன் - ஐயா இன்னென்றுகேளும்—சீட்டைக் - கிழித்ததனுல் நீங்கள்குதிக்காதீர் - மதி யுங்கள் என்னையுமே—நாட்டுக் - கிழவன் ஒருவனிவன் யாரோவென் - றையங்கொள்ளாதீர் — ஐயா-ஐயங்கொள்ளாதீர் !

சபையோர்களே ! என்னை நீங்கள் சாதாரணக் கிழவனுக மதித்து வாய்வம்பு அளக்கவேண்டாம். நீங்கள் இவ்வழக்கில் போகின்றபோக்கை நிதானித்துப் பார்த்தால் அவன் எனக்கு அடிமை என்பதை மறைத்து,

என்னை அவனுக்கு அடிமையாக்கி விடுவீர்கள்போல் இருக்கிறதே! 'வாசகம் வல்லார்முன்னின் றியாவர்வாய் திறக்கவல்லார்.' யாவும் இருக்கட்டும் ஐயா! நான் ஒன்றுகேட்கிறேன். கிழவனுடைய ஓலையை என் கிழித்தாயடா என்று இதுகாறும் அவனை அதட்டிக் கேட்டபாடில்லையே! யாவரும் ஒருதலையாகவே நிற்கிறீர்களே! என் பங்கிலும் மங்கைபாகன் இருக்கானு! அம்பா! நீயும் என்னைக் கை விடுவையோ!

**நீதி:**—விருத்தரே!

**கிழவர்:**—ஐயா!

**நீதி:**—என்ன இவ்வாறு பேசுகின்றீரே?

**கிழவர்:**—(உரத்தகுரலுடன்) பின் என்ன குருக்களே! என் சீட்டுக் கிழித்தெறியப்பட்டதனுலேயே நான் எடுத்த வழக்குப்போய் விட்டதா? நான் ஏமாந்து நின்றதாய் நீங்கள் கருதக்கூடும்.

"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவமென் பது இழுக்கு"

ஒரு காரியத்தைத் தொடங்காமலேயே இருக்கவேண்டும். தொடங்கியபின் கடைசிவரையில் ஒரு கை பார்த்தே விடவேண்டாமா? (உரத்தகுரலுடன்) ஐயா, குருக்கள்மார்களே! இதுகாறுந்தான், எழுத்து மூலம் எங்கே எழுத்துமூலம் எங்கே என்று பாட்டுப் பாடினீர்கள். புத்தூரில் மணபபந்தலில் அந்தப்பாபதுஷ்டனுல் கிழித்தெறியப்பட்ட ஓலைபடியோலை என்று பதிப்புங்கள் இதோ இருக்கிறதே மூலவோலை என்னிடத்தில், இதற்கென்ன செய்வீர்கள் குருக்கள்மார்களே!

**தத்வ:**—நீதிமார்க்ககுருக்களே! ஏது கிழவர் கெட்டிக்காரராயிருக்கின்றார்.

**கிழவர்:**—ஆம், ஐயா! வெட்டிப்பேசினுல் கெட்டிக்காரன்தான். நான் கிழவனுயிருப்பினும் உம்மைபபோல வழவழவென்று பேசவில்லையே. 'நியாயவாதி வெகுஜனவிரோதி' என்று உலகம் சொல்வது சஹஜந்தானே!

**நீதி:**—ஐயா! உமது மூலவோலையைச் சற்றுக்காட்டும், பார்ப்போம்.

**கிழவர்:**—(சும்மா இருத்தல்)

**சந்நி:**—என்ன நிதானம்? எடுத்துக்காட்டுமே!

**சாந்த:**—காட்டுவாரையா, நாம் ஏன் அவசரப்பட வேண்டும்.

கிழவர்:—சீட்டைக் காட்டச்சொல்லுகின்றீரா? காட்டத் தடையில்லை. பிள்ளையாண்டானைக் குறித்து யோசிக்கிறேன்.

சாந்த:—ஏன், கிழித்து விடுவாரென்று? அவ்வாறு ஒன்றும் நடவாது, நீர் காட்டும் ஐயா!

கிழவர்:—நடவாதுதான். எனக்கும் தெரியும். நீங்கள் மெத்த நல்லவர்கள். நல்ல அந்தணர்கள் வாழும் திருவெண்ணெய்நல்லூராச்சே இது. பிள்ளையாண்டான்தான் பரமதுஷ்டன்.

நீதி:—விருத்தரே! இத்தனை பேர்கள் நிறைந்துள்ள இச்சபையில் அவர் கிழிப்பரா சீட்டை? எதோ சீட்டைக்காட்டும்?

கிழவர்:—ஐயோ! ஐயா! அப்படிச் சொல்லாதேயும். இது ஒரு கூட்டமா? புத்தூரில் மணபபந்தலில் மஹாசபையில் என்னைக் கோலங் காட்டினனே இவன்! ஆள் அழகனென்று பார்க்கிறீர்களோ? இங்கிருக்கும் யாவரும் அவன் ஒருவனுக்கு நிகராகமாட்டீர்கள். மெத்த பலசாலி. என்ன வலுவையா அவனுக்கு!

நீதி:—இவ்வளவுக்கும் சீட்டைக் காட்டினபாடில்லை. கதை பேசுகிறீர். பொழுதாகிறது!—காட்டுமையா சீட்டை!

கிழவர்:—காட்டுகிறேன். முன்போல் ஆகிவிட்டாலோ? சீட்டுக்கு உத்தரவாதம் நீங்கள் தானே, சம்மதந்தானே?

சந்தி:—கிழவரிடத்தில் கொஞ்சம் பாசாங்கும் உண்டுபோல் இருக்கிறது.

கிழவர்:—(நகைத்து) உள்ளதைச் சொல்லினல் பாசாங்கா!

தத்வ:—நீர் எடும் ஐயா சீட்டை! நாங்களே உத்தரவாத மாகிறோம். அவ்வளவு துஷ்டரா அவர்?

கிழவர்:—என்ன கேட்கிறீர், துஷ்டர் என்று கேட்கிறீர்? அதற்கென்ன சந்தேகம்! பரமதுஷ்டன், பரமதுஷ்டன்!

(சங்கராபரணம்.)

என்னகண்டீரையா ஏதுகண்டீரையா
இவன்துஷ்டத் தனத்தினையே (என்ன)

நீதி:—(பாடிக்கொண்டிருக்கும்போதே) ஐயா, விருத்தரே!

கிழவர்:—ஐயா!

**நீதி:**—என்ன? ஓலை எடும் என்றால் பாட்டுப் பாடுகின்றீரே! பாட்டு வேண்டாம். காலதாமதம் ஆகிறது. சீட்டை எடும்.

**கிழவர்:**—அப்படியே. மெத்தப் பொல்லாதவன் ஐயா இவன்! இவனைப் போல் யான் எங்குங் கண்டதில்லையே!

**நீதி:**—சரி, கிடக்கட்டும். நீர் எடும் ஓலையை.

**கிழவர்:**—எடுக்கிறேன். முன்போல் ஆனாலோ?

**தார்க்கீ:**—அப்படி ஒன்றும் நடவாதையா! இதனை ஒரு நீதி விசாரிக்கும் சபையென்று மதிக்கவில்லைபோல் இருக்கிறதே நீர்!

**கிழவர்:**—ஐயா! கோபங்கொள்ளாதேயும். நீங்கள் எவ்வளவு தைரியங் கொடுத்தாலும் பிள்ளையாண்டான் விஷயத்தில் எனக்கு நம்பிக்கையில்லையே.

**சந்நி:**—பின், எதைத்தான் செய்யச் சொல்லுகிறீர் ஐயா நீர்!

**சபா:**—சாந்தலிங்க குருக்களே! கிழவர், தம்மிடத்தில் ஓலை இருப்பதாகச் சொல்வது மெய்யோ பொய்யோ? அதைத் தெரிந்துகொள்ளுங்கள் முதலில்.

**சாந்த:**—சும்மா இருங்களையா! கிழவர், தள்ளாதவர். என்னசெய்வார் அவர்?

**நீதி:**—சாந்தலிங்க குருக்களே! இதற்கு என்ன செய்யலாம்?

**சாந்த:**—வ்ருத்த ப்ராஹ்மணரே! நாழிகையாகிறது. என்ன சொல்லுகிறீர்?—ஐயா விருத்தரே! என்ன யோசிக்கிறீர்?

**கிழவர்:**—(குதித்துப்பின்னிடைந்து) ஒன்றுமில்லை. நம்பியாரூரன் என்னைத் தூக்கிக்கொண்டு வருவதுபோல் இருக்கிறது. அவன்—,

**தத்வ:**—அவர்மீதிலேயே உமக்குப் பித்தம் பிடித்து விட்டதுபோல் இருக்கிறதே!

**கிழவர்:**—ஐயா! அவன் என்னை மணப்பந்தலிலே 'பித்தா' என்றும் அழைத்திருக்கின்றானே ஐயா!

**சந்நி:**—யாவும் இருக்கட்டும். ஓலையைச் சற்றுக் காட்டும்.

**கிழவர்:**—அப்படியே காட்டுகிறேன். வருவது வரட்டும். (மூலவோலையை எடுக்கத் தொடங்குதல்)

**நம்பி:**—(தம் இடத்தைவிட்டுக் கிழவரிடம் செல்லுதல்)

**கிழவர்:**—(குதித்துச் சற்றுவிலகி உரத்தகுரலுடன்)பார்த்தீர்களா! பார்த்தீர்களா!! இவன் ஒருவருக்கும் அஞ்சாத நெஞ்சம் படைத்தவன் ஐயா! இத்தனை பேர்களுக்கு நடுவில் அடிமையோலையை யான் எடுத்துக் காட்டுகிறேனென்று அருகில் வருகின்றனே, ஐயா! நீங்கள் என்மீது தயைகூர்ந்து, அசையாமல் அவனை ஓரிடத்தில் நிற்கச்செய்யுங்கள். அங்ஙனம அவனைச் செய்தாலன்றி எனக்குத் தைரியம் பிறககாது. அவ்வாறு செய்யுங்கள் ஐயா!

**சாந்த:**—ஐயா, நம்பியாரூரரே! பெரியவருக்கு ஏதோ நும்மீது துரபிப பிராயம் தோன்றிவிட்டது. உம்மைக்குறித்து எங்களுக்கும் பேசுவதற்கு வாயில்லை. என்? அவருடைய ஓலையை நீர் கிழித்ததனுல் அவர் சொல்லுகிறபடி சற்று எட்டஇருந்தால் காரியமும் துரிதத்தில் ஆகிவிடும். உமக்கும் வாலிபம், கல்யாண மிடுக்கு. நீரோ இவ்வாறு கூத்தாடினல் அவருக்கு எபபடியிருக்கும்? (கிழவரை நோக்கி) ஐயா, வார்த்திகரே! உம்முடைய வேலை யாகட்டும்!

**நம்பி:**—(தம் இடத்திற்சென்று) சபையோர்களே! இவர் யாரோ திடீரென்று வானத்திலிருந்து குதித்ததுபோல் குதித்தனரே! இவரை இன்றுரென்றும் யான் அறிகிலேனே! எனக்குப் பழைய வழக்காளியோ இவர்!

**சபா:**—நம்பிகளே! நீர் சும்மா இரும். (கிழவரைநோக்கி) ஓலையெடுமே!

**கிழவர்:**—இதோ எடுக்கிறேன். (கட்டையவிழ்த்து ஓலையை எடுத்து) நானே வாசிக்கட்டுமா?

**தாக்கீ:**—வேண்டாம்! வேண்டாம்!! எதோ சீட்டைக்காட்டும். நாங்களே பார்க்கிறோம். (கைநீட்டுதல்)

**கிழவர்:**—(சீட்டைக்காட்டி) இதோ காட்டினேன். பார்த்தீர்களா! பார்த்தீர்களா!! நன்றாய்ப பாருங்கள் ஐயா!

**நீதி:**—பெரியவரே! காட்டவேண்டாம். கையிற் கொடும்.

**கிழவர்:**—பிள்ளையாண்டான், ஜாக்ரதை.

**சந்நி:**—ஒன்றும் நடவாதையா! சும்மா கொடும், பார்ப்போம்.

**கிழவர்:**—கொடுக்கிறேன், கொடுக்கிறேன். ஹே அம்பா! பரமேஸ்வரீ! நீயே என் பங்கிலிருந்து இச் சீட்டுக்குக் காவலா யிருக்கவேண்டும். உன்னைத்தான் நம்பினேன். சபையோர்களே! பராமுகமா யிருக்கவேண்டாம். யாவருக்கும் அவன்மீது ஒருகண் இருக்கட்டும். இவனுக்குப் பெண் கொடுக்கவந்த பெரியவர்கள் என் கண்ணில் அகப்படவில்லையே. ஐயா! இந்தாரும் என் அடிமைப்பத்திரம். கொடுத்தேன், கொடுத்தேன். யாவரும் பாருங்கள் ஐயா! பாருங்கள் ஐயா யாவரும்! பிள்ளையாண்டான் ஜாக்ரதை, ஜாக்ரதை ஐயா! (அடிமையோலையைக் கொடுத்தல்.)

**நீதி:**—(ஓலையைக் கைநீட்டிப் பெற்றுத் தனக்குள் படித்துப்பார்த்தல்)

**கிழவர்:**—நாழிகை யாகிறதையா!

(பஞ்சாயத்தார்கள் தம்முள் ஒருவரிடமிருந்து ஒருவர் ஓலையைப் பெற்றுப்பார்த்தல்.)

**கிழவர்:**—என்ன தாமதம்? நாழிகையாகிறதே! சீட்டை உற்றுப்பார்க்கிறான் பிள்ளையாண்டான். ஜாக்ரதை ஐயா!

**நீதி:**—தலையாரி எங்கிருக்கிறான்? தலையாரீ!

**தலையாரி:**—(கைகூப்பிவந்து) என் சாமி!

**நீதி:**—நீ போய், கணக்கப்பிள்ளையை யாம் அழைப்பதாய் அழைத்துக் கொண்டு வா, சீக்கிரம்!

**தலையாரி:**—அப்படியே சாமி! (ஏகி மீண்டுவந்து) இதோ வர்ரார் சாமி கணக்கெப்பிள்ளை. (கைகூப்பி ஏகுதல்.)

**கணக்க:**—(வந்து) நமஸ்காரம்.

**நீதி:**—வாருங்கள் கணக்கப்பிள்ளையவாள்! இவ்வோலையைப் பிரித்துச் சற்று வாசியுங்கள். (ஓலையைக்கொடுத்தல்.)

**கணக்க:**—(ஓலையைப்பெறுதல்).

**தார்க்கி:**—ஐயா, கணக்கப்பிள்ளை! உள்ளதை உள்ளவாறு வாசியுங்கள், நீர் ஏதேனும் புள்ளி தீட்டப்போகிறீர். முன்னமே இது தீரா வழக்கா யிருக்கிறது.

**நீதி:**—கணக்கப்பிள்ளை! ஆகட்டும்.

**கணக்க:**—(ஓலையை நிதானித்துப்பார்த்து.)

விருத்தம்.

"அருமறை நாவ லாதி சைவனு ரூரன் செய்கை
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கியானு மென்பால்
வருமுறை மரபு ளோரும் வழித்தொண்டு செய்தற் கோலை
இருமையால் எழுதி நேர்ந்தேன் இதற்கிவை என்னெ ழுத்து."

சாக்ஷிகள்.

[illegible]

**தத்வ:**—சரி, விளங்கினது. இது, செய்யுள்நடை யாதலின், சில ருக்கு விளங்கி யிராது. பொருளை விளங்கிக் காட்டிவிடும். யாவர்க்கும் நன்றாய்த் தெரியட்டும்.

**கணக்க:**—திருநாவலூரில் இருக்கின்ற ஆதிசைவனுகிய ஆரூரன் என்கின்ற நான், திருவெண்ணெய்நல்லூரில் இருக்கின்ற பித்தனுக்கு, நானும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்வதற்கு உள்ளும் புறமும் ஒப்ப உடன்பட்டு இவ்வடிமை யோலையை எழுதிக்கொடுத்தேன். இதற்கே, இது என் கையெழுத்து, என்பதுதான் இதன் கருத்து.

**கிழவர்:**—சபையாருக்கல்லவா! கணக்கப்பிள்ளை வாசித்ததை யாவரும் கேட்டீர்களல்லவா? யான் சொல்வதையும் தயைபுரிந்து சற்றுக் கேட்பீர்கள். (கணக்கப்பிள்ளையை நோக்கி) ஐயா, கணக்கப் பிள்ளை! பிள்ளையாண்டான் ஓலையைப் பறிக்கப் பார்க்கிறுன், ஜாக்ரதை. நீர்தான் வாசித்துக் காட்டிவிட்டீரே, குருக்களிடத் தில் சேர்த்துவிடுமே ஓலையை. (சபையை நோக்கி) இப் பிள்ளையாண்டான் என்னை அறியமாட்டேன் அறியமாட்டேன் என்று பலமுறையும் சொன்னுனே! அது உங்கள் யாவருக்கும் தெரிந்ததுதானே. இருக்க; இற்றைக்காலை புத்தூரிலே மணப்பந்

தலிலே என்னை, 'பித்தா' என்று என் பெயரிட்டு அழைத்தான். என்னை இன்னானென்று அறியாதிருக்கும் இவனுக்கு என்பெயர் மாத்திரம் எப்படித் தெரியும்? சபையோர்களே! அதைக்கேளுங்கள் முதலில்! கேளுங்கள் ஐயா!

சபா:—நீர் சும்மா இருமே ஐயா, விருத்தரே!

நீதி:—சாக்ஷிகளை விசாரிப்போமே.

சபா:—சாக்ஷிகள் மூவருள் ஒருவர் காலமாயினர்

நீதி:—யாரவர்?

சபா:—ஆலங்கண்ட குருக்கள்.

சாந்த:—அப்படியா! எப்போ?

தார்க்கி:—இரண்டுமாத மாயின.

சாந்த:—அப்படியா!

தார்க்கி:—ஆம்.

நீதி:—மற்றைய இருவரையும் விசாரிப்போமே. ஓய் தலையாரீ!

தலையாரி:—(வந்து) என் சாமி! (கைகூப்பி நிற்குதல்)

நீதி:—நீ போய் மெய்கண்ட குருக்களையும், பொய்யாமொழிக் குருக்களையும், யாம் அழைப்பதாய் அழைத்துக்கொண்டு வா பார்ப்போம்.

தலையாரி:—அப்படியே அழைத்துக்கொண்டு வர்ரேன் சாமி! (ஏகி மீண்டுவந்து) இதோ ரெண்டுபேரும் வர்ரார்கள் சாமி. (ஏகுதல்.)

மெய்கண்ட:—(வருதல்)

சாந்த:—இதோ வந்தனர் மெய்கண்ட குருக்கள்.

யாவரும்:—வாருங்கள் வாருங்கள்! குருக்களவாள்! (ஆசனமளித்து) இதோ இவ்வாசனத்தில் இருங்கள்.

மெய்கண்ட:—(ஆசனத்தில் அமர்ந்திருத்தல்)

நீதி:—குருக்களவாளுக்கு மூப்பு அதிகரித்துவிட்டது, தேஹ ஶ்ரமம் கொடுத்தோம். மன்னியுங்கள்.

மெய்கண்ட:—விஷயம் என்ன?

நீதி:—விஷயமா, (கிழவரைக்காட்டி) இப பெரியவர் உங்களுக்குத் தெரியுமோ?

மெயகண்ட:—(கிழவரை உற்றுப்பார்த்து) விஷயத்தைச் சொல்லுங் கள்.

நீதி—(ஓலையைக் கொடுத்து) இதனை முற்றும் வாசித்துப் பாருங்கள்.

மெயகண்ட:—கண்மங்கல், பார்க்க முடியாது, நீரே வாசியுமே.

நீதி:—கணக்கப்பிள்ளை! அதனை நீர் வாங்கி வாசித்துக்காட்டும்!

கணக்க:—(ஓலையைப் பெற்று மெய்கண்டகுருக்களுக்கு வாசித்துக் காட்டுதல்.)

நீதி:—இதில், முதல் சாக்ஷி உம்மது. இரண்டாவது, பொய்யாமொழிக் குருக்கள். மூன்றாவது, காலங்கண்ட குருக்கள்.

மெயகண்ட:—காலங்கண்ட குருக்கள் காலமாயினரே.

நீதி:—ஆம்.

மெய்கண்ட:—பொய்யாமொழிக குருக்களைக் கேட்டீர்களோ?

நீதி:—அவரும் இபபோது வருவர்.

பொய்யா:—(வருதல்.)

சபா:—இதோ வந்துவிட்டார் அவரும்.

யாவரும்:—வாருங்கள் வாருங்கள்! (ஆசனமளித்தல்)

பொயயா:—(ஆசனத்தில் அமர்ந்து மெய்கண்டாரை நோக்கி) ஓ ஓ! குருக்களவாளும் வந்திருக்கின்றீர்களே! என்னவிசேஷம்?

நீதி:—ஏதோ அடிமையோலையாம், பித்தனுக்கு ஆரூரன் எழுதிக் கொடுத்ததாம்.

பொயயா:—ஆம்.

நீதி:—அதில், உம்முடைய சாக்ஷியும் உள்ளது.

பொய்யா:—ஆம். உள்ளதுதான்.

நீதி:—இவ்வெழுத்து உம்மதா பாரும்! (ஓலைகொடுத்தல்.)

பொயயா: — என்னுடையதுதான். சந்தேகமென்ன? (ஓலையைப் பெற்றுப்பார்த்து) என் எழுத்தேதான் இது.

**மெய்கண்ட:**—(பொய்யாமொழியை நோக்கி) எதோ ஓலையை இப்படிக்காட்டும். (பெற்றுத் தமது பெயரை நிதானித்துப்பார்த்து) ஆம், இந்தக் கையெழுத்து என்னுடையதுதான்.

**தத்வ:**—கிழவரைக் கேலிசெய்தோமே, கெலிப்பு அவரதாயிற்றே!

**தார்க்கி:**—தடை என்ன?

**நீதி:**—நம்பிகளே! நீர் என்ன சொல்லுகிறீர்?

**நம்பி:**— விருத்தம்.

*அனைத்துநூ லுணர்ந்தீ ராதி சைவனென் றறிவீ ரென்னைத்*
*தனக்குவே றடிமை யென்றிவ் வந்தணன் சாதித் தானேல்*
*மனத்தினு லுணர்தற் கெட்டா மாயையென் சொல்லு கேன்யான்*
*எனக்கிது தெளிய வொண்ணு தென்செய்கேன் அந்தோ! அந்தோ!!*

சகலகலா பண்டிதர்களே! வேதவித்துக்களே! நான் ஆதிசைவனென்று உங்களெல்லாருக்கும் தெரியும். அங்ஙனம் இருக்க, இந்த வ்ருத்த ப்ராஹ்மணர் தமக்கு என்னை அடிமையென்று சாதித்தாராயின், இதனை என் மனசினுல் அறியப்படாத ஒரு மாயையென்று நினைக்க வேண்டுமே யன்றி வேறில்லை. இதைக் குறித்து நான் யாது சொல்லப்போகிறேன். இது, என்னுல் அறியப்படுதல் கூடாதது.

**நீதி:**—நம்பியாரூரரே! (ஓலையை நீட்டி) இவ்வெழுத்து உம்முடைய பாட்டனுர் எழுத்தா பாரும்.

**கிழவர்:**—(குதித்துத் தள்ளாடி உரத்தகுரலுடன்) ஐயா, குருக்களே! அவ்வோலையை அவன் கையில் கொடாதேயும் ஐயா!

**சந்நி:**—கொடுத்தால்தான் என்ன முழுகிப்போமோ? ஏது, இந்தப் பெரியவரிடத்தில் குறும்பு குடிகொண்டிருக்கிறது.

**கிழவர்:**—(சும்மா இருந்து) சும்மா இருக்கலா மென்றாலும் இருக்க முடியவில்லை. (நீதிபார்க்கரைநோக்கி) ஐயா, குருக்களே! நீர் அவனிடத்தில் ஓலையைக் கொடுக்கின்றீரே, இந்தச் சிறுவனு தன் பாட்டன் கையெழுத்தை அறியச் சக்தியுள்ளவன்? இவனுடைய பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்து இருந்தால் அதை வருவித்து இத்துடன் ஒத்துப்பார்த்து, உங்கள் மனசிலே தோன்றிய தீர்ப்பைச் சொல்லுங்கள் ஐயா, என்னுல் நிற்க முடியவில்லையே. (பூமியைநோக்கி) வந்த காரியம் முடிந்தது.

**சாந்த:**— தள்ளாத கிழவர் எவ்வளவு நேரம் நின்றுகொண்டிருப்பார். கால் வலிக்குமே, இருக்கச் சொல்லலாமே?

**நீதி:**— ஆம். விருத்தரே! உட்காரும்.

**கிழவர்:**— அப்பா, நம்பி! உனக்காக எவ்வளவு பாடு படுவது அப்பா! இரண்டொரு வார்த்தையில் அடங்கிப் போமே. (ஆசனத்தில் அமருதல்).

**நீதி:**— கணக்கப்பிள்ளைவாள்! நம்பியாரூரருடைய பாட்டனார் கையெழுத்து ஏதேனும் நம்மிடத்து உண்டா?

**கணக்க:**— உண்டு, பார்க்கவேண்டும.

**நீதி:**— பார்த்து, எடுத்துக்கொண்டு வாரும்.

**கணக்க:**- (ஏகி ஓலைக்கட்டுடன் வந்து அக் கட்டைப் பிரித்துப் பார்த்து) இதோ இருக்கின்றது.

**நீதி:**— இதையும் அதையும் ஒத்துப் பாரும், (ஓலை கொடுத்தல்)

**கணக்க:**—(ஓலை பெற்று நிதானித்துப்பார்த்து) ஒத்திருக்கிறது. ஒரு வித்தியாசமும் இல்லை. (ஓலையையும் கட்டையும்கொடுத்தல்)

**நீதி:**—(ஏடுகளை உற்றுநோக்கி) ஆம், ஒத்தே யிருக்கிறது. ஒரு வித்தியாசமும் இல்லை. தார்க்கிககுருக்களவாள்! நீர் பாரும். (ஓலை கொடுத்தல்.)

**தார்க்:**— (கவனித்துப்பார்த்து) பார்ப்பது, என்ன! சரியாகத்தான் இருக்கிறது. சாந்தலிங்க குருக்களவாள்! இந்தாரும், நீர்பாரும். (ஓலை கொடுத்தல்.)

**சாந்த:**—(வாங்கிப் பார்த்துச் சந்நியாசியை நோக்கி) ஸ்வாமிகளே! இந்தாரும், பார்ப்பானேன்! நன்றாய்த் தெரிகின்றதே! (ஓலை கொடுத்தல்.)

**சந்நி:**—(பெற்றுச்சற்றுக் கவனித்து) சபாலங்கார குருக்களே! சரி. நீர்தான் பாரும்! (ஓலை கொடுத்தல்.)

**சபா:**—(ஓலைகளை உற்று நோக்கிப் பார்த்து) பார்த்தேன்! பார்க்க வேண்டியது என்ன இதில்! ஒன்று மில்லையே! நீர்தான் பாரும் தத்வராயகுருக்களவாள! (ஓலைகொடுத்தல்.)

**தத்வ:**—(சீட்டைப் பெற்றுப்பார்த்து) யாவரும் பார்த்து விட்டார்கள். எனக்குத்தானா மாறுபடப் போகின்றது. அஃதில்லை! இனி,

தீர்ப்பைத்தான் சொல்லவேண்டும்! (நீதிமார்க்கரிடம் ஓலை கொடுத்தல்.)

**நீதி:**—(பெற்று யாவரையும் நோக்கி) இன்னுமென்ன! தீர்ப்பைச் சொல்லி விடுவோமே!

**சாந்த:**—சொல்லிவிடுங்கள்.

**நீதி:**—சாந்தலிங்க குருக்களவாள்! உமது அபிப்பிராயத்தை விளக்க வேண்டும்.

**சாந்த:**—பட்டப்பகல் வெட்டவெளிச்சமாய் விளங்குகின்றதே இவ் வழக்கு. இதில் சம்சயமும் ஒன்றா!

**நீதி:**—சபாலங்கார குருக்களே! உம்முடைய அபிப்பிராயமோ?

**சபா:**—யாவும் சரியே. ஆயினும், அந்தணரும் அடிமையாவது உண்டோ என்பதுதான் ஓர் ஆசங்கை!

**நீதி:**—தார்க்கிக குருக்களே! நீரோ?

**தார்க்கீ:**—ஐயா! விஷயம் சரியாகத்தான் இருக்கிறது. ஆனால், என் யுக்தியை எவ்வளவுசெலுத்தினாலும் உண்மைதான் எட்டவில்லை. தீர்ப்பைச் சொல்லிவிடுங்கள்.

**நீதி:**—தத்வராயகுருக்களே! நீர் என்ன சொல்லுகிறீர்?

**தத்வ:**—நீதிமார்க்க குருக்களவாள்! யான் இதனை யோசிக்குங்கால் பகவந்மாயை எனவே தோன்றுகிறது! அடிமை அடிமைதான், ஆக்ஷேபமில்லை!

**நீதி:**—(சந்நியாசியை நோக்கி) ஸ்வாமிகளே! உமக்கு என்ன விளங்குகிறதோ?

**சந்நி:**—எனக்கா! என்னையா கேட்கிறீர்! நீர் தான் எல்லாவற்றையும் விசாரித்து விட்டீர். எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஆனால், அதோ அந்தச் சபாலங்கார குருக்கள் சொல்லியபடி அந்தணர் அடிமையாகும் விஷயத்தைக்குறித்துத்தான் எனக்கும்யோசனை.

**நீதி:**—சரிதான், யாவும் முடிந்தன. வ்ருத்த ப்ராஹ்மணரே! நம்பியாரூரரே! இனி, தீர்ப்பு சொல்லப்படும்.

**நம்பி:**—அப்படியே செய்யுங்கள்.

**கிழவர்:**—செய்யுங்கள் குருக்கள்மார்களே! (எழுந்து நிற்குதல்.)

நீதி:—(தீர்ப்பு எழுதி யாவரையும்நோக்கி) இதுதான் பஞ்சாயத்தார் களின் தீர்ப்பு. கேளுங்கள்.

நம்பி:—(ஒருபுறம் நின்று பஞ்சாயத்தாரைப் பார்த்து, தீர்ப்பின்மீது செவிசாய்த்து நிற்குதல்)

கிழவர்:—(தண்டுன்றி, தலைகுனிந்து அசைந்து, சபையாரையும் நம்பி யாரூரரையும் பார்த்துக்கொண்டு, தள்ளாடியிருத்தல்)

## தீர்ப்பு

## திருவெண்ணெய்நல்லூர் பிச்சுகுருக்கள்

திருநாவலூர்

## நம்பியாரூரர்மீது கொண்டுவந்த

வழக்கின் தீர்ப்பு.

"ஒரு வழக்கைச் சாதிக்கவேண்டுமானால் திரிவித நிரூப ணங்கள் வேண்டும், அவைகள், 1 - ஆவது அனுபவம். 2 - ஆவது லிகிதம். 3 - ஆவது சாக்ஷி."

2. "இம்மூவகை நிரூபணங்களால் ஒருவழக்கைச்சாதிப் பதற்குச் சக்தியில்லாவிடில், அதமபக்ஷம் இம்மூன்றினுள் ஏதாவது ஒன்று இரண்டைக் கொண்டாயினும் சாதிப்பது தான் நியாயம்."

3 "திருவெண்ணெய்நல்லூர் பிச்சு குருக்கள் திருநாவ லூர் நம்பியாரூரர்மீது கொண்டுவந்த இந்த அடிமைவழக்கை ஏறக்குறைய அனுபவ லிகித சாக்ஷிகளாகிய மூன்றினையுங் கொண்டு சாதித்து விட்டார்." இது உத்தம பக்ஷம்.

4. (a) "இப்பெரியவரை அறியமாட்டேன் என்றுசாதித்த நம்பியாரூரர் புத்தூரில் மணப்பந்தலில் பித்தா என்று இப் பெரியவரின் பெயரையே யிட்டு, அழைத்ததனால் பெரியவரா கிய பிச்சுகுருக்கள் அனுபவ மூலமாய் வென்றார்."

(b) "அடிமை யோலையைக் காட்டி விகித மூலமாய் ஜெயித்தார்."

(c) "சாக்ஷிகளையுங் கொண்டு ரூபித்தார்."

ஆகையால்,

"புத்தூரில் மணப்பந்தலில் கிழித்தெறியப்பட்ட ஓலை அடிமையோலை யென்றே நிச்சயிக்கப்பட்டது."

**5.** "மேற்போந்த திரிவித நிரூபணங்களால்" 'அந்தணர் அடிமையாவது அடாதது' என்னும் வாக்கியமானது அடியோடு தள்ளப்பட்டது. நம்பியாரூரர் பிச்சகுருக்களுக்கு அடிமையென்பது தடையின்றிக் கொள்ளப்பட்டது."

**6.** "இனி, நம்பியாரூரர் தப்புவதற்கோ வழி யில்லை: பிச்சகுருக்களுக்குத் தோற்றுப்போயினர். ஆனபடியால், நம்பியாரூரர் பிச்சகுருக்களுக்கு அடிமைப்பட்டு வழித்தொண்டு செய்வதே கடன்."



திருவெண்ணெய் நல்லூர
சாலிவாகன *சகாப்தம் கக௬
ஆனிமீ உசு

நம்பி:—சபையோர்களே! ஆதிசைவர்களே! அடிமை என்றால் மனுஷ்யனுக்கு மனுஷ்யன் அடிமையாவது!

விருத்தம்.

"கண்ணுதலாலயநோக்குங் கண்களேகண்கள்!
கழைக்கண்டன்கோயில்புகுங் கால்களேகால்கள்!

*காலம் உள்ளபடியே கிடைக்காவிடினும், இங்ஙனம் அமைத்தமை நாடகப்போக்கின் அவசரம் பற்றி.

பெண்ணென நுபாசனைப்பணியுந் தலைகளேதலைகள்!
பிஞ்ஞகனைப்பூசிக்குங் கைகளேகைகள்!
பண்ணாவன் றன்சீர்பாடும் நன்னாவேநன்னா!
பரன்சரிதையேகேட்கப் படுஞ்செவியேசெவிகள்!
அண்ணல்பொலங்கழல் நினைக்கும் நெஞ்சமேநெஞ்சம்!
அவனடிக்கீழ்அடிமைபுகுர் அடிமையேஅடிமை!"

அடிமைப்பட்டால், பரிவகீநாதனுக்குப்பாமேஸ்வரனுக்கன்றோ அடிமைப்பட் டிருக்கவேண்டும். மானிடனுக்கு அடிமையாவது மடமையன்றோ? நான்மறை நன்குணர்ந்த சீலர்காள்! விதிமுறை இதுவேயாயின், இதற்கு உடன்படாதிருத்தல் கூடுமோ? உடன் பட்டுத்தான் தீரவேண்டும்!

தாரிநீ:—ஐயா, பிச்சுகுருக்களே! தொடுத்த வழக்கைச் சாதித்து விட்டீரே! இருந்தால் உம்மைப்போலன்றோ இருக்கவேண்டும்! கிழவர்களுள் வைரம்பெற்ற கிழவரையா நீர்!

கிழவர்:—(தலையசைத்து) இருக்கலாம்.

நீதி:- இந்தாரும், நீர் கொடுத்த அடிமையோலை. (ஓலைகொடுத்தல்.)

கிழவர்: —(தள்ளாடிநடந்து பெறுதல்)

நீதி:—ஐயா, விருத்தரே! உம்மைக் கேட்பது ஒரு விஷய முளது.

கிழவர்:—என்ன கேட்கிறீரோ ஐயா! வழக்குத்தான் தீர்ந்து விட்டதே. இன்னுமென்ன ஐயா!

நீதி:—உமது பெயரை திருவெண்ணெய்நல்லூர் பித்தனென்று உமது அடிமைச்சீட்டில் கிட்டியிருந்ததே, உம்மூர் இவ்வூரானால், இவ்வூரில் நீர் எத்தனை காலமாக உள்ளவர்? உமது வீடு எங்கே? உமக்குப் புத்திரபாக்கியம் உண்டா?

கிழவர்:—(நகைத்து) என் ஊரா? என் ஊரையா கேட்கிறீர்? இந்தத் திருவெண்ணெய் நல்லூரே. இவ்வூரில் யான் தலைமுறை தலை முறையாக வுள்ளவன். எனக்குப் புத்திரபாக்கியம் ஒன்றுதானா, சகல பாக்கியங்களும் உண்டு.

தாரிநீ:—இருக்கட்டும், பெரியவரே! எதோ உம்முடைய வீட்டைக் காட்டும்? பார்ப்போம்,

**கிழவர்:**— காட்டுகிறேன், குருக்கள்மார்களே. நம்பியாரூரா, உனக்குத் தெரியாதா என்வீடு!

சங்கர சங்கர சம்பு-சிவ —,

" என்றும் அழியுமிக் காயம் - இத்தை
எதுக்கு மெய்யென் றிருந்தீர் உலகீர்
ஒன்றும் அறியாத நீரோ - யமன்
ஓலைவந் தாற்சொல உத்தர முண்டோ."

சங்கர சங்கர சம்பு.

ஐயா, சபையோர்களே! தர்க்கசாஸ்திரங்களையும், தத்வசாஸ்திரங்களையும், ஞானசாஸ்திரங்களையும் பொழுதுபோவது தெரியாமல் பேசிப்பேசி, வாய்வம்பு அளப்பதில் வல்லவராய் நிற்கிறீர்கள். உலக விஷயத்தில் ஒருவர்க்கொருவர் உன்னைப்பிடி என்னைப்பிடி என்கிறீர்கள். இவ்வூரிலேயே நெடுநாளாகக் குடியிருக்கும் என்னை அறிய மாட்டேன் என்கிறீர்களே! குருக்கள்மார்களே, எழுந்து வாருங்கள்! வீட்டைக் காட்டுகிறேன். நம்பியாரூரா! புறப்படு. உனக்காகத்தானே அப்பா இவ்வளவு பாடு. (கிழவரும் நம்பியாரூரரும் ஏகுதல்)

**நீதி:**—குருக்கள்மார்களே! வாருங்கள் நாமும் போவோம். அப்பெரியவர் வீட்டைப் பார்க்கலாம்.

(யாவரும் ஏகுதல்)



# மூன்றாங்களம்.

இடம்: திருவருட்டுறை கோயில்
காலம்: மாலை.
பாத்திரம்: கிழவர்.

சூத்திரதாரர்:—இப்பொழுது, கிழவர் நம்பியாரூரனை யும் பஞ்சாயத்தார்களையும் தமது வீட்டைக் காட்டுவதாய் அழைத்துச் சென்று, அவ்வூரிலுள்ள திருவருட்டுறை கோயிலுட் புகுந்து மறைந்தருள, நம்பியாரூர் திகைத்துத் தெளிந்து, பின் அன்பின் வயப்பட்டு நிற்குதல்.

கிழவர்:—(திருவருட்டுறை கோயில்வாயிலையடைந்து) தம்பீ, நம்பியாரூரா! பார்த்தனையா! (சுட்டிக்காட்டி) இதுதான் என் வீடு. பெரியோர்களே! குருக்கள்மார்களே! யாவரும் பாருங்கள்! இதோ என் வீடு, பார்த்தீர்களா! (உட்புகுந்து மறைதல்)

நீதி:—நம்பிகளே! பெரியவர் எங்கே! பெரியவர் எங்கே!!

நம்பி:—வீட்டைக் காட்டுகிறேனென்று ஆலயத்தைக் காட்டினரே, என்ன ஆசசரியம்! ஒவ்வொன்றும் ஆச்சரியமாக வல்லவோ இருக்கின்றது! உள்ளே சென்று கூப்பிடலாமா? (உட்புகுந்து) ஐயா, வ்ருத்த ப்ராஹ்மணரே! வயோதிகரே! ப்ராஹ்மனோத்தமரே! என்னை அடிமைகொண்டவரே! ஆதிசைவரே! யாண்டுளீர்? என்ன, வீடென்று சொல்லிக் கோயிலுக்குட் புகுந்தீரே! (வெளியில்வந்து தனக்குள்) என்ன, சந்தேகத்திற்கு இடமாயிருக்கிறதே! ஹே ஜெகதீசா! நின் திருக்கூத்தோ! திருவிளையாடல் செய்கின்றாயோ!

பரமசிவன்:—(விடைமேல் எழுந்தருளி) ஆம், ஆலாலசுந்தரா! நீ முன்னே நமக்கு வழித்தொண்டனாயிருந்தாய். நம் ஆணையால் பூமியிலே பிறந்தாய். இப்போது சம்சார பந்தமானது உன்னைத் தொடாதபடி நாமே வலியவந்து தடுத்து ஆட்கொண்டோம்.

நம்பி:—(வானத்தை நோக்கி, உரத்தகுரலுடன்) ஹே சங்கரா! நின் திருக்கூத்தா இது! ஆ! மாயம் தெரியாமல் மதிமோசம் போனேனே! எம்பெருமானுக்கு என்மீது கருணை யிருந்தவா

றென்னே! என்னே!! ஹே ஜெகதீசா! சம்போ! சந்த்ர சேகரா! கங்காதரா! காளகண்டா! கைலாசபதீ! கருணாநிதே! நின்கருணையை என்னென்னக்கூறுகேன்! என்னென்னக்கூறுகேன்!!

ஆசிரியப்பா.

"—நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே! தேனா ரமுதே! சிவபுரனே!
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேரா அதுநின்ற பெருங்கருணைப் பேராறே!
ஆரா அமுதே! அளவிலாப் பெம்மானே—"

இந் நாயேன்பொருட்டு மானிடச்சட்டைதாங்கி வயோதிக வுருவமடைந்து, குடையேந்தித், தண்டூன்றித், தள்ளாடித் தள்ளாடி அடியேன் இருக்கும் குடிசைக்குட் புகுந்து ஆவணத்தைக் காட்டி அடியேனை வலிய ஆட்கொள்ளவந்த கருணையங்கடலே! நின்னை என்னென்னக்கூறுகேன்!—என்ன பேறு பெற்றேன்! என்ன பேறு பெற்றேன்!! கருணையை வாரி யிறைக்கும் வள்ளலே! நீர் கொண்ட திருவுருவத்தைத் தரிசித்தபொழுதும், நும்மிடத்தினின்றும் தோன்றிய அமிர்த வாசகத்தைக் கேட்ட பொழுதும் சம்சயப்பட்டேன். அது சரியாய் விட்டதே!

விருத்தம்.

"ஊன்செய்த பிறையணியுந் தண்டலையார் கருணைசெய்து கோடி கோடி
யான்செய்த வினையகற்றி நன்மைசெய்தா லுபகாரம் என்றே னுண்டோ?
ஊன்செய்த வுயிர்வளரத் தவந்தானம் நடந்தேற உதவி யாக
வான்செய்த நன்றிக்கு வையகமென் செய்யுமதை மறந்தி டாதே?"

கருணையையே திருவுருவாகக் கொண்ட காருண்யமூர்த்தி! தேவரீர், அடியேனுக்குச் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரம் என்னசெய்யப் போகிறேன்! வான்செய்த நன்றிக்கு வையகம் என் செய்யும்?

**பரமசிவன்:**—அப்பா, ஆலாலசுந்தரா! நீ என்னுடன் வலிந்து பேசினமையால் வன்றொண்டர் என்னும் திருநாமம் பெற்றாய். நமக்கு அன்பினோடு செய்யத்தக்க அர்ச்சனையாவது பாட்டேயாகும். ஆதலால், நம்மீது தமிழ்ப்பாக்களைப் பாடக்கடவாய்.

**நம்பி:**—ஆ! பரமசிவனுக்கு என்மீதிருந்த பரம காருண்யமே காருண்யம். நாய்க்குத் தவிசிட்டு வைத்ததுபோலன்றோ இருக்கிறது நான்பெற்ற பேறு!

விருத்தம்.

"பாங்குளநாம் தெரிதுமெனத் துணிந்துகோடிப்
பழமறைகள் தனித்தனியே பாடிப்பாடி
ஈங்குளதென் றங்குளதென் றேடியோடி
இளைத்திளைத்துத் தொடர்ந்துதொடர்ந் தெட்டுந்தோறும்
வாங்குபர வெளிமுழுது நீண்டுநீண்டு
மறைந்துமறைந் தொளிக்கின்ற மணியே! எங்கும்
தேங்குபர மானந்தவெள்ளமே! சச்
சிதானந்த அருட்சிவமே! தேவ தேவே!"

மஹாதேவா! மஹாபரபு! அனந்த கோடிகோடி வேதங்களும் தொடர்ந்து தொடர்ந்து நின்னை எட்டமுடியாமல் இளைத்து நிற்கின்றனவே. அத்தகைய அருமையும் பெருமையும் பொருந்திய உமது திருவுருவம் என் கரங்களினால் எட்டப்பட்டுநின்றதே! ஆ! என்ன கருணை! என்னகருணை!! எனக்கும் உனக்கும் இருந்த பொருத்தம் என்னேயோ!

(காம்போதி)

பல்லவி.

"எனக்கு முனக்கு மிசைந்த பொருத்த மென்ன பொருத்தமோ!
இந்தப் பொருத்த முலகிற் பிறருக் கெய்தும் பொருத்தமோ!

சரணம்.

எண்ணுந் தோறு மெண்ணுந் தோறு மென்னு ளினிக்குதே
இறைவ நின்னைப் பாட நாவி லமுதஞ் சனிக்குதே
கண்ணுங் கருத்து நின்பா லன்றிப் பிறர்பாற் செல்லுமோ
கண்டே னுன்னை யினிமே லென்னை மாயை வெல்லுமோ!"
(எனக்கும்)

விருத்தம்.

வேதிய னாகி யென்னை வழக்கினால் வெல்ல வந்த
ஊதிய மறியா தேனுக் குணர்வுதந் துய்யக்கொண்ட
கோதிலா அமுதே! இன்றுன் குணப்பெருங் கடலை நாயேன்
யாதினை யறிந்தென் சொல்லிப் பாடுகேன் ஆடு கேனே!

ஜெகதீசா! க்ருபாநிதே! ப்ரஹ்மாதி தேவர்கள் யாவரும் தேவரீருக்குத் தொண்டர்களாயிருக்க, இந்நாயேன்பொருட்டு ப்ராஹ்மணவடிவங்கொண்டு அடியேனை வழக்கினால் வெல்ல எழுந்தருளி வந்தமையை அறியாத சிறியேனுக்குப் பழைய அறிவைத்தந்து உலகவாழ்க்கையிலே மயங்காமல் உய்யும்படி செய்தருளிய கடவுளே! அடியேன் தேவரீருடைய அனந்த கல்யாணகுணங்களில் எதனையறிவேன், என் சொல்லிப் பாடுகேன், பணித்தருள்வீராக.

பரமசிவன்:—அப்பா, ஆலாலசுந்தரா! நீ முன்னே என்னைப் 'பித்தா' என்று அழைத்தபடியே அதனை முதலடியாக வைத்துப் பாடக் கடவாய்.

நம்பி:—(கண்களைமூடிச் சும்மாவிருந்து)

(பண்-இந்தளம்.)
திருச்சிற்றம்பலம்.

பித்தா! பிறைசூடீ! பெருமானே! யருளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அத்தா! வுனக் காளாயினி யல்லேனென லாமே!

* * * * *

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையாற்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே!

திருச்சிற்றம்பலம்.

பரமசிவன்:—ஆலாலசுந்தரா! வன்றொண்டா! நீ இன்னும் நம்முடைய புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடக்கடவாய்.

நம்பி:—(கண்களைமூடிக் கைகூப்பி நிற்குதல்.)

நீதி:—சாந்தலிங்க குருக்களே! ஸ்வாமிகளே! குருக்கள்மார்களே! என்ன ஆச்சரியம் நேர்ந்தது பார்த்தீர்களா! மின்னலைப்போல மறைந்தனரே!

(யாவரும் திகைத்துத்தெளிந்து நம்பியாரூரரைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து நிற்குதல்.)

நீதி:—(நம்பியாரூரரை நோக்கிக் கைகூப்பி) ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளே! தேவரீரது அருமையும் பெருமையும் தெரியாமல் சடையனார் புத்திரர் சாதாரணமனிதர் எனவே மதித்திருந்தோமே. இசைஞானியார் பெற்றெடுத்த செல்வமே! கருவிலே திருவுடைய கண்மணியே! பரமாசாரியமூர்த்திகளே! ஆதிசைவ குலதீபமே! அடியேங்களை ஆளவந்த தெய்வமே! தேவரீரது திருவருளால் என்ன பாக்கியத்தைப் பெற்றோம்! என்ன பாக்கியத்தைப்பெற்றோம்!! இதுகாறும் அந்தக்கருணைரூபம் எங்கள் அருகில் நெருங்கியிருந்தும் தாமரையைச் சூழ்ந்துகிடக்கும் தவளைகளானோமே! எங்கள்குலதெய்வமே! சிவபிரான் தேவரீரை ஆட்கொண்டனர். தேவரீர் எங்களை, ஆட்கொள்ளுங்கள் ஸ்வாமி! (யாவரும் நம்பியாரூரரைப் பணிதல்.)

நம்பி:—(திருக்கோயிலைப்பணிந்து எழுந்து குருக்கள்மார்களை நோக்கி) வேதவேதியர்களே! முப்பொழுதும் திருமேனி தீண்டும் முன்னோர்களே! நாம் நம் திருநாவலூரப்பிரானை வணங்கித் துதிப்போம், வாருங்கள்!

யாவரும்:—அப்படியே வருகிறோம், ஸ்வாமிகளே!

நம்பி:—நம:-பார்வதீ பதயே. } (மும்முறை)
யாவரும்:—ஹர ஹர மஹா தேவ. }

நம்பி:—(கரதாளத்தோடு யாவருடனும் திருநாவலூருக்கு ஏகுதல்.)

மஹாதேவ தேவ தேவ மஹா

முற்றிற்று.

---

# பின்னுரை.

சூத்திரதாரர்:—நடந்த கதையின் தொடர்ச்சி:—பரமசிவனால் வலிய வந்து ஆவணங்காட்டி வாதாடி வழக்குரைத்து ஆட்கொள்ளப் பட்ட ஸ்ரீசுந்தரமூர்த்தி ஸ்வாமிகள திருவெண்ணெய் நல்லூரிலிருந்து திருநாவலூர், முதலிய திவ்வியக்ஷேத்திரங்களுக்குச்சென்று, தேவாரப் பதிகங்களைப்பாடி அதிக அற்புதங்களைச் செய்தனர். முடிவில், திரு வஞ்சைக்களம் என்னும் திவ்விய க்ஷேத்திரத்திற்கு எழுந்தருளி அங் கிருக்க, ப்ரஹ்மாதி தேவர்களால் உபசரிக்கப்பெற்று வெள்ளையானை யின்மீது ஆரோகணித்து ஸ்ரீ கைலாசத்திற்கு எழுந்தருளி, பரம சிவனுடைய திருவடிகளை வணங்கித் துதித்து, முன்னிருந்தபடியே, ஆலாலசுந்தரராகித் திருத்தொண்டு செய்து கொண்டிருப்பவராயினர். கல்யாணப்பெண்ணாகிய புத்தூர் சடங்கவி சிவாசாரியருடைய புத்திரி யார், தமக்கென நாயகராக நியமித்து வைத்திருந்த ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளையே சதா தியானம் செய்துகொண்டிருந்து சிவபதம் அடைந்தனர். எடுத்துக்கொண்ட கதைக்கு, முன்னும்பின்னும் உள்ள தொடர்ச்சிகள் சுருக்கமாகக்கூறி முடிக்கப்பெற்றன.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்.

